## 69. பழனி வாணியர் செப்பேடு

செ.ராசு, ஈரோடு

இடம் : பழனி இராமசாமிப் பண்டாரம் இல்லத்தில் திருமதி இசை அவர்கள் வசம் இச்செப்பேடு உள்ளது.

காலம் : கலியுகம் 4416 (பொ.ஆ.1315) சோபகிருச, தை, 25 (பூசம்) பொருந்தி வரவில்லை. 17-ஆம் நூற்றாண்டாகலாம்.

செய்தி : வாணியர் அனைவரும் பழனியில் கூடிப் பழனியாண்டவரின் அதிகாலைப் பூசைக்குத் திருமஞ்சனம், சந்தனம், வில்வார்ச்சனைக்கு செவந்தி பண்டாரம் மூலம் அளிக்க பல்வேறு வகையில் அளித்த பணக்கொடை கூறப்படுகிறது.

செப்பேட்டின் தொடக்கத்தில் நடுநாயமாகத் தண்டாயுதபாணி, வலப்புறம் கைலாசநாதர், விநாயகர், இடப்புறம் பெரிய நாயகியம்மை சிறு புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளனர். அவரவர் வாகனமும் பொறிக்கப்பட்டுள்ளது. இடப்புற இறுதியில் எண்ணெய் ஆட்டும் செக்கு உருவம் உள்ளது.

தண்டாயுதபாணி அருகில் கட்டளையை நிறைவேற்றும் செவந்தி பண்டாரம் உருவம் உள்ளது. அவர்களுக்கு கீழே மணி, தூபக்கால் உள்ளதால் அவருடைய பூசை உரிமை காட்டப்பட்டுள்ளது. திருமலை நாயக்கர் தளபதி இராமப்பய்யன் காலத்தில்தான் பூசை செய்யும் பண்டாரம், பாணிபாத்திர உடையார் நீக்கப்பட்டு சிவாச்சாரியர் நியமிக்கப்பட்டனர். எனவே, இக்கொடை அதற்கு முன்னர் அளிக்கப்பட்டுள்ளது.

தொடக்கத்தில் ஐந்து பாடல்கள் உள்ளன. இடையில் உள்ள மூன்று பாடல்கள் முருகன் புகழ் பாடுகின்றன. முருகனது பல புகழ் மொழிகள் கூறப்பட்டுள்ளன. வாணியர் தோற்றம், அவர்கள் பெற்ற விருதுகள், பெருமை சிறப்புச் கூறப்படுவதுடன் ஆயிரத் தலைவரான வாணியரின் ஆயிரம் பட்டப் பெயர்களும் செப்பேட்டில் கூறப்பட்டுள்ளன. வரிகள் 141 - 219இல் கொடுக்கப்பட்டுள்ள பட்டப் பெயர்கள் இவர்களை இடைக் காலத்திலிருந்த திசை ஆயிரத்து அய்நூற்றுவர் வணிகக் குழு போன்ற வணிகக் குழுக்களோடு தொடர்புபடுத்தும்படியாக உள்ளன.

செப்பேடு 48 செ.மீ. நீளமும் 29 செ.மீ. அகலமும் 3 கிலோ 370 கிராம் எடையும் உடையது.

1. வைய நீடுக மாமழை மன்னுக மெய் விரும்பிய அன்பர் விளங்குக சைய்வ நன்னெறி தான்தழைத்

2. தோங்குக தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே கருணைபொழி திருமுகங்க ளாறும் வாழி கனக

3. மலர்ப் பன்னிருகை வேலும் வாழி இருசரண மென்றலைமேல் நாளுமோங்க யிந்துரவிக் கப்பாலும்

4. இனிது வாழி அருள்பரவி அமரர்சிறை மீட்டே யாண்ட ஆறிரண்டு திருநயனத் தழகும் வாழி மருவணியும் பை

5. ங்கடப்பந் தார்மார் வாழி மயில்பரி சேவல்கொடியும் வாழி அடைந்தவர் துணைவா வாழி அடையலர்க் கரியாய்

6. வாழி மடந்தைதன் மைந்தாவாழி மாதவன் மருகா வாழி திடம்புனை வேலோன் வாழி தேவரா ருயிரே வாழி

7. படர்ந்தபேர்ரசுரர் கூற்றாம் பரமனே வாழி வாழி நன்னெறி முகமும் வாழி நல்லென முடியும் வாழி பன்னிரு கரமும் வாழி பாத

8. பங் கயமும் வாழி கன்னிமார் எழுவர் வாழி கதிர்மதிப் பழனி வாழி என்னிரு வினையும் தீர்;த்த ஏழைபங் காளா வாழி

9. மலர்தலை உலகம் தாங்கும் மணிமுடிச் சேரர் என்னும் நிலைத்தழு வறுநூற்றின் மேல் நிகழுமைம்பான் த

10. லைசெறி பருவந் தன்னில் தனிநெடுங் கதிர்வேல் அண்ணல் நலனுறு பழனி மூதூர் பெருமையை நவில லுற்றேன்.

11. ஸ்ரீ புவன தகன பரமேசுபரன் அகிலாண்ட கோடி விருமாண்ட நாயகன் ஆதியுமைபாகன் அத்தநாரீசுபரன் பெற்ற முருகேச

12 னாம் அமரர் சிறைமீட்ட தேவர்கள் தேவன் தெய்வலோக நாயகன் கோகனகனைச் சிரசின்மீதில் குட்டிக் குடுமியை நெ

13. ட்டை போக்கிக் கோல விருமபதங் கொடுத்த குமார கெம்பீரன் கொக்கராவரையாளி கொற்ற ராகுத்தன் வக்கிரமிடும் அசு

14 ரேசர் வட்ட நீரொப்ப உக்கிர மயிலேறிவரும் உத்தண்ட தீரன் பக்கரைப் பகட்டரக்கர் பட்டிடப் படைக்களத்தில் கொ

15. க்கரித் துடல் கிழித்த குக்குடக் கொடிக் குமாரன் கூளி கொட்டக் கூகைபிசாசுகள் தோக்க நிற்க தாளமொத்த சூர

16. ன் மாள்வதற்கு வடவை யனல் போலெழுந்து வடிவேலெடுத்த சேவுக தீரன் மாகமுற வோங்கி வளர்ந்திட்ட மா

17. கொக்கை நாமமுற வெட்டித் தேவர் சிறை மீட்ட தேவ சேனாபதி தேவர்கள் தேவன் தெய்வலோக நாயகன் சிறைக

18. ளில் எண்வரைப் பரிய வீசிடும் மரகத கலாப மயூர வாகனன் நாரதர் வளர்த்த வேள்வியில் பிறந்த திருகு ப

19 ரி கொட்டுத் தகரில் வரும் குமரோன் தென்முனி அகஸ்தியற்குச் செந்தமிழ்ப் பனுவலும் ஆறெழுத்துண்மை

20 யும் ஓதிவைத்தவன் மால் மருகேசன் வாணிக்கு வாக்கு வரமும் கொடுத்தவன் மலைமகள்க் கின்பமு

21 ம் வாழ்வும் கொடுத்தவன் தேனுவுக்கு இன்பம் சிறப்பாய் அளித்தவன் சூரியன் பதவி தோன்ற அளித்

22. தவன் நற்கீரனைச் சிறை நலம் பெற விடுத்தவன் பாண்டியன் சுரனும் பருங்கூனும் தவிள்த்தவன் பேடி

23. யைப் பேசி வைத்தவன் பிரபல வேலோன் அசுரர் குலைகாரன் அமராபதி காவலன் தோடு செறி காதின

24. ன் தோகை மயில் வாகனன் சீதரன் திருமருகன் சிவசுப்பிரமணியன் சண்டப்பிரசண்டன் வண்டர்க்

25. கொரு மிண்டன் ஆறாறு நூருரு அஷ்ட்டமங்கலம் ஆவிநன்குடி பழனிக்கு அதிபன் இடும்பன்மலை

26. யென மலை யீராறு பள்ளி யிலங்கும் வைகாவூர் நாட்டுக்கு அதிபன் பன்றிமலை பூம்பறை பழனிமலை கா

27. வலன் பன்றி மலையினும் பல பூதரிடத்தினும் தேன்பொழி சோலை சிவகிரியினில் உறைவோன் பத்திப் பிரியன்

28. பத்தர் வற்சலன் பார்வதி புத்திரன் மாதிரை ஏரியில் மன்னிய குளக்கரைப் பாதிரையில் பிறந்து பலவுயிர்க்

29. கிரங்கும் தந்தி முகன்தன் தனக்கு நல்லிளையோன் சிவசுத கணபதி விக்கின விநாயகன் தெய்வ சகோதரன்

30. யெல்லாத் தேவருக்கும் வல்லவன் ஸ்ரீவீரபழனிமலை வேலாயுத சுவாமியார் திருவுளப்படிக்கு வீ

31. ரபாகுதேவர் அருளிப் பாடல் இப்படி உமாமயேசுபரியுடனே சூலபாணியாகிய பரமசிவன் தற்க

32. மாக நிருத்த தாண்டவஞ்செய்து ஆற்றும் ஆக்கியானமாகிய பகவானுடைய மூலாதாரண மாகிய சுப்பிரமணியர் விருமா

33. சாரிய ரூபமாக சிவகிரியில் மேவியிருக்கின்ற தெண்டாயதக் கடவுளார் நிர்ணயமாவது அறியவும் சுபஸ்ரீ பதினெ

34. ண்பூமி நவகண்டமும் சூழ்ந்த நாவலம் பெருந்தீவு விசையநகரத்தில் பிரதாப ஈசுவர னாகிய வீரசிம்மாசனத்திலே எ

35. ழுந்தருளிய மகாராய ராணுவங்கள் சமஸ்தமும் பிருத்விராச்சியம் பண்ணிக் கொண்டு அருளாய்நின்ற

36. கலியுக சகார்த்தத்தில் 4416க்கு மேல் செல்லாநின்ற சோபகிருது வருஷம் தை மாதம் 25 வியாழ

37. க் கிழமை பவுர்ணமையும் பூச நட்சத்திரமும் சுபநாம யோகமும் பாலவாகரணமும் பெற்ற அமிர்த

38. யோக நாளில் ஸ்ரீவீரபழனிமலை வேலாயுத சுவாமியார் எழுந்தருளியிருக்கும் திருச்சன்னியதானத் தெ

39. ட்சண கைலாச சிவகிரிக்குச் சேர்ந்த வைகாவூர் நாட்டில் திருப்பழனி மாநகரில் செங்கோல் செய்யு

40. ஞ் சின்னோப நாயக்கரவர்கள் பாணிபாத்திர உடையார் பழனிக் கவுண்டரவர்கள் முதமையாக பரிகலந் தல

41. த்தாரெல்லாரும் கண்டறியத்தக்கதாக சாட்சி வைத்து எழுதிக் கொடுத்த தாம்புர சாசனப் பட்டயமாவது பழனி

42. மாநகரில் கயிலாசநாத சுவாமி சன்னதியும் பெரியநாயகியம்மன் சன்னதி முன்பாக யிருந்து சுப்பிரமணிய சுவாமி

43 யும் அம்மனும் ஆடம்பரமாக சிவகிரியில் திருவுலாவிற்கு எழுந்தருளி வருகுற வீதியில் ராசதானிக் கடைக்கு

44. தென்சிறகு வீதியிலே யிருக்கும் பண்டாரத்தினிடம் கட்டளையாகத் திருமஞ்சனம் மாலை வில்வார்ச்சனை சிவகி

45. ரியில் மேவியிருக்கும் விழா பூசையில் ஸ்ரீவீர பழனிமலை வேலாயுத சுவாமியாருக்கு தினசரி யித்தத் தருமம் நட

46. க்கும் படியாக ஐம்பத்தாறு தேசத்திலே யுண்டாகிய நகரம் ஆயிரத் தலைவரனைவோருக்கும் கெதி மோட்சம் பெற

47. வேண்டி தருமம் பரிபாலனஞ் செய்துவரத் தக்கதாக தாம்புர சாசனப் பட்டயம் வைசிய வாணுவர் ஆயிரத்

48. தலைவர் திருமஞ்சனமெடுக்கும் சிவந்திப் பண்டாரத்துக்குக் கொடுத்தது இந்தப் பண்டாரத்துக்கு நடக்கும் மரியாதியு

49. ஞ் செய்து வைத்த விபரம் நகரத்தார் இந்த நகரத்தாருக்கு பிறப்பு வளர்ப்பு விபரம் பராபரமாகிய ப

50. ரமேசுவரன் தராதலம் படைக்கத் தான் நினைந்தருளி மாயாவதாரனாகிய மகாவிஷ்ணுவை யும் தா

51. மரைப் பூவிலே யுறைந்திருக்கின்ற விருமதேவனையும் படைத்துப் பூமியும் பூலோகத்தையும் படைத்து

52 ப் விரும சத்திரிய வைசிய சூத்திரரிந்த நான்கு சாதி உண்டாக்கும் போது பிரும தேவனுடைய சிரசிலே பிறந்தவன் பிராமண

53. ன் தோளிலே பிறந்தவன் இராசாக்கள் துடையிலே பிறந்தவன் வைசியன் பாதத்தில் பிறந்தவன் சூத்திராள் இந்த

54. ப்படிக்கு நாலு சாதியுண்டாக்கிப் பூலோகத்திலே போய் வாழ்ந்துண்டு மகிழ்ச்சியடைந்திருப்பீர்க

55. ள்என்று திருவுளம் உத்தரவு செய்து அனுப்பும் போது மூன்று சாதியும் வந்துவிட்டார்கள் ஒரு சாதி வைசிய

56. ர் கோத்திரமான சாதியானது பூலோகத்துக்கு வராமலே கிட்கிந்தா பருவதத்திலே போயிருந்தார் அப்படியிருக்

57. க ஒருநாள் சுவாமியானவர் வாரீர் நாரதமகாமுனியே நீ பூலோகத்திலே போய் பூலோகத்துக்குள்ளே நடக்குகின்ற வ

58. ருத்தமானமெல்லாம் விசாரித்து வருவீர்களென்று திருவுளம்பற்ற அப்போது நாரதமகாமுனியும் பூலோகத்துக்கு வந்து

59. பார்த்து வைசியர் கோத்திரர் பூலோகத்திலே யில்லையென்று கண்டு வந்து பரமேசுபரனிடத்திலே தொழுது பணிந்து வா

60 ய்கூப்பிக் கையைக் கட்டிக் கொண்டு மெத்த அங்கிகாரத்துடன் சொன்னார் இந்தச் செய்தியை மகா ஈசுவரன் கேட்டு

61. வாராய் நாரத மகாமுனியே பூலோகத்திலே வைசிய கோத்திரமில்லை என்று சொன்னது கேட்டோம் ஆகையாலே அந்த

62. வைசிய கோத்திரர் எங்கேயிருந்தாலும் நீயே போய் அழைத்துக் கொண்டு வாவென்று திருவுளம் பற்றிய மாத்திரத்திலே

63 நாரத மகாமுனியானவன் பின்னும் பரமேசுவரன் பாதத்திலே வந்தனை வழிபாடாகத் தீர்க்க தெண்டம் பண்

64 ணிச் சுவாமி நான் போய் அழைக்கிறதற்கு மெத்தப் பயமாய் இருக்குதென்று சொல்லக் கேட்டு சுவாமி யோசினை செ

65 ய்து சரசுவதியம்மனை அழைத்துக் கொண்டு வாவென்று திருவுளம் பற்றின மாத்திரத்திலே நாரத ரிஷி சரசுவதி

66 யம்மனை அழைத்துக் கொண்டு வந்து சுவாமி முன்பதாக விட்டான் சரசுவதியம்மனானவள் சுவாமி யிடத்திலே அனுப்பி

67 வைத்துக் கொண்டு போனான் அந்த அம்மனானவள்; அங்கே தானே போர வேளையிலே வக்கு மகாரிஷியானவர் சிபதபஞ்

68. செய்து கொண்டு யோகநிஷ்டயிலே யிருக்கிறதைக் கண்டு இந்த வேளையிலே நாம் அவரிடத்திலே வார்த்தை

69. சொன்னமேயானால் முற்காலத்திலே மன்மதனைச் சபித்துப் போட்டவர் ஆனபடியினாலே யிப்ப நம்மையுங்கூடச் ச

70. பித்துப் போடுவாரென்று யோசனை பண்ணிக் கொண்டு சும்மா இருந்தார் அந்த அம்;மன் கைகளானது சும்மா யிருக்காம

71. லங்கே பொய்கைக் கரையிலே யிருக்கிற தெற்பைப்புல்லை பிடுங்கி முடிந்து கொண்டிருந்தது அந்த தெற்பைப் புல்

72 லை முடிய ஆயிரம் முடிச்சு ஆச்சுது இந்த வக்கு மகாமுனியானவர் தன்னுடைய சிபதப மகிமையினாலே செபித்துக் கொண்

73. டிருந்த மந்திரம் ஆயிரம் உருவேறின மாத்திரத்திலே கண்ணை விழித்துக் கொண்டு கமண்டலமும் எடுத்துக் கொண்டு வரு

74 கிறபோது அங்கே சரசுவதியம்மனைக் கண்டு இடம்புரி வலம்புரியாய் வலம்புரி இடம்புரியாய் சுத்திவந்து கைகூப்பி

75. யனேக வந்தனை வழிபாடாகத் தோத்திரம் செய்து பணிந்து எந்தாயே எங்கே எழுந்தருள வந்தது சொல்லு

76. வீரென்று கேட்க சரசுவதியம்மன் அந்த ரிஷியினிடத்திலே திருவுளம் பற்றுகிறாள் கயிலாசத்திலே முப்பத்து

77. முக்கோடி தேவர்களும் நாற்பத் தெண்ணாயிரங் கோடி ரி\யீயீசுபரர்களும் பிரம்மா விஷ்ணு ருத்திரர் சதாசிவன்

78. மயேசுபரன் தேவேந்திரன் முதலிய மகாதேவருங் கூடியிருந்து தேவரீரவர்களை அழைத்து வரச்சொல்

79. லி ஈசுவரன் எனக்குத் திருவுளம் பற்றினாரென்று சொல்லக் கேட்டு நீ வந்த காரியம் சரியே தாயே யிந்த தெற்பை

80. ப் புல்லைப் பிடுங்கி முடிந்த முடிச்சு கையிலே கொண்டு வந்த காரியம் ஏதென்று கேட்டார் அப்போது அடியாள்

81. வரப்படாநின்ற போது தேவரீர் சிவத்தியானத்தில் இருந்த போது இந்த வேளையில் நாம் வார்த்தை சொல்லலாகாது

82. என்று சும்மா இருந்தேன் என் கைகளானது சும்மா யிருக்காமல் தெற்பையை பிடுங்கி முடிந்ததென்றாள்

83. நல்லது உம்முடைய கைகளினாலே முடிந்த முடிச்சொன்றும் பழுது போகலாகாதே தாயே என்று அந்த ரிஷியா

84. னவர் தன்னுடைய கமண்டலத்திலே யிருக்கின்ற தீர்த்தத்தைப் பிரும தேவனை நினைந்து முடிச்சு மேலே தெளி

85. த்தார் அந்த முடிச்சுக்கு ஒரு பிள்ளையாக ஆயிரம் பிள்ளைகள் பிறந்தார்கள் இவர்கள் யாரை அய்யரென்று சொல்லுவாரென்று சர

பின் பக்கம்

86. சுபதியம்மன் கேட்டாள் வக்கும்மகாரிஷியானவர் சொல்கி

87. றாரவர்கள்தான் வாணிபர் என்று சொன்னார் ஆனாலவர்களுக்குத் தாயு

88. ந்தகப்பனும் ஆரையா சொல்லுவீரென்று கேட்டாள் அப்போது வக்கு மகாரி

89. ஷியானவர் சொல்கிறார் நான் விரும தேவனை நினைத்துக் கமண்டலத்திலே

90. யிருக்கும் சலத்தைத் தெளித்தபடியினாலே விரும தேவனே பிள்ளைகளுக்

91. குத் தகப்பனார் இந்த வங்காளப் பொய்கையிலே முளைத்தெழுந்திருக்கின்ற தெற்பையைப் பிடு

92. ங்கித் தாயே உம்முடைய கைகளானது முடிந்தபடியினாலே நீரே தாயாராகுமென்று சொன்னார் நல்லது யி

93. ந்த ஆயிரம் பேருக்குங் கலியாணஞ்செய்ய வேணுமே ஆயிரம் பெண்கள் எங்கே இருக்குறார்களய்யா சொல்

94. வீரென்று சரசுபதியம்மன் கேட்டாள் ஆயிரம் பெண்கள் ஒரு பெண்ணின் வயிற்றிலே பிறக்கிறது எங்கும் இல்லாத

95. படியினாலே யிந்த வங்காளப் பொய்கையில் இருக்கப்பட்டதொரு தாமரைப் பூவுக்கு ஆயிரம் இதழ் உண்டாயிருக்கிற தாமரை

96. ப்பூவை ரிஷியானவர் பிடிங்கித் தம்முடைய கமண்டலத்திலே யிருக்கும் சலத்தை தியானித்துத் தெளயீத்தார் அப்போதே இதழுக்கொரு பெண்களாக

97. ஆயிரம் பெண்கள் பிறந்தார்கள் முன்னிந்த ரிஷியானவர் தவசிலே இருந்தபோது அம்மன் கையிலேயிருந்த தெற்பைப் புல்லு முடி

98. ச்சிலே பிறந்த ஆயிரம் குமாரர்கட்கும் இரண்டாவதொரு தாமரைப் பூவிலே பிறந்த ஆயிரம் பெண்களையும் திருக்கலி

99. யாணஞ் செய்து வைத்துச் சந்திர சூரியருள்ளவரைக்கும் நிலைக்கத்தக்கதாக ஆயிரம் பட்டப் பெயர்களையும் பெற்றிருங்கோவென்று க

100. ட்டளையிட்டுப் பத்துக்கொரு சங்கீதமாக நூறு சங்கீதமும் கட்டளையிட்டுப் பின்பு பரமேசுரன் முன்பதாக ஆயிரம் வாணுவர் குடியு

101. ம் அழைத்துக் கொண்டு இருவரும் வந்தார்கள் பரமேசுரன் கண்டு மனமகிட்சியாய் ஒரு வைசியர் குடியையல்லோ பூ

102. லோகத்துக்கு அனுப்பிவைக்க நினைத்தோம் இப்ப ஒரு குடிக்கு ஆயிரம்குடி கொண்டு வந்தீர்கள் என்று மிகவும் சந்தோஷமுற்று

103. ஆயிரம் குடியானதே மெத்த நல்லதென்று அந்த வாணுவருக்கு மாத்திரைக் கோலும் கடகப்பாளையமும் பஞ்சாங்க முரசும் பரமசி

104. வனானவர் விருது கொடுத்தார் அப்போது பார்பதாதேவி மாணிக்க மடிச்சீலை வாழ்த்திக் கொடுத்தார் சுப்ரமணியக் கடவுளார் தோன்றிய

105. ந்தார் மாலையை விருதாகக் கொடுத்தார் தெய்வேந்திரன் வெள்ளை யானையை விருது கொடுத்தார் கிஷ்டணன் கெருடக் கொடியும்

106. வைய்குந்த வளநாடும் கொடுத்தான் விருமதேவன் கமலகண்டிகைத் தேரை விருது கொடுத்தான் கலிமா

107. ருதமென்னும் புரவி காத்திலேயும் கடினமான விசையுள்ள குதிரையை விருது கொடுத்தான் வருணபகவான் காவேரி வல்லவ

108. னென்கின்ற பேரு கொடுத்தான் யமதருமராசன் திசை முக்கியான் என்னும் விருதைக் கொடுத்தான் சத்தியமான நிர்ணயவானென்

109. கிற சொல்லும் பூலோகத்திலே சத்துருக்களைச் செயித்து வெற்றிகொள்ளத் தக்கதாக ஒரு சூலாயுதமும் கொடுத்தான் குபேரன் அள

110. காபுரிப் பட்டணத்தைக் கொடுத்தான் இந்தப் படிக்கு அஷ்ட்ட திசையிலேயுள்ள தேவர்களும் முப்பத்து முக்கோடி தேவர்களும் அவரவர் ம

111. னமகிழ்ந்து விருதுகளும் கொடுத்து தேவாதிகள் கடாட்சமும் பெற்று ஆயிரத்தலைவர்களையும் பூலோகத்தில் வாழ்ந்துண்டு சுகத்தை

112. அனுபவித்துக் கொண்டிருங்களென்று உத்தரவு பெற்ற வாணுவர் ஆனதாலே இவர்கள் பெருமையை எவராகிலும் சொல்லுதற்கெளி

113. தோ ஆனதால் அந்தமுடன் முப்பத்திரண்டறந்தன்னை வளர்த்த உமையாளுக்கு ஆருத்துவமான பெயர் அக்குமணி கொக்கிறகு யணிந்திருக்

114. கின்ற சிவன்தனக்கு அன்பான சம்பந்திகள் சிந்து வண்ணம் கோவை உலா மடல் சரிதைகளுஞ் சொல்லப் பெரிய அம்மா

115. னையும் திணைப் பொழுதே உண்டுசெய்ய வல்லவர்கள் தவறாமலே திராசு நிறுக்கும் நிர்ணயமுள்ள பெயர்கள் கொந்துலவு

116. தோன்றியந்தார் மாலை உள்ளவர்கள் குடிக்குக் குற்றமில்லாத பேர்கள் குலவணிகேசுரர் ஆயிரங்குடிப்பட்டமுள்ள பேர்கள் பின்

117. ளைகளைப் பெற்றுப் பின்னொரு தெய்வத்தின் பெயரிடாத பேர்கள் பெண்களைப் பெற்று பின்னையொரு சாதியார் கண்டு சிரிக்கப்

118. புறங்கொடாத பேர்கள் கள்வரைப் போலே பன்றி கோழிகள் வளர்க்காமல் காசினியில் மேவி வாழ்ந்திட்ட பேர்கள்

119. கண்டு வியக்கத் திறமையுண்டான பேர்கள் கொள்ளந்தை பண்ணந்தை யென்னுமொரு கோகமா நகரந்தனிலே வந்தவர்கள்

120. வள்ளலுக்கு உரித்தானவர்கள் வாள் முப்பத்திரண்டுடன் வாங்கி வாழ்ந்திட்ட வாள் வணிகர் வளஞ்செறிந்த பூங்காவினில் வ

121. ளமைதன்னில் ஆயிரம் குடிப்பாட்ட முள்ளவர்கள் சந்திராள் சூரியாளைப்போலே சத்திய வாசகர் தன்ம தாவளவர் அபைய தாவளவர்

122. சமைய தாவளவர் சங்கரன் தனக்கு வங்கணச் சேர்க்கையை மாற்றும் வள்ளல் அவ்வையார் மகிழ ஒரு பொற்படாகம் ஈந்தவர்கள் ஆயிரங்

123. குடித் தலைவர் எதிரிட்ட பீடத்துக்கு எதிர்ப்பீடம் இட்டவர்கள் கிட்கிந்தா மலையுடனே வைகுந்த வளநாடும் பெற்றவர்கள் சுந்தரஞ்

124. சேர்கின்ற மணப்பந்தலிலே நாயைக் கட்டிவைத்துச் சோழனைச் செயித்திட்ட பேர்கள் துய்யதோர் செண்டு கொண்டு பாண்டிய

125. ன் தன்னை தொல்புவியில் பந்தினாலே வென்றவர்கள் காவேரியைக் கரைகண்டவர்கள் பறந்துவருங் காவேரியைப்

126. பஞ்சினாலே யடைத்தவர்கள் வெகு கம்பையாறு உடையவர்கள் வீராணமும் கெருடக் கொடியும் உடையவர்கள் வெற்றிகொ

127. ளவேண்டி முடக்கும் மாணிகத்தை முந்நூலிட்டிபுணைத்த கைத்தலைவர் முப்புரிப் பொன்னூல் அணிந்திட்ட மார்பர் மூன்றாங்

128. குடித்தலைவர் வெள்விடை மறித்த வெற்றிக்கையர் ஒன்னலரை விண்ணேற்றும் கையர் சேரன் சோழன் பாண்டியன் மூ

129. வருக்கும் முடிசூட்டும் கையர் சோழன் வந்து பெண் கேள்க்க கன்னங்கரு நாயைக் கட்டிவைத்த கோத்திரர் கான நேசமான அம்பிப் பிரியாளைப்

130. பிரியாத பாகனான ஈசுவரனார் தம்முடனே எதுத்து மணம் செய்தவர்கள் பொன்னார மார்பர் புகழ் வணிகேசர் தன் வழக்கைப் புறங்

131. கிடக் கொடுக்காத பேர்கள் தீராத வழக்கைத் தீர்;;த்திட்ட வலியவர்கள் விபூதி பஞ்சாட்சர ருத்திராட்ச மாலிகாபரணர் வைசிய நாராயண

132. னான வாணுவரிவர்கள் அனைவோருங் கூடி தெண்டாயுத பாணிக்கு விழா பூசையில் திருமஞ்சனம் சந்தனம் வில்வார்ச்சனை

133. கட்டளையாய் நடக்கும்படி செய்த விபரம் செவந்தி பண்டாரத்துக்கு குடிக்கு வர்த்தனை வருஷம் 1க்கு தலக்கட்டுக்கு பணம் 1 எண்ணெய்க் கடைக்கு பணம் 1 கா

134. சுக்கடைக்கு பணம் 1 சவுளிக்கடைக்கு பணம் 1, பலசரக்குக் கடைக்கு பணம் 1 செக்கு 1க்கு பணம் 5 எருதொன்றுக்கு பணம் 1 உலாவு சுமைக்கு பணம் 1/2

135. கலியாணத்துக்கு பெண் வீட்டுக்கு பணம் 2 மாப்பிள்ளை வீட்டுக்கு பணம் 2 உள்ளூரிலே ஆடிய செக்குக்கு உழக்கு எண்ணெயும் புண்ணாக்கும் போக்கு

136. வரத்துப் பொதிக்கு பணம் 1/4 சாதியில் சாதியார்கள் செய்த குத்தா குத்தம் தீர்ந்த பணத்திலே பாதியும் திரட்டிக்கு பணம் 1 சீமந்தத்துக்கு பணம் 1 தலைப்பாகு உ

137. ருமாலை கட்டுக்கு பணம் 1 இந்தப்படிக்குச் சம்மதித்துச் செய்து குடுத்தோம் 56 தேசத்திலே உண்டாகிய நகரத்திலே யிருக்குற ஆயிரத்தலை

138. வரனைவோருக்கு இந்தத் தரும சாதனம் சுகிர்த முண்டாயிருக்குமென்றும் சிவகிரியிலே மேவியிருக்கும் கடவுளாருக்கு நித்தியப்படி

139. க்குத் தருமம் நடக்கும்படியாய் தலத்தில் தானிகம் சின்னோப நாயக்கரய்யனவர்கள் பாணி பாத்திர உடையார் மற்றும் தலத்தில் ம

140. காசனங்கள் முன்பதாக ஆயிரத் தலைவரனைவோரும் கொடுத்த தாமிர சாசனப் பட்டயம் தாராதெத்தம் தண்டாயுதபாணி துணை.

141. ஆயிரவருடைய குடிப்பாட்டம் வரலாறு தென்னவராயர் மானாதிராயர் தளஞ்செரியராயர் உத்தமராயர் நந்தி வித்தியராயர்

142. சீர்வணிகராயர் திறல்வசியராயர் மணியராயர் மாபோதிராயர் நல்வசிகராயர் குடிப்பம்பைராயர் அழகராயர் மளவராயர் தானத்தருமராயர் மானமராயர் மர

143. பாலராயர் கோமளவராயர் பெறவுமகாராயர் தானமகாராயர் கண்ணபுர முடையான் மருங்குடையான் அரியலூருடையான் போதுதுளாய் மா

144. லையுடையான் மாளிகையுடையார் திருவெள்ளா றுடையான் திருப்பரஞ்சேரியுடையான் திருவானைக்காவுடையான் சேவலுடையான்

145. (யான்) சிந்தாமணியுடையான் பிறையணியுடையான் புகலூருடையான் நெறட்டையுடையான் துளாய் மாலையுடையான் சேனைக்குண்டையு

146. டையான் துப்புரவமுடையான் முப்புரவமுடையான் மோகீசுவரமுடையான் பவுத்திரனுடையான் பரமனுடையான் குருக்களுடையான்

147. புரோசனமுடையான் கொரோசனமுடையான் படியிருக்கை யுடையான் பச்சமுடையான் குமாரபாக்கலமுடையான் தடந்துறையுடை

148. யான் தாக்குருந்தமுடையான் குப்பளாருடையான் குழலுடையான் திகைக்கிளவமுடையான் ஒப்பமுடையான் சீருள்ளவுடையான்

149. யிளவட்ட முடையான் உள்ளங் கிளிவமுடையான் வையமுடையான் வைப்புரமுடையான் வட்டவாருதியுடையான் முத்துடனு

150. டையான் மத்ததகனுடையான் சிறுவிளூருடையான் சீர்வண்ணமுடையான் சிவன் செயலுடையான் சேந்தமங்கல முடையான் சத்திமங்கலமு

151. டையான் தேவத்ததமுடையான் கூடல்வண்ணமுடையான் கோட்டுக்காலுடையான் நெறிவிகிழவமுடையான் நேறண்டமுடையான் வறகுண்ட

152. முடையான் நீலநகரமுடைடயான் நெடுஞ்சாந்தமுடையான் நெடுங்கால் நாரை யுடையான் கடவுளாருடையான் பஞ்சாத்தமுடையான் துய்யமு

153. டவமுடையான் வாழியமுடையான் இளந்தாரியுடையான் குருவையுடையான் வேட்டனுடையான் கடம்புடையான் குண்டையேறமுடையான்

154. கதிருவமுடையான் குயவர்தனமுடையான் வேளாளனு டையான் மாக்காரியுடையான் மாரனுடையான் மாங்குண்டடை யுடையான் மருத்துவ

155. முடையான் மண்டதமுடையான் கிட்கிந்தையுடையான் சங்கமநல்லூருடையான் நத்தமுடையான் குளத்துடையான் கற்பூதியுடையான் சாதந்தன

156. முடையான் முத்தங்கண்ணமுடையான் வஞ்சிகாவ முடையான் யிளந்தாமமுடையான் மொறஞ்சாத்த முடையான நெடுக்கலுடையான் கோர்வை

157. வக்கையுடையான் காந்தமலையுடையான் நாடகக்குண்டன முடையான் மிகுகூளக்குடையுடையான் குண்டூர் குளவமுடையான் பாக்க

158. முடையான் பந்தியுடையான் சன்னாடுடையான் சிற்றம்பல முடையான் மாடைத்தலை யுடையான் மூமருங்கூர்தள முடையான் சாந்தமுடையா

159. ன் நலம்புரியுடையான் கோடுடையான் சீர்மைத் தலை யுடையான் பெரும்பைய முடையான் பள்ளியுடையான் வழுவையுடையான் தாரகமுடையான்

160. நெடுமாறமுடையான் மாடமுடையான் நாகூறுடையான் கண்ணாறுடையான் ம ரு ந் த க மு டை யா ன் மருதந்தகமுடையான் நாரத்தமுடை

161. யான் நல்லறமுடையான் சாய்க்காடுடையான் புள்ளூருடையான் திருவெண்ணீறுடையான் துளவுடையான் சிங்கபுரமுடையான் வன்னி

162. யுடையான் பழுவுடையான் கிதில்பாவுடையான் தேர்க்குள முடையான் வாலிகண்டபுர முடையான் கொங்கபுர முடையான் சங்கபுரமுடை

163. யான் சிறுகுடியுடையான் ஆலாங்காடுடையான் நச்சலூார் உடையான் வெள்ளறுகு டையான் தானக்குண்ட முடையான் வரச்சில்லிக்குடையான் பாதி

164. ரிக்குடையான் ஆலந்துாருடையான் பென்னாகர முடையான் குண்டமுடையான் முகந்துடையான் புளியங்குடியுடையான் வாணிபுரமுடையான்

165. கிருதமுடையான் பூதப்பேருடையான் செந்தலை யுடையான் முத்துடையான் செண்பகக் குடையுடையான் மருதவனமுடையான் உருத்திரங்கு

166. டையான் போர்ந்துடையான் செருவப்பூர் உடையான் தெற்குண்டமுடையான் சிறுவஞ்சியுடையான் தலைக்குடையான் பூசத்துடையான் வி

167. டையாத்துடையான் பருத்திக்குடையான் பெருஞ்செல்வ முடையான் மயிலாப்பூர்; உடையான் மருதுாருடையான் சன்

168. னாதிபுரமுடையான் நன்றியுடையான் பொன்னாதார முடையான் நெறியாருடையான் மண்ணாதாரமுடையான் நல்லூாருடையான் திருநெ

169. ல்வேலியுடையான் நடைப்புரமுடையான் திருவைநல்லூா ருடையான் நெல்லூாருடையான் பரப்புடையான் அரசுடையான் கற்பூரமுடை

170. யான் நாட்டையுடையான் நெருப்புடையான் குடையாள முடையான் வீராணமுடையான் தரணியுடையான் மருதான்றிபுர முடையான்

171. நலப்பத்துடையான் மாங்குடியுடையான் மாம்பிரப் பூருடையான் வாக்குடையான் யிலுப்பை யுடையான் திட்டமுடையான் தேவேந்திரமு

172. டையான் பருபதமுடையான் சயிலமுடையான் எட்டி யுடையான் ஏமலுடையான் சத்திய வாசகமுடையான் ஆனைக்குடையான்

173. ஆனைக்காவலுடையான் தந்தமுடையான் குருமயுடையான் திருப்புக்குடையான் பாதிரிக்குடையான் விச்சித்திரமுடையா

174. ன் பனைங்காயுடையான் பனைஞ்சேருடையான் சொல்லுடையான் சிங்களமுடையான் சுள்ளங்காறுடையான் களமுடையான் கடமு

175. டையான் மண்ணிறமுடையான் தாதமுடையான் செருவழி யுடையான் சேவத்துடையான் பால்வண்ணமுடையான் சுரகருடையான் கைத்திறமுடையான்

176. நேமத்துடையான் பாட்டகமுடையான் வாலிபுர முடையான் வாவலுடையான் பாண்டியுடையான் அத்தால முடையான் பூண்டியுடையான் பொற்பக

177. முடையான் பொற்கொடியுடையான் வெள்ளிச்சந்தி யுடையான் மானம்பாடியுடையான் மாளுடையான் மாடுடையான் திண்ணமுடையான்

178. வண்ணமுடையான் கூந்தலுடையான் செக்குடையான் சித்திரம்பலவுமுடையான் ஆறுாருடையான் கொக்கடைக்குடை

179. யுடையான் செல்வமுடையான் கடலுடையான் விண்ணேற்ற முடையான் பரிவுடையான் சன்னாயிரமுடையான் கண்ணாயிர முடையான் பேரி

180. கைகடமானமுடையான் மணிகண்டமுடையான் பேருமாறுடையான் சுரக்குடையான் பம்பையுடையான் மணியேந்திரமுடை

181. யான் பணியுடையான் தொண்ணாயிர முடையான் கந்தாயிரமுடையான் கோமாலுடையான் கமலையுடையான் வெவ்வியங்கி

182. ழவன் விழலிக்கிழவன் நெஞ்சூற்கிழவன் யிருக்கைக்கிழவன் கருமணிக்கிழவன் கவுணிக் கிழவன் கோணிக்கிழவன் மறக்கிழவன்

183. பூம்போதிகிழவன் பிரமகிழவன் மகாரிஷிவிதலக் கிழவன் சிறுகிழவன் பயறாக்கிழவன் முறைகிழவன் முள்ளிகிழவன் மூர்த்திகிழவன் பொ

184. த்திகிழவன் பத்திக்கிழவன் பீலிகிழவன் புத்திகிழவன் கள்ளிகிழவன் ஆனைகிழவன் சத்திகிழவன் ஒளிகிழவன்; ஓதலங்கிழவன் மணல்கிழவன்

185. வளம்பாக்கிழவன் கற்புகிழவன் அறுகிழவன் ஆசங்கிழவன் நாக்காடுகிழவன் குறிகிழவன் கடம்பாங்கிழவன் செந்திக்கிழவன் மணப்பாக்கிழவன்

186. முடிகிழவன் முதுமாங்கிழவன் முக்கோற்கிழவன் கொற்றங்கிழவன் மதிகிழவன் அரியிருகிழவன் நனீளுமக்கிழவன் நற்பாங்கிழவன்

187. குரும்புக்கிழவன் நலம்பூதிகிழவன் வதுவைக்கிழவன் வடுகன்சாத்தம்கிழவன் மணவைகிழவன் குவலைக்கிழவன் தஞ்சைக்கிழவ

188. ன் சைய்வைகிழவன் நுஞ்சைகிழவன் நூத்தாரங்கிழவன் செஞ்சைகிழவன் செயிலூர்க்கிழவன் கன்னி கிழவன் குண்ணங்கிழவன் பெ

189. ண்ணைகிழவன் மண்ணிகிழவன் நறுங்கிழவன் மாம்பாக் கிழவன் விண்ணிகிழவன் மேரைகிழவன் வெறுக்கிழவன் வேம்பாக்கிழ

190. வன் கருஞ்சீனிக்கிழவன் பையார்கிழவன் தலமைக்கிழவன் புவிகிழவன் ஆரைகிழவன் அனந்தல் கிழவன் கோரை கிழவன் கேறைக்கி

191. ழவன் பேரைகிழவன் அல்லிகிழவன் நல்லிகிழவன் முல்லைக் கிழவன் வல்லிகிழவன் மாருதகிழவன் அரும்பை கிழவன் ஆவணி கிழவ

192. ன் தர்மக்கிழவன் விருந்தைகிழவன் விர்லிகிழவன் மங்கல கிழவன் போதங்கிழவன் சம்புகிழவன் நற்சமுறைகிழவன் தேரைகிழவன்

193. சிறுநாரிகிழவன் மாரங்கிழவன் பலிகிழவன் உள்ளிகிழவன் கோதியங்கண்ணங்கிழவன் பாக்கிழவன் கோணிகிழவன் சேறைகிழ

194. வன் செண்பங்கிழவன் தோணிகிழவன் பாணிகிழவன் பவுணிகிழவன் சென்னிகிழவன் கன்னிகிழவன் கதலிகிழவன் பொன்னி

195. கிழவன் வன்னிகிழவன் விச்சைகிழவன் பொதிகிழவன் மரகதப்பையகிழவன் குன்றிகிழவன் கோட்டூர்கிழவன் நின்றை கிழவன் நிரு

196. தகிழவன் கொன்றைகிழவன் கோட்டங்கிழவன் குவளைப் பரங்கிழவன் நலவிகிழவன் சடைக்கிழவன் சாதலிகிழவன் குடிகிழவன் படி கி

197. ழவன் பாண்டிக்கிழவன் பூசந்தைகிழவன் பொற்குடிகிழவன் நாரழல்கிழவன் கங்கைகிழவன் செங்கைகிழவன் சரிதைகிழவன் நா

198. ரைகிழவன் பயிலைக்கிழவன் கொமரங்கிழவன் கொக்கோடி கிழவன் நாரணகிழவன் வெளிகிழவன் வெற்பாங்கிழவன் தாளிகிழ

199. வன் தண்ணங்கிழவன் மீளிகிழவன் சூழிகிழவன் துருவையுளான்சைகைக்கிழவன் காமான்கிழவன் நாகந்தைகிழவன் பொய்

200. கைக்கிழவன் நெய்யாடுகிழவன் கோக்கிழவன் நேசக் கிழவன் வைகைக்கிழவன் வளவேல்கிழவன் பாசைக்கிழவன் காசிக்கிழவன் நேர

201. சைக்கிழவன் நேசிக்கிழவன் ஓமங்கிழவன் கரண்டைகிழவன் கண்ணம்பாக்கிழவன் முத்தின்பையக்கிழவன் முனிகிழவன் வெண்ணிகிழவன்

202. கோலக்கிழவன் முங்கைகிழவன் சீரணிகிழவன் மதுரைக்கிழவன் வனவாலிகிழவன் புகலிபகிழவன் பண்ணைகிழவன் பிரள்பிறைக்கிழவ

203. ன் தெற்பைக்கிழவன் காரைகிழவன் பாரிகிழவன் பூரிகிழவன் சொற்பாங்கிழவன் புன்னைப்புரங்கிழவன் மூலைகிழவன் நம்முதுகிழவன் மான்கூற்

204. றங்கிழவன் கோரைகிழவன் ப+தப்புரங்கிழவன் பேடுகிழவன் தண்டலைக்கிழவன் நெற்குப்பைக்கிழவன் நல்வேங்கைக் கிழவன் சிலைவிரி

205. கிழவன் கூறைகிழவன் தோட்டங்கிழவன் கொம்மைகிழவன் கடம்பைக்கிழவன் குமாரனாகக்கிழவன் மாத்துார்கிழவன் கருவிலிகிழவன் திருப்பா

206. சக்கிழவன் யிருக்கைக்கிழவன் தாமரைக்கிழவன் தருமங் கிழவன் பெருமைக்கிழவன் குடுமிக்குன்றங்கிழவன் அம்பலங்கிழவன் நைம்பூருகிழவன்

207. கருசை கிழவன் மணிக்கிழவன் மணங்கிழவன் காலை கிழவன் பாலைகிழவன் மழைகிழவன் தென்மலை கிழவன் காமற்கிழவன் காவாலிகிழவன் சே

208. னைக்கிழவன் ஈகைக்கிழவன் இளங்கைகிழவன் பாகைக் கிழவன் மாறைகிழவன் மாறுகிழவன் இளமைக்கிழவன் உத்திரங்கிழவன் பழனங்கிழவ

209. ன் புரிசைகிழவன் புவனிகிழவன் விரிசைக்கிழவன் வற்றலங் கிழவன் நியமங்கிழவன் நிற்றலங்கிழவன் நிமையங்கிழவன் கொல்லங்கி

210. ழவன் கோழூர்க்கிழவன் வல்லங்கிழவன் வளங்குங்கிழவன் மறைகிழவன் நலம்பெறுங்கிழவன் கோலூார்கிழவன் அணையூர் கிழவன் விற்குடி

211. கிழவன் பட்டணங்கிழவன் செவ்வரிகிழவன் பாங்கைவலங் கிழவன் பணைப்பாங்கிழவன் மொய்மைகிழவன் நந்திமாங்கிழவன் மாத்திரங்கிழவன்

212. அவ்வலிகிழவன் பொற்பூரத்தன் புள்ளிமான் துங்கமாங் கிழவன் புகலூார்க்கிழவன் மார்க்கங்குடிகிழவன் சிறுநல்லூார்க் கிழவன் சிறும்பூர்க் கிழவன் வ

213. ளமைக்கிழவன் வாயல்கிழவன் முதிரந்திதிகிழவன் நிதிகிழவன் கரும்புகிழவன் முதுகிழவன் முசுகிழவன் வேம்புகிழவன் சேரவாணுவன் சோழவா

214. ணுவன் கண்ணவாணுவன் கடந்தைவாணுவன் தென்கடந்தை வாணுவன் புகழ்பெல வாணுவன் கற்பூரவாணுவன் காவேரிவாணுவன் மாசறு

215. வாணுவன் மாசுத்தவாணுவன் வாஞ்சைபுகழ் விற்புகழால் வீறான பொன்னிளைஞர் செயங்கொண்ட ஆருடனே செய்யக் கடவுளார் பாங்கு குடுமியார்

216. பாரில்ச்சோமாசியார் மளவர் சிறுகளையுடையார் மாக்காலி வல்லி கம்பம் வேலப்பிள்ளை நவகோடி நாராயணர் கொள்ளந்தை இறந்தை கோ

217. ட்டந்தை வேட்டந்தை நாகந்தை குப்பந்தை கண்ணந்தை பொன்னந்தை தேவந்தை செயலந்தை மாவந்தை கடமந்தை வையந்தை வண்ணக்கம்பா

218. டியார் சேனைக்கொன்றையுடையார் திண்ணமுடையார் வண்ணமுடையாா தேவேந்திரமுடையார் அதிகமுடையார் இப்படி ஆயிரத்தொரு

219. கோத்திரமும் பெற்ற ஆயிரத்தலைவர்கள் அனைவோரும்கூடி ஸ்ரீ வீர பழனிமலையில் மேவியிருக்கும் தெண்டாயுதக் கடவுளாருக்கு தினசரியில்

220. குடுத்த தருமம் கல்லும் காவேரியும் புல்லும் பூமியும் சந்திரர் சூரியர் உள்ள வரைக்கும் நடப்பித்துவைத்துக் கொள்ளக் கடவோமாகவும் இப்படி

221. யுண்டு செய்த தருமத்தை நம்முடைய ஆயிரத்தலைவர் அனைவோருக்குள்ளே யாதாமொருவராகிலும் நாங்கள் அறியோம் கண்டதுமில்லை

222. கேட்டதுமில்லை பண்டாரம் பொய்சொல்லி வயறு வளர்க்க வந்தான் வரி குடுக்குற தில்லை போவென்று அசத்தியச் சொல்லு வாராதபடிக்கு

223. தாம்பூர சாதனப் பட்டயம் எழுதிப் பண்டாரத்தின் வசம் தாராதெத்தமாகக் குடுத்து இந்த தருமத்திற்கு உள்ளபடிக்கு வரி கொடுக்கமாட்

224. டோமென்று இடருபண்ணி வலுமை பேசினதேயானாலும் அந்தந்த ஊரிலே யிருக்கும் நம்முடைய உறவின்முறையார் கூடிய வர்த்தனையைச் சாதிக்குப்

225. பிறம்புபோட்டும் மறித்தும் அடகெடுத்தும் பண்டாரத்துக்கு வரியை வாங்கிக் கொடுத்து தர்மம் நடக்கும்படி செய்வோராகவும் பண்டாரத்தி னுடைய

226. ஆணை ஆக்கிணைக்கு உள்பட்டு கட்டளைக்கு வரி கொடுக்காதபேருமில்லை பொய்யென்றவனும் அழிம்பு ஆகடியம் பேசினவனும்

227. குடிகளையொழித்தவனும் இவர்களெல்லாம் கங்கைக் கரையில் காராம்பசுவையும் யோகீஸ்வரர்களையும் இவர்களைப் பெற்ற மாதா பிதா

228. வையும் கொன்ற தோஷத்தில் போகக்கடவாராகவும் சிவத்துரோகம் குருத்துரோகம் ராசத்துரோகம் சாமி துரோகம் எனத்துரோகம் பஞ்சமா

229. பாதகங்களுக்கு உள்ளாகாமல் மன்னரை மதித்தவர்க்குச் சகாயம் சரீரசகாயம் அர்த்த சகாயம் தேவதாபத்தியம் குருவிசுவாசமும் செய்து வந்த

230. பேர்கள் காசியிலே வராகநதியிலே தீர்த்தமாடி விசுவ நாதரையும் விசாலாட்சி யம்மனையும் அன்னபூர்ணியையும் காலவயிரவனையுஞ்

231. சேவித்த பேர்கள் பெற்றுக் கொள்கிற பலனையும் பெறுவாராகவும் சீரங்கத்திலே புண்ணிய காவேரியில் தீர்த்தமாடி ரங்கநாயகரை

232. யுஞ் சீரங்க நாட்சியாரம்மனையும் திருவானைக்காவிலே செம்பீசுரனையும் அகிலாண்ட நாயகியம்மனையும் சிவந்தீசுபரரையும் தா

233. யுமான சுவாமியையும் தெரிசித்த பலன் பெறுவாராகவும் ராமேசுபரத்தில் தனுக்கோடியில் தீர்த்தமாடி ராமலிங்கத்தையும் ப

234. ருபதாபத்தினி யம்மனையும் தெரிசித்தபலன் பெறுவராகவும் மதுரையிலே பொய்கைத் தாமரையில் தீர்த்தமாடி சொக்கலிங்க

235. சுவாமியையும் மீனாட்சியம்மனையும் அங்கயற்கண் நாயகியையும் தெரிசித்த பலன் பெறுவாராகவும் பழனிமா நகரிலே அநேக

236. பாவம் தீர்த்த சண்முகமாநதியிலே தீர்த்தமாடி கயிலாச நாதரையும் பெரியநாயகியையும் இடும்பாசுரனையும் தெண்டா

237. யுதக் கடவுளாரையும் பூசத்திருவிழாவிலே தெரிசித்த பலன் பெறுவாராகவும் வன்னிபுரத்திலே நூற்றியெட்டு யுகம் பெற்ற

238. பூலோகக் கயிலாசத்திலே சுயமாக எழுந்த பெரியாவுடையாரை மகாவிஷ்ணு மச்சாவுதாரங்கொண்டு பூசிக்கப்பட்ட வாயுவு

239. பகவானும் பூசிக்கப்பட்ட பலனும் பெறுவாராகவும் சுபம்.

## 70. பிள்ளையன் கட்டளை செப்பேடு

வே.கட்டளை கைலாசம்,
பாளையங்கோட்டை

இடம் : திருநெல்வேலி சுடலைமாடன் கோயில் தெரு திரு.ஆர்.பிரம்மசங்கர நாராயணன் அவர்களிடம் உள்ளது. 32 செ.மீ. நீளம் 14 செ.மீ. அகலமுடையது. சகம் 1574. கொல்லம் 827. ஆண்டுக் குறிப்புகள் உள்ளன.

காலம் : பொ.ஆ.1652

செய்தி : ஆழ்வார் திருநகரியில் ஆழ்வார் அறக்கட்டளை நடத்த திருமலை நாயக்கருக்குப் புண்ணியமாகவும் வடமலையப்ப பிள்ளை அவர்களுக்குப் புண்ணியமாகவும் நிலம் கொடுக்கப்பட்ட செய்தி சொல்லப்படுகிறது.

1. உசகாத்தம் 1574ன் மேல்
2. செல்லா நின்ற கொல்லம் 827
3. நந்தன ஷு தெட்சணாயத்தில் கிரித
4. ல இதில் விலக்கட கரிவி ஆடி மீ
5. 312 சுக்கில பட்ஷத்து பஞ்ச
6. மியும் சுக்கிற வாரமும் சுத்தநாம
7. யோகமும் சிங்ககரணமும் பெத்த
8. அத்த நட்செத்திரத்தில் நாட்
9. செய்த உதகபூறுவ தன்மதானப்பி
10. றமாணமாவது அமுர்தகுல வழநா
11. ட்டில் முனைஞ்சி மாகாணியில் க
12. ாணியாளர் நாட்டவரோம் தி
13. ருவழுதி வளநாடான திருநகரி
14. சுவாமி ஆள்வார் அறைக்கட்டளை
15. பருவிடைப் பிள்ளையன் மக்கள் க
16. ட்டளைப்பூசை நெய்வேத்தியத்து
17. க்கு நடக்கும் படிக்கு சுவாமி திரும
18. லை னாயக்கரய்யனவர்களுக்குப் புண்
19. ணியமாகவும் வடமலையப்ப பிள்ளைய

20. னவர்களுக்குப் புண்ணியமாகவும் னா
21. யக்கரய்யனவர்கள் நிருபத்தின் ப
22. டி நாங்கள் உதக பூறுவதன்மதா
23. னப் பிறமாணமாகப் பண்ணிக் கு
24. டுத்த நாட்டுப் பிறமான பதக்கத்
25. துக்கு பெல்கையாவது கீழ்எ
26. ல்கை திருமலைபுரம் யெல் கைக்கு
27. ல்கை திருமலைபுரம் யெல் கைக்கு
28. நாராயணம் குட்டிப்பாறை
29. க்கு வடக்கு மேல் யெல்கை க
30. ாடன்குளத்து யெல் கைக்கு
31. க் கிளக்கு வடயெல்கை கொ
32. டன் குளத்துக்குத் தெற்கு
33. ஆக இன்னாங் கெல்கைக்குள்
34. ப்பட்ட பூமியும் நஞ்சை புஞ்
35. சை கிணறு குடியிருப்பு தோ
36. ட்டக்கூறு உலாவுகாட்சி
37. தறிக்கடமை ஊத்தைப்பா
38. ட்டம் சொன்ன தயம் பனைங்
39. கடமை சகலமும் இதிலுள்ள தி
40. தி ஆதியாக அஷ்ட்ட போகதெ
41. ஷ சுவாமியங்கழுக்கும் யோக்

பின்பக்கம்

42. கியமாக தானாதி வினி விக்கிறை
43. யங்களுக்கும் பண்டுள்ளாரையும்
44. பளம் பேரையும் தவித்து ஆதி சந்
45. திராக்கம் சந்ததிப் பிறவேசம்
46. செம்பிலும் சிலையிலும் வெட்டி
47. அனுபவித்துக் கொள்வராகவு
48. ம் இப்படிச் சம்மதித்து தன்மத

49. ான சாதப் பட்டையம் ஏழு
50. திக் குடுத்தோம் பிள்ளையன்வ
51. ர்கள் கட்டளைக் காரியம்
52. செய்வார்களுக்கு முனைஞ்சி
53. யில் காணியாளரோம் இந்த
54. ப்புண்ணியத்தை பரிபாலன(ம்) பண்
55. ணின பேருக்கு சாலோக சாமிப
56. சாரூப சாயுத்தியம் பெறுவராக
57. வும் இந்த தன்மத்துக்கு ஆராகி
58. லும் முடகூறு பண்ணின பேர் கெங்
59. கைக்கரையிலே காராம்பசுவை
60. க் கொன்ற பாவத்திலே போகக்
61. டவாராகவும் இப்படிக்கு அம்
62. மையாண்டார் எழுத்து இப்ப
63. டிக்கு தாண்டவ முதலியார்
64. இப்படிக்கு அணைஞ்ச பெருமாள்
65. இப்படிக்கு உதிரமாலை இப்படி
66. க்கு இந்தப் பட்டையம் எழுதி
67. னேன் தன்மக் குட்டி முதலியா
68. ர் இப்படிக்கு அணைஞ்ச பெரு
69. மாள் எழுத்து உ

## 71. திருமலை புண்ணைத் தேவன் செப்பேடு

சொ.சந்திரவாணன்,
இராசபாளையம்

இடம் : திருச்சியில் கிடைக்கப்பெற்றது. வந்தவர் செப்பேட்டின் புகைப்படம் மட்டும தந்து சென்றார்.

காலம் : திருமலை நாயக்கர் (காலம்) செப்பேடு.

செய்தி : நீளவாக்கில் ஒரு பக்கமே எழுதப்பட்டுள்ள இச் செப்பேட்டில் 29 வரிகள் உள்ளன. திருமலைப் புண்ணியத் தேவனுக்குத் திருமலை நாயக்கர் கொடுத்த உரிமையும் தானமும் பற்றிக் குறிப்பிடுகின்றது. செப்பேட்டு வாசகம் :

1. ..றாமசெயம்
2. பாத்திவா ஸு ஆனி மீ" 19 மதுறாபுரித் தல -
3. த்திலிருக்கும் றாசமானிய றாயர் க்ஷத்திரித் திறு -
4. மலை நாயக்கறவற்களிடத்தில் பிதயில் கோத்தி -
5. றமாகிய திருமலைப் புன்னைத் தேவனைச் சேற்ந் -
6. த தேவனுக்கு பணமுடிப்பு கொடுத்து அனுப்பும்
7. போது திருமலைப் புண்ண தேவனுக்கு பட்டம்
8. கட்டிவச்சது ஷெ தேவனுக்கு வருமானம்
9. சாதயில் நாட்டில் கம்பளிபோடுகிற
10. போதும் திருமலை புண்ணத் தேவன் ஆறு
11. தாய மக்களும் படைப்ரிவாரங்களுடம் றாசா -
12. வை சந்திரன் திருமலை நாயக்கர் என்ன
13. வேண்டும் கேக்க இரண்டு கட்ட தெருவும்
14. பதினெட்டு பட்டி கோங்கிமார்கள் செய்ய
15. வேண்டிய மரியாதையும் என் கோத்திர -
16. மாகிய இவர்கள் என் உத்திரவுப்படி
17. செய்ய வேண்டும் பின்னத் தேவனுக்கு றாசா அ -

18. தன் படியே உத்தரவு செய்தார் திருமலை பின் -

19. னத் தேவன் எட்டு நாடாகப் பிரிக்கப்பட்டது[1] வா -

20. லாந்தூர்[2] திடியன்[3] புத்தூர்[4] கருமாத்தூர்

21. [5] பாப்பாபட்டி[6] செனக்குளம்[7] வேப்பனூத்து

22. [8] தும்பத்துண்டு ஷெ கண்ட நாட்டின் உத்திரவுக்கு

23. மீறி நடந்தால் மன்னர் தண்டனையும் தேவர் தண்டனையும்

24. அடிசுழி செய்தால் பிராமனனை கொன்ற தோஷத்திலும்

25. காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலும் ஆகவும்

26. சாட்சி சிவகங்கறாசா புதுக்கோட்டை சிவத்த

27. தம்பி கருமாத்தூர் கொன்றி மாயத்தேவன்

28. வேணு சிவலிங்க ஆசாரி மதுராபுரி மீனம்பாள்

29. துணை முனிசாமி துணை உ

## 72. மராட்டியர் கால விசாரணை ஆவணங்கள்

த.கலாஸ்ரீதர், தஞ்சாவூர்

**காகித ஆவணம்**

*மராட்டியர் காலத்தில் கையினால் எழுதப்பட்ட தமிழ் காகித ஆவணச் சுவடிகளில் காணப்படும் இச்செய்திகள் நூலில் வெளிவராத அரிய செய்திகளாகும். விசாரணை நிகழும்போது எடுக்கப்பட்ட வேள்வி பதில் குறிப்புகள் அப்படியே இதில் பதிவு செய்யப்பட்டுள்ளன.*

*1845 இ ஏப்ரல மீ 17 உ ஸ்ரீ மகாறாஜா சாயபு அவர்கள் திவாணத்துக்கு கோட்டைக்குள் மானோஜியப்பா தெருவிலிருக்கும் பஞ்சநதி சாஷ்திறி மகன் கிஷண் சாஷ்திரி ஜாதி தெலுங்கு பிறாமணன் சிவமத தொழில் துகொஜி சாய்பு அரமணையில் சுவாமி வீட்டு பூசை பண்னுகுர 35 வயசுள்ளவனிடம் விசாரணை.*

*கே.பிறாதுகாறறாகிய வஜறத்து பாபயிறுசாமி நல்கெறவு யெம்பாற் நள வரு மாசி மீ 26 யில் குடுக்கப்பட்டிருக்குர பிறாதுடன் சேற்ந்த சாஷ்சி சாபுதாவில் உம்முடய பெறுகண்டருக்குரது உமக்கு தெரியுமா. சாஷ்சிர் சாபுதாஜில் யெனக்கு தெரியாது கேள்வி : துக்கொஜி சாயபு யெவ்விதமாயி யெறந்து பொனார்.*

*ஷ துக்கோஜி சாயபு யொந்து பொன அண்ணைய தினம் விளக்கு விச்சு னான் அரமணையில் போயி சுவாமிக்கு பூசை பண்ணி பொட்டு அரமனை சறகண்டியில் வந்து உட்காந் திருகையில் றாத்திரி உ னாழிகை வேளையில் துக்கோஜி சாய்புக்கு உருதீதிர வாயுவு உபத்திரதினால் மாரடப்பு வந்து ஒத்தடம் குடுத்து கொண்டிருக குறாாக னெண்டு கேள்வி பட்டு மருபடி யென் விடடுக்கு பொயிவிட்டென யிவளவுதான யெனக்கு தெரிந்த காரியம்*

**பஞசநதி கிஷணசாஸததிரி**

*1. யைபபிரல - ஏப்பிரல், 2. பஞசநதி சாஷததிறி - பஞ்சநதி சாஸ்திரி, 3. கெ- கேள்வி, 4. வஜறதது - அரசகுடும்பத்தைச் சார்ந்த, 5. பாபாயிறுசாமி- பாபர்சாமி, 6. சாஷசிசபுதாவில - சாட்சிப் பட்டியலில், 7. நலகெற்வுயெம்பா - நலகைராவு என்பார், 8. உமமுடய பெறகணடிருக்குரது - உம்முடைய பெயர் உள்ளது, 9. துககொஜி சாயபு -தஞ்சை மராத்திய மன்னர், 10. ஆணணைய தினம - அன்றைய தினம், 11. கொணடிருககுறாாக னெணடு - கொண்டிருக்கிறார்கள் என்று.*

*விளக்கம் : 1845 - ஆம் வருடம் ஏப்பிரல் மாதம் 17-ந் தேதி ஸ்ரீ மகாராசா சாயபு அவர்கள் திவானத்துக்கு கோட்டைக்குள் மானோஜியப்பா தெருவிலிருக்கும் பஞ்சநதி சாஸ்திரி சாதி தெலுங்கு பிராமணர் சிவமதம். தொழில் துக்கோஜி சாயபூ அரண்மனையில் சுவாமி வீட்டு பூசை பண்ணும் 35 வயசுள்ளவனிடம் விசாரணை.*

*பதில் : பிராதுகாரராகிய அரச குடும்பத்தைச் சேர்ந்த பாபர்சாமி நல்கைராவு என்பார் நாளது வருடம் மார்ச் மாதம் 26-ந் தேதியில் கொடுக்கப்பட்டிருக்கிர பிராதுடன் சேர்ந்த சாட்சி பட்டியலில் என்னுடைய பெயர் உள்ளது என்று எனக்குத் தெரியாது.*

*கேள்வி : துக்கோஜி சாயபு எவ்விதமாக இறந்து போனார்.*

*பதில் : மேற்படி துக்கோஜி சாயபு இறந்துபோன அன்றைய தினம் விளக்கு வைத்து நான் மேற்படியார் அரண்மனைக்கு சென்று சுவாமிக்கு பூசை பண்ணிவிட்டு மேற்படி அரண்மனை சரகண்டிலி வந்து உட்க்கார்ந்திருக்கையில் இரவு இரண்டு நாழிகை வேளையில் துக்கோஜி சாயபுக்கு உருத்திர வாய்வு தொல்லையினால் மாரடைப்பு வந்து ஒத்தடம் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கேள்விபட்டு மறுபடியும் என் வீட்டுக்கு சென்று விட்டேன். இவ்வளவு தான் எனக்கு தெரிந்த காரியம்.*

*பஞ்சநதி கிருஷ்ணா*

*சாஸ்த்திரி*

*ஆவண எண் 715*

*மூட்டை எண் : 5ஹ, காலம் : 12.04.1845, நீளம் : 37.7, அகலம் : 28.9, பக்கம் : 1, வரிகள் : 20 முதல் 21.*

*அமைப்பும் விளக்கமும்*

*துக்கோசி சாயபு இறந்தது தொடர்பான விசாரணை இந்த ஆவணத்தில் காணப்படுகிறது. கேள்வி, பதில் அமைப்பிலுள்ள இந்த ஆவணம் எவசந்தராவ் என்பவரின் வாக்குமூலம் பற்றிய செய்தி காணப்படுகிறது. மெய்யெழுத்துக்கள் புள்ளியிடப்படவில்லை.*

*1845 இ யைபபறல மீ யஉ ஸ்ரீ மகாறாஜா சாயபு அவர்கள் திவானத்துக்கு*

*கே : வஜறததுமாய ஷீறாசாமி நலகைறாவுக குடுதத பிறாதுடன குடுதத சாஷசி சாபுதாவில யெதிரிகள ஸ்ரீ துககொஜி சாயபுககு செயித*

சாவகதி லெணடு உமமுட பெ சாஷியாக கணடிருககுது சாமசாரம உமகது தெரியுமா

பதில் : துககோஜி சாயபு யெடததில செவிதது கொணடிருநத நாயனனனாயககன யெமபவன சாஷிசி சாபுதாவில யெனனுடைய பொ கணடி ருகுரதாகச சொனனான. அதன பெரில யிபபடிககி நாயன னாயககன சொலலியிருகுாதாக பிறாதுகாரறாகயி ஷீறசாமி நலகெறவு யெடததில சொலலி ஷ பிறாது நகலும சாஷி ஜபுதா நககலும ஷ னாயனனாயககன யெனததில தாரனயிருககுரதாக ஷ பிறாது காரா சொனனாா

கே : பிறாது யெழுதி குடுககுமபடியான பெறபபடடது யாறது சொலலும

மறு. நாயன நாயககன முனைாலெ தன பெறாலே தான பிறாது காரனபெறால பிறாது யெழுதி குடுததாக நாயனனாயகன சொலல யெனககு தெரியும.

1845 யெபபரல மி யஉ உ யெசவிநத றாவு.க 2

வாக்குமூலம்

1. யைபபறல - ஏப்பிரல், 2. ஸ்ரீ மகாறாஜா சாயபு - தஞ்சை மராத்தி அரண்மனை, அபர்கள் திவானததுககு அலுவலகத்திற்கு, 3. வஜறததுமாய - அரச குடும்பத்தைச் சார்ந்த பிரபு, 4. சாஷசி சாபுதாவில - சாட்சிப் பட்டியலில், 5. யெதிரிகள் - எதிரிகள், 6. சமாசாரம - செய்தி, 7. செவிதது கொணடிருநத - பணி செய்து கொண்டிருந்த, 8. செயிகிரதாயி - செய்வதாக.

விளக்கம் : 1845-ஆம் வருடம் ஏப்பிரல் மாதம் 12-ந்தேதி ஸ்ரீ மகாராஜா சாயபு அவர்கள் திவானத்துக்கு

கேள்வி : ஷீராச்சாமி, அரச குடும்பத்தைச் சார்ந்த பிரபு நலகைராவு. கொடுத்த பிராதுடன் கொடுத்த சாட்சி பட்டியலில் எதிரிகள் ஸ்ரீ துக்கோசி சாயபுக்கு செய்த சங்கதிகள் கண்டு அதில் உனது பெயர் சாட்சியாக உள்ளது. விபரம் உனக்குத் தெரியுமா?

மறுப்பு : மேற்படி துக்கோசி சாயபுவிடம் வேலை பார்த்துக் கொண்டிருந்த நாயன்ன நாயக்கன் என்பவன் சாட்சியாக பட்டியலில் என்னுடைய பெயர் இருப்பதாக சொன்னான். அதன் பேரில் இப்படிக்கு நாயன்ன நாயக்கன் சொல்லியிருக்குரதாக

பிராதுகாரராகிய ஷீராசாமி நல்கை ராவ்விடம் சொல்லி மேற்படி பிராது நகலும் சாட்சி பட்டியல் நகலும் மேற்படி நயன்ன நாயக்கனிடம் தானே இருப்பதாக மேற்படி பிராதுகாரர் சொன்னார்.

கேள்வி : மேற்படி பிராது எழுதி கொடுக்கும் படியாக கூறியது யார் என்று சொல்லும்.

பதில் : மேற்படி நாயன்ன நாயக்கன் முன்னாலே தன் பெயராலேயே தான் பிராது காரன் பெயரால் பிராது எழுதி கொடுத்ததாக மேற்படி நயன்ன நாயக்கன் சொல்ல எனக்குத் தெரியும்.

1845 ஏப்ரல் மாதம் 12-ந்தேதி எசவிந்தராவ்.க வாக்குமூலம்

ஆவண எண் 718

மூட்டை எண் : 5ஹ, காலம் : 15.04.1845, நீளம் : 36.7, அகலம் : 28, பக்கம் : 2, வரிகள் : முதல் பக்கம் 26 இரண்டாம் பக்கம் 11.

அமைப்பும் விளக்கமும்

எசவிந்த ராவ் காயகவாகுவிடம் நடைபெற்ற விசாரணையில் துக்கோசி சாயபு இறந்த போனதற்கும் பிறகு என்ன நடந்தது என்ற கேள்விக்கு அவர் சுவாசமில்லாமல் போனபின் மருத்துவர் வந்தார். மனோஜி போசா என்பவர் சகாரம் சிந்தேயுடைய குழந்தையை சாயபு தெரிந்து கொண்டதாகக் கூறினார். குழந்தையை தத்து எடுத்தார் என்ற கேள்விக்கு தான் அவ்விடத்திற்கு சென்ற பிறகு தத்து செய்யவில்லை. ஆனால், மானோஜி போசா சாயபு என்பவர் குழந்தை துக்கோஜி தத்து எடுத்துவிட்டார் என்று கூறினார். மறுநாள் ஒரு பத்திரத்தில் எல்லோரிடமும் கையெழுத்து வாங்கினார். தானும் அதில் கையெழுத்து இட்டதாக கூறியுள்ள செய்திகள் இந்த ஆவணத்தில் உள்ளன.

மூலம் முதற்பக்கம் உ

1845 யெப்பறல யருஉ

ஸ்ரீ மகாராசா சாயபு அவாகள திவானததுககு

யெசவிநதறாவ கயகக வாகுவை விசாரணை

கே : ஸ்ரீ துகமொசி சாயபு யெறநது பொன அனணையை தினம அவற யெறநது பொனதுககு மெல நடநத காரியமெனன

பதி : சுககுப பொடடு உளதின பரகு சுவாசமிலலாமல பொனது தெரிநததுககு பின டாக குதருடைய தீாசா அவவிடததுககு வநதாா அவரிடததில நடநத சமாசாரததைச சொனனென உடனெ பாகுதரும வநதாா அவரிடதலி நடநத சமாசாரததை னான சொலலும பொது மானொசிபொசாவில யெமபவன சகாறாம சிநதையுடைய குளநதைய யெறநது பொன துககொசி சாயபுககு சமீபததில கொணடு வநது துககொசி சாயபு தெரிநது கொணடதாக சொனனாா. அது காாியம யெகைகு தெரியாதுனால னான அபபடிககி சொலல விலலை அநத மானொசி பொச தரிடததில அவவிதமாயச சொனனாா அதறககுரியிது காாியம மகறாசா சாயபு அவாகளிடததில தெரியபபடுதத வெணுமெ யனனியில நமமிடததில செலல வெணடியதெனன வெனடு டாககுதா சாயபு சொலலி தன சாகைககி பொயி விடடாா

கே : குளநதையை துககொசி சாயபு சுவிகாரம பணணிக கொணடது உமககு தெரியா தெணடு செலலலுகுரீறெ நீா அவவிடதில பஙகு னாயகக றயிருநதவறானதால உமககு தெரியாமல யெபபொ கவிகாரம ஆகியிருககலாம

பதி : அனனைய தினம சாயிறெஷைச வெளையில னான அவிடததுககுப பொனென அபபொது துககொஜி சாயபு அவாகள யாதொரு உபாதி யனனியில திடமாக வெயிருளதாா. எநதவித சுனககமும காணபபடயிலலை.

இரண்டாம் பக்கம்

நான பொனதறகு அபபால சுவிகாரம ஆகயிலலை. ஆனால அனனைய தினம சகாறாம சிநதை குளநதைய சுவிகாாம பணணிக கொணடி ருளதார மருனாள கிவிறாசிகக குழநதையை துககொஜி சாயபு தெரிநத கொடதாய ஒரு பதிரம யெழுதி அதில யெலலாரும கையெழுதது வைத்தாாகள னானும அதில கையெழுதது வைத்திருகக கிறென

கே : சிரிககை றாவு குழநதையை ஷ துககொசி சாயபு தெரிநது கொணடது யெபபொ

பதி : அது யெபபவொ எனககு தெரியாது யெலலாரும அநத் பதிரதில கையெழுதது வைததபடியால னானும கையெழுதது வைதிருகுறென

*1845 யெபபிரல மி யருஉ யெசநதராவு கயகக வாகு 3 வாககுமூலம*

*1. அணணைய தினம - அன்றைய தினம், 2. டாககுதா - மருத்துவர், 3. வெணடுடாகுதருடைய - என்று மருத்துவருடைய, 4. சாககிி - வேலைக்கு, 5. சாயறெனஷ - மாலைவேலை, 6. தெரியாதெணடு - தெரியாது என்று, 7. மறுனாள கிவிறாசிகெ - மறுநாள் கிருஷ்ணராஜிக்கே, 8. பதிரம - பத்திரம்*

*1845-ஆம் வருடம் ஏப்ரல் மாதம் 15-ந் தேதி ஸ்ரீ மகாராசா சாயபு அவர்கள் திவானத்துக்கு காயக்க வாகுவை விசாரணை*

*கேள்வி : ஸ்ரீ துக்கோசி சாயபு இறந்து போன அன்றைய தினம் அவர் இறந்து போவதற்கு முன் நடந்த காரியமென்ன?*

*பதில் : சுக்கு போட்டு ஊதின பிறகு சுவாசமில்லாமல் போனத தெரிந்ததர்க்குப் பின் மருத்துவரின் உதவியாளர் அவ்விடத்திற்கு வந்தார். அவரிடத்தில் நடந்த விபரத்தை சொன்னேன். உடனே மருத்துவரும் வந்தார். அவரிடமும் நடந்தவைகளை விபரமாக கூறினேன். அவ்வாறு கூறும்போது மானோஜி போசா என்பவர் சகாராம் சிந்தையுடைய குழந்தையை இறந்துபோன துக்கோசி சாயபுக்கு சமீபத்தில் கொண்டுவந்து காட்டினேன். மேற்படி குழந்தையை மேற்படி துக்கோசி சாயபு தெரிந்து கொண்டதாக சொன்னார். அந்த செய்தி எனக்கு தெரியாது என்பதால் இந்த விசயம் மகாராசா சாயபு அவர்களிடம் தெரியபடுத்த வேண்டுமே யன்னில் நம்மிடத்தில் சொல்ல வேண்டிய தென்ன என்று கூறினேன்.*

*கேள்வி : மேற்படி சிரிக்கைராவு குழந்தையை மேற்படி துக்கோசி சாயபு தெரிந்து கொண்டது எப்போது?*

*பதில் : அது எப்போது என்பது எனக்குத் தெரியாது எல்லோரும் அந்த பத்திரத்தில் கையெழுத்து வைத்தப்படியால் நானும் கையெழுத்து வைத்திருக்கிறேன்*

*1845-ஆம் வருடம் ஏப்ரல் மாதம் 15-ந்தேதி யசுவந்தராவ் கயக்கவாகு வாக்குமூலம்*

*கேள்வி : ஆவண எண் 619, 620-இல் கொடுக்கப்பட்டள்ள செய்தியாக துக்கோசி சாயபு இம்சையினால் இறந்து போனதாக 1845-இல் ரெசிடெண்டு துரையவர் அவர்களிடம் பிராது கொடுக்கப்பட்டிருக்கிறதே அதில் முக்கிய இரண்டு பெயர் காணாமல் உள்ளதே அவர் பெயர் என்ன என்று கடைசி சிவாஜி மன்னர்*

விசாரணை செய்கிறார். அந்த ஈரண்டு பேர்களின் பெயர்களை கூறுமாறு ஷீருசாமி நல்கேராவிடம் கேள்வி கேட்கப்படுகிறது.

பதில் : அவர் பெயர் யசவந்தராவு காயிக்கவாகு ஆகும்.

கேள்வி : பிராதில் கார்பார் என்று பெயர் உள்ளதே அவர் பெயரென்ன?

பதில் : அவர் என்னுடைய தகப்பனார் வெங்கடரவு நல்கே என்று கூறுகிறார்.

கேள்வி : 1845-இ மார்ச்சு மாதம் 24-ல் குடுத்திருக்கர பிராதில் துக்கோசி எதிரிகளால் இம்சை படுத்தப்பட்டு இறந்தார் என கொடுக்கப்பட்டிருக்கிறதே அந்த செய்தி யாரால் உமக்கு தெரிந்தது.

பதில் : துக்கோசி சாயபு விடத்தில் பங்கு நாயக்கனாக இருந்து யெசவந்தராவு கயக்கவாகு சொல்ல எனக்கு தெரியவந்தது.

மராட்டிய மன்னர் ஏகோசியின் மூன்றாவது மகன் துக்கோஜியின் இறப்பில் சந்தேகம் உள்ளதை தெளிவுபடுத்திக் கொள்ள விசாரணை நடைபெற்றுள்ளது. அரண்மனை ஊழியர்கள் அவர் இறக்கும் தருவாயில் அவர் அருகில் இருந்த ஊழியர்கள் விசாரணை செய்யப்பட்டதற்கான சான்றுகள் ஆவணங்களில் காணப்படுகின்றன. துக்கோஜியின் இறப்பு உடல் உபாதையால் மட்டுமல்ல, சித்ரவதை செய்யப்பட்டு இறந்துள்ளார் என்பதை அரசரின் மெய்க்காப்பாளர் கூறியுள்ளார். அதற்கான விசாரணைகள் நடத்தப்பட்டுள்ளன. ஆவணம் முழுமையாக இல்லை. ஆகையினால் இம்சை படுத்தியவர்கள் யார் என்பதற்கான ஆதாரங்கள் கிடைக்கவில்லை.

மேற்கோள் நூல்கள்

மூட்டை எண் : 5ஹ, ஆவண எண்கள் : 712, 715, 718, 619, 620, காலம் : 1845, தமிழ்ப் பல்கலைக்கழக அரிய கையெழுத்துச் சுவடித் துறையில் நூலாக வெளிவராத மராட்டியர் கால தமிழ் ஆவணங்கள்.

வேட்டுவர் கல்வெட்டு

பி.ஆனந்தகுமார், பெரியார் திருமான்குறிச்சி

இடம் : ஈரோடு மாவட்டம், பவானி வட்டம், ஒடத்துறை பட்டையகாளிபாளையம் கிராமம், காளத்தீஸ்வரர் கோயில்.

**காலம் : பொ.ஆ.1913**

செய்தி : வேட்டுவ குலங்களில் வேட வேட்டுவ குலம், வேட்டுவ குலம், மாவலி வேட்டுவ குலம், பூலுவ வேட்டுவ குலம், காவல வேட்டுவ குலம் என்ற ஐம்பெரும் பிரிவுகள் உண்டு. இவர்கள் கண்ணப்ப நாயனாரின் வம்சா வழியினர் ஆவார்கள். தெற்கு சுவர் கல்வெட்டு வேட்டுவ குலத்தின் சிறப்பை கூறுகிறது. பழைய கோயில் இருந்த இடத்தில் 102 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது ஆங்கில ஆண்டு கி.பி.1913-இல் நிர்மாணம் செய்யப்பட்டுள்ளது என்பதை வடக்கு சுவர் கல்வெட்டு மூலம் அறியலாம்.

*72:1*

தெற்கு சுவர் : 'ஸ்ரீகணேசாய நம பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றாகி ஸ்ரீ காளத்திநாதர் ஆதினம் கண்ணப்பகோத்திர வில்வேடுவர் வேட்டுவர் மாவுலவர் பூவுலவர் காவுலவர் இதைச் சார்ந்த 32 ராயர்குலம் லட்சத்தி எட்டு வீரகுலத்தவர்களும் வெற்றிவாளும் வீரதண்டும் புலிக்கொடியும்'.

இக்கல்வெட்டின் தொடர்ச்சி கிழக்கு திசையில் சுவரில் உள்ளது. தற்போது அது படிக்க இயலாதவாறு முன் மண்டபச் சுவருக்குள் அடைபட்டுவிட்டது.

*72:2*

**வடக்குச் சுவர் :**

'கலியுக ஆண்டு 5015 சாலிவாகன சகாப்தம் 1836 கொல்லம் ஆண்டு 1089 பிரமாதீச வருசம் தை மாதம்'.

*72:3*

**வடக்குச் சுவர் :**

'ஆதீனம் சர்வல்லவராய சுவாமிகள் பரம்பரை சிதம்பர ஸ்மேகல்ப குமாரர் பழனிச்சாமி தேசிகரால் நிர்மானம் செய்யப்பட்ட ஆலயம்'.

## 73. ஈடு கணக்கு ஓலைச் சுருள்கள்

சு. இராசகோபால், சென்னை

சென்னை கோடம்பாக்கத்தில் 'முற்றம்' என்ற இதழ் வெளியீட்டாளர் / ஆசிரியர் திரு.தளபதி வேலன் அவர்களிடம் 20-க்கு மேற்பட்ட ஓலைச் சுருள்களும் ஜாதகச் சுவடிகளும் உள்ளன. இவர் இராமநாதபுரம் இளையான்குடியைச் சேர்ந்தவர். ஓலைச் சுருள்கள் ஈக்கு குச்சி இல்லாத சிறகு ஓலைகளை எடுத்து அவற்றில் எழுதி சுருட்டி வைக்கப்பட்டுள்ளன. சுருட்டப்பட்ட ஓலையின் இறுதிப் பகுதியில் சற்று முன்பாக பாதி அளவு நறுக்கப்பட்டு இறுதி நுனிப்பகுதியிலும் எதிர் பாதி பகுதி நறுக்கப்பட்டு இந்த வெட்டுப் பிளவுகள் ஒன்றுடன் ஒன்று சொறுகப்பட்டுள்ளன. இதனால் அந்த சுருள் பிரியாமல் இருப்பதுடன் எழுதப்பட்ட எழுத்துக்களும் உட்பகுதியில் அமைந்து எளிதில் வெளியே தெரிய இயலாது மறைக்கப்படும் வசதியும் கிடைக்கிறது. இவ்விதம் இணைக்கப்பட்ட பகுதிகளிலேயே முத்திரைகள் வைக்கப்பட்டு மாதவி கொடுத்தனுப்பிய 'முடங்கல்' இருந்திருக்கக்கூடும் என்று கருதலாம்.

இவ்வோலைச் சுருள்கள் ஈடுகடன் கொடுக்கப்பட்ட செய்தியைக் கொண்டுள்ளன. 'கைக் கணக்கு' என்றும், 'வரவு கணக்கு' என்றும் இவ்வோலைகளில் இவை குறிக்கப்படுகின்றன. முதல் ஓலை (ஆட்டு) மந்தையை ஒத்தி வைத்து இங்கிலாந்து இராணி தலை (சிரசு) உருவமுள்ள இரண்டு ரூபாய் வாங்கியதைக் குறிக்கிறது. இந்த 'கைக்கணக்கை' கணக்கு பொன்னையாத் தேவன் எழுதியுள்ளார். முத்துச்சாமி உபாத்தியார் அறிவேன் என்று சாட்சி சொல்லியுள்ளார். இதனில் குறிக்கப்படும் இராட்சச தமிழ் வருடம் பொ.ஆ. 1855 ஆகலாம்.

இரண்டாவது ஓலைச் சுருள் பராபவ வருடம் பொ.ஆ. 1867-இல் எழுதப்பட்டுள்ளது. ஒரு ஜோடி தங்க மேலிடு (காதணி) திருகாணியுடன் ஈடுவைக்கப்பட்டு 15 ரூபாய் கடன் வாங்கப் பட்டுள்ளது. இதற்கு மாத இலாபம் / வட்டி ரூபாய்க்கு (16 அணா / ரூபாய்) ஐந்தரை அணா என நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இரண்டு ஓலைகளிலும் மந்தை, தங்கமேலிடு வைத்துக் ஈடுகள் பெற்றவர் பிச்சைமுத்து உபாத்தியார். கடன் கொடுத்தவர் முதல் ஓலையில் முருகப்ப கோனர் மகன் முத்தழகன் இரண்டாவது ஓலையில் முத்து கருப்பபிள்ளை மகன் கவயாம்பு பிள்ளை. எனவே, கடன் பெற்ற பச்சைமுத்து உபாத்தியார் கடனைத் தீர்த்து இந்த ஓலைகளைத்

திரும்பப் பெற்றுக் கொண்டுவிட்டார் என்றும் கருதலாம்.

**ஓலை- 1**

**முன்பக்கம் : பத்தி - 1**

1. ராட்சதா ௵ வைகாசி மீ 22உ ஊசப்பனூர் உள்க்கடை
2. கண்ணப்பன் குடியிருப்பிலிருக்கும் முருகப்ப கோ -
3. னான் மக்கள் முத்து முத்தளகனுக்கு ஷெ யூரிலி -
4. ருக்கும் சூசை கோனான் மகன் பிச்சைமுத்து
5. உபாத்தியார் யெளுதிக் கொடுத்த கை கணக்கு

**பத்தி - 2**

6. யென் குடும்ப ராத்தினைக்காக தங்களிடத்தில் யிங்களா
7. ராணி சிரசு ரு[1]2 யிந்த ரூபாய் இரண்டும் நான் ரொக்கம்
8. பற்றிக் கொண்டபடியினாலே நான் தங்களிடம் ஒத்தி
9. வைத்திருக்கிற மந்தை ஸபகூ....ௐ ஒத்தி தொகை கொடுத்து
10. திருப்பிறபோது இதில் கண்ட

**பின்பக்கம் : பத்தி - 1**

11. ரூபாய் இரண்டையும் கொடுத்து திருப்பிக் கொள் -
12. வேனாகவும்
13. எஸ் பிச்சை முத்து உபாத்தியார்
14. அறிவேன் சா முத்துச்சாமி
15. உபாத்தியார் கிளாஞ்சனி

**பத்தி - 2**

16. யிந்த கை கணக்கு யெளுதிநேன் இவ்வூரில் இருக்கும்
17. கணக்குப் பொன்னையாத்தேவன்

**ஓலை - 2**

**முன்பக்கம் : பத்தி - 1**

1. பராபவ ௵ சித்திரை மீ 17 உ ஆயக்குடியிலிருக்கும்
2. கஸ்தூரி முத்துக்கறுப்ப பிள்ளை மகன் கவயாம்பு பிள்ளை
3. வரவு கிளாஞ்சனியிலிருந்து ஆயக்குடியில் வந்தி -

4. ருக்கும் சூசை கோனார் மகன் பிச்சமுத்து

5. உபாத்தியாற் பற்று நாளது என் குடும்பார்த்த சில

**பத்தி - 2**

6. வுக்காக தங்களிடம் ரொக்கம் வாங்கினது

7. ரூ 15 யிந்த பதினைந்து ரூபாயும் நான் பற்றிக் -

8. கொண்டபடியினாலே இதற்கு லாபம் மீ 1-க்கு வட்டி

9. ரு காலே வீசம் மாகாணி வீதம் வட்டி சேர்த்துக் கூடிய வட்டியும் முத

10. லும் தாங்கள் வேண்டும்போது செலுத்தி வைத்து யிந்த பத்து

11. வரவு கணக்கை வாபஸ் பெற்றுக்கொள்

பின்பக்கம்

12. வேனாகவும் இத்துட ஒரு ஜோடி தங்கமேலிடு ஈடுவைத்திருக்கிறது
திருகாணியுள்பட

13. இப்படிக்கு பிச்சை முத்து உபாத்தியார்

14. இந்தபடி வரவு கணக்கு எழுதினதுக்கு சாக்ஷியாவன ஆயக்குடி பிள்ளை மகன்

15. வெள்ளைச்சாமி உபாத்தியார்.



# 74. கோவிலூர் முத்திரைத் தாள்கள்

சு.இராசகோபால், சென்னை

காரைக்குடியை அடுத்துள்ள கோவிலூரில் நகரத்தார்களுக்கான மடாலயம் உள்ளது. இதற்கு மதுரை, நாகை, திருவண்ணாமலை, சிதம்பரம் என்று பல இடங்களிலும் கிளைகள் உள்ளன. இக்கிளை மடங்களுக்கான நிலங்களும், மனை, வீடுகளும் உள்ளன. அவை பூர்வீகமாக உரிமை உடையவர்களால் கொடையாக நல்கப் பட்டவை. கொடையாளர்கள் தங்களுக்குரிய வீடுகள், மனைகளைக் கிளை மடங்களுக்கு நல்கும்போது மூல ஆவணங்களையும் சேர்த்துக் கொடுத்துள்ளனர். அப்படி கொடுக்கப்பட்டட ஆவணங்கள் முத்திரைத் தாள்களில் எழுதப்பட்டவை. பொ.ஆ. 1872 முதல் 1900 வரையிலான இம்முத்திரைத் தாள்கள் முதலில் வட்டமான முத்திரையும் அதனில் பிரித்தானியக் கொடியும் அச்சிடப்பட்டு உள்ளன. தெலுங்கு, தமிழ், உருது, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் அதன் ரூபாய் மதிப்பு அச்சிடப்பட்டுள்ளது. பின்னர், அரசியாரின் உருவமும் உருது, ஆங்கில மொழியில் ரூபாய் மதிப்பு அச்சிடப் பட்டுள்ளது. 'Stamp Office Madras' என்ற மை முத்திரை இடப்பட்டு அதனில் நாட்குறிப்புள்ளது. அவற்றின் படங்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

படங்கள் 1, 2 : 1872 ஆகஸ்ட் 6-ஆம் தேதி எழுதப்பட்ட ஆவணம். 10 ரூபாய் மதிப்புடையது. Stamp Office Madras முத்திரை 3 May 1872 என்று இடப்பட்டுள்ளது. சிங்கமும் குதிரையும் அரச கிரீடத்தின் இருபுறமும் உள்ளவாறு ஆங்கில இலாஞ்சினை அச்சிடப்பட்டுள்ளது. ஒரு ரூபா என்று தமிழிலும் தமிழ் எண் 'க' வும் அச்சிடப்பட்டுள்ளன. கருநீல வண்ணத்தில் உள்ளது.

படம் - 3 : 1879 அக்டோபர் 1-ஆம் தேதி எழுதப்பட்ட ஆவணம் கூநடே சுரயீநநள என்று ஆங்கிலத்திலும் உருதிலும் உள்ளது. தமிழ் இல்லை. அரசியாரின் உருவமும் அதனைச் சுற்றி Ten Rupees, India என்ற சொற்களும் உள்ளன.

படம் - 4 : 1886 செப்டம்பர் 22-தேதி எழுதப்பட்ட ஆவணம் Four Annas என்று ஆங்கிலத்திலும் உருதிலும் உள்ளது. நடுவில் அரசியார் உருவமும் Four Annas என்று வளைவாகவும் India என்று அரசியர் உருவத்தின் கீழும் உள்ளன. நீல நிறத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

படம் - 5 : 1888 பிப்ரவரி மாதம் 14-ஆம் தேதி எழுதப்பட்ட ஆவணம். Ten Rupees என்று ஆங்கிலத்திலும் உருதிலும் உள்ளது. தமிழ் இல்லை. அரசியாரின் உருவமும் அதனைச் சுற்றி Ten Rupees என்று ஆங்கிலத்திலும் உருதிலும் உள்ளது. நீல நிறத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

படம் - 6 : 1888 மார்ச்சி மாதம் 4 தேதி ஆவணம். Eight Annas என்று ஆங்கிலத்திலும் உருதிலும் உள்ளது. அரசியார் உருவம் ஒரு மலர் அமைப்பின் நடுவில் உள்ளது. சுற்றி இரு வரிசைகளில் மலர் இதழ்களில் INDIA என்று அடுத்தடுத்து அச்சிடப்பட்டுள்ளது. அரசி உருவத்தைச் சுற்றி Eight Anns என்றும் கீழ் பகுதியில் INDIA என்றும் உள்ளது. நீலநிறத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

படம் - 7 : 1896 அக்டோபர் மாதம் 7 தேதி ஆவணம். One Rupee என்று ஆங்கிலத்திலும் உருதிலும் பெருக்கல் குறி அமைப்பில் அச்சிடப்பட்டுள்ளது. பெருக்கல் குறியின் வெளியே அரசியாரின் உருவம் இரு புறமும் அச்சிடப்பட்டுள்ளது. ஒவ்வொன்றிலும் Eight Annas INDIA என்று அச்சிடப்பட்டுள்ளது. பழுப்பு நிறத்தில் உள்ளது.

படம் - 8 : 1900 நவம்பர் மாதம் 4 ஆம் தேதி ஆவணம். Nine Rupee என்று ஆங்கிலத்திலும் உருதிலும் பெருக்கல் குறி அமைப்பில் அச்சிடப்பட்டுள்ளது. பெருக்கல் குறியின் வெளியே ஒரு புறம் அரசியார் உருவத்தின் மேல் INDIA என்றும் கீழ் Eight Rupee என்றும் அச்சிடப்பட்டுள்ளது. மறுபுறம் அரசியாரின் உருவத்தின்மேல் INDIA என்றும் கீழே One Rupee என்றும் அச்சிடப்பட்டுள்ளது. அவ்வகையில் எட்டு + ஒன்று = ஒன்பது என்று மதிப்பு வருகிறது. பழுப்பு நிறத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

ஓர் ஆவணத்தின் பின்புறம் கருப்பு மையில் இடப்பட்ட முத்திரை பிரின்சிபால் ...மதுரை Seal of the Principal ... amina Court of Madura மேலும் கருப்பு மையில் கீழ்கண்ட வாசகங்களிலும் முத்திரைகள் இந்த ஆவணங்களில்,

Seal of Sub Registrar மதுரை சப் ரிஜிஸ்தார் முத்திரை

Seal of Registrar Madura மதுரை ரிஜிஸ்தார் முத்திரை

Stamp Department Madura 3 Nov 1900

Stamp Office Madras 3 May (18)72

முத்திரைத் தாள்கள் போலியாக அச்சிட முடியாத வகையில் மாற்றங்களுடனும் எளிதில் தெரியாத சொற்களுடனும்

அச்சிடப்பட்டுள்ளன. பண்டைய ஆவணங்கள் உள்ளூர் கணக்கர்களால் ஓலையில் எழுதப்பட்டு உள்ளூரிலேயே பராமரிக்கப்பட்ட போது சிக்கல்கள் ஏதுமில்லாது இருந்தது. மதுரை, சென்னை என்று அரசு நிருவாகங்கள் ஆங்கிலேயர் காலத்தில் மையப்படுத்தப்பட்டதால் ஏற்படக்கூடிய சிக்கல்களைத் தவிர்க்க பல்வேறு முத்திரைகளும், முத்திரைத் தாள்களின் அமைப்புகளும் அவசியமாகிவிட்டது.








## 75. தேனி ஓலை ஆவணங்கள்

சு.இராசகோபால், சென்னை
கோ.உத்திராடம், அன்னம்பாக்கம்

தேனி பகுதியைச் சேர்ந்தவரும் சென்னையில் பணியாற்றிய வருமான அமரர் மல்லிகேசுவரன் பரமானந்தன் அவர்கள் முனைவர் கருப்பையா வழிகாட்டுதலில் தனது பொதுக் குடும்பத்தைச் சேர்ந்த ஓலை ஆவணங்களை படித்தறியக் கொடுத்துள்ளார். இவ் வோலைகள் கட்டு கலைந்து உதிரியாய் உள்ளவை. பல ஓலைகள் இல்லை. இவற்றில் மாணவர்கள் படித்தறியும் எண் சுவடிகள், கதிர்காம மாலை என்ற பாடல், ஆங்கிலேயர் காலத்தில் விவசாய வரிவிதிப்பு தொடர்பாக வழங்கிய ஓலை ஆவணங்கள் உள்ளன.

'கதிர்காம மாலை' என்ற பாடல் தொகுப்பில் ஏழு ஓலைகள் உள்ளன. 27 பாடல்கள் கிடைத்துள்ளன. இவ்வோலைக்கட்டு 'பண்டாரம் கதிர்காமம் மாலை ஏடு' என்ற குறிப்புடன் உள்ளது. எடுத்துக்காட்டாக இரண்டு பாடல்களை இங்கு பார்ப்போம்.

நித்தம் ஒனைத் துதித்து நீநிலத்தோர் கொண்டாட
பத்து லட்சங் கோடி தமிள்ப் பாட வரமே யருள்வாய்
அத்தனருள் குமறா ஆயோன் மருகோனே
கந்தனே யெங்கள் கதிர்காம வேலோனே - 2

பன்னிருகை வேலு முந்தன் பாசாங்கு சதறமும்
சண்முகங்க ளாறுஞ் சறவணத்திலே யுதித்து
துஷ்ட்டர்களை வெட்டித் துரத்தி வடிவேலெடுத்து
கட்டழகர் கண்டிக் கதிர்காம வேலோனே - 18

இப்பாடல்கள் சிறு ஓலையில் பக்கத்திற்கு இரண்டு பத்திகளாக எழுதப்பட்டுள்ளன. பேச்சு நடைத் தமிழும் கலந்துள்ளது. எல்லா பாடல்களும் 'கதிர்காமவேலானே' என்று முடிகின்றன. எழுத்தின் காலம் 19ஆம் நூற்றாண்டாகலாம்.

ஆங்கிலேயர்கால ஓலை ஆவணங்கள் பசலி மற்றும் ஆங்கில ஆண்டுக் குறிப்புகளைக் கொண்டுள்ளன. ஆயிரத்து எண்ணூற்று நாற்பதுகளில் மதுரை கலெக்டர் ஆளுமைக்கு உட்பட்டிருந்ததால் மதுரை சில்லா தென்கரை தாலூகா என்ற குறிப்புகள் உள்ளன. இதனில் சேகரமாக அடங்கிய புதுப்பட்டி, கோமல் கிராமங்கள் குறிக்கப்பட்டுள்ளன. இந்த ஆவணங்கள் பயிர் விளைச்சல்

தொடர்பாக விவசாய வரி குத்தகை வரி என அரசு வசூலிக்க கிஷ்திபந்தி, இசராபட்டயம் என்று நில விவரங்களும் ஒவ்வொரு பசலி ஆண்டு வரி விதிப்பும் அதைக் கட்ட வேண்டிய கால அளவும், மாதம், தேதி குறிப்புகளும் கொண்டுள்ளன. இவை ஆயிரத்து எண்ணூற்று நாற்பதுகளைச் சேர்ந்த மதுரை ஜில்லா கலெக்டர் பெயர்களில் வெளியிடப்பட்ட ஆணைகள். ஜில்லா கலெக்டர் பெயர்களாக மேஸ்தர் ஆர்.டி.பார்க்கர் துரை, எல்லீசு எலியாட் துரை, மேஸ்தர் அகஸ்டின் கிளாரேட் துரை ஆகியோர் பெயர்கள் காணப்படுகின்றன. ஓலையின் இறுதியில் பின்பக்கம் அழுத்தி முத்திரை பதிக்கப்பட்ட ஆங்கிலச் சொற்களும் உள்ளன. எடுத்துக்காட்டாக இங்கு மூன்று ஆவணங்கள் தரப்படுகின்றன.

**ஓலை 1 :**

முன்பக்கம் :

1. ... மன் கோவில்பட்டி

2. ண்டன் முத்திலிங்க கவண்டன்

1. மதுரை ஜில்லா காலக்கட்டறாகிய மகாராஜ மானிய ராஜராஜ ஸ்ரீ மேஷ்த்தர் ஆர்.டி.பாக்கர் துரையவர்கள் 1வது தென்கரை தாலுகாச் சேகறம் கோமல் கிறாமம் பயிரிடும் குடியான முத்துலிங்க கவண்டனுக்கு எழுதி வைத்து குடுத்த இஷ்றராப் பட்டயம் யென்னவெ[ன்றால்]

2. 2வது 1264-ம் பசலி ஆடி மாதம் முதல் ஆனி மாதம் வரை வருஷம் ஒன் பற்றடப்புக்கு நஞ்சை புஞ்சை தோட்டம் வகைறா நீ சாகுபடி செய்த நிலங்கழுக்கு விபரம் 704 நி 189

பின்பக்கம் :

3. 3வது இதனடியில் கண்டிருகுர கெஷ்திப் பந்திப் பிரகாரத்தில் சர்காரிப் பணம் செலுத்திவிட்டு ரசீது வாங்கிவரவும் கெஷ்த்திப் பிந்தி 1854 வருஷம்.... டிசம்பர் மாதம் 25 தேதி

4. .....

**ஓலை 2**

முன்பக்கம் :

1. மதுரைச் சில்லாக் கலெக்கட்டறாகிய மகா ராஜராஜ ஸ்ரீ மேஷ்த்தற் ஆர்.டி.பாக்கர் துறையவற்கள் - 1 வது : தென்கரை

தாலூக்காகச் சேகறம் புதுப்பட்டி கிறாமத்தில்ப் பயிரிடுங்குடி ஸகுருவன்சோலை௵யாகிய உனக்கு

2. யெளுதிக்குடுத்த யேகசால் யிசறா பட்டையம் - 2 வது : 1263 ஸபசலி௵ ஆடி மாதம் முதலாணி மாதம் வரைக்கும் வருஷம் 1க்கு பத்தடப்புக்குச் சேற்ந்த நஞ்சை புஞ்சை தோட்டம் வகையறாக்கு நீ சாகுபடி செய்த நிலங்களுக்கு விபரம்

3. செய்த - நஞ்சை 259 நி க்கு ... கா டு 25 .................. ரூ 1 3/4 உ

4. 3வது : மேற்படி துகை யிதனடியில் கண்டிருக்கிற கிஷ்த்திப் பந்திப் பிறகாரம் சர்க்காரில் பணம் செலுத்தி... ரசீது வாங்கி வரவும் - கிஷ்த்திப் பந்தி 1853 ௵ நவம்பற் மாதம் 15க்கு 6

5. ரு டிசம்பர் மாதம் 15க்கு உ வரவு தீர்வை 1854 செனவரி மாதம் 15 தீர்வை 6 பிர்ப்பவரி மாதம் 15க்கு 6 மார்ச்சி மாதம் 15 உ வரவு தீர்வை 6

6. யேப்பிறல் மாதம் 15 தீர்வை 6 மெய் மாதம் 15 8 சூன் மாதம் 15 4வது : கிஷ்தி பணம் செலுத்திவிய்யாமல் பாக்கி நின்றால் நின்ற பணத்துக்கு திட்ட

7. படிக்கி வட்டியுடனே திட்டத்தில் கண்டிருக்கிற மாற்க்கப்படிக்கி ஒன்னிடத்தில் வாங்கப்படும் 5வது : பட்டயத்துக்கு கதியமாயி தொறு சிலவுக்காவது ரூ யெவ்வளவு குடுக்க

8. வேண்டியதில்லை 1854 வருஷம் பெப்பரஸவரி௵ 14.

**ஓலை 3**

முன்பக்கம் :

1. மதுரை சில்லா வகையறா சப் கலெக்டர் மகா ராசாமாணியராஜஸ்ரீ மேஷ்தற் ஆய்டிங்க் டி.கிளாரேட்டு துரையவற்களாவது தென்கரை தாலுகா சேகரம் புதுப்பட்டி கிறாமத்தில்ப் பயிரிருடு குடிகளாகிய

2. குரிய கவுண்டனுக்கு யெழுதிக்குடுத்த இசாறப் பட்டயமாவது 1256 பசலி ஆடி முதல் ஆனிவரைக்கும் நிலம் காலுன்பத்த அடப்புக்கு நஞ்சை புஞ்சை தோட்டம் வகையறா நிசோபாத நிலங்களுக்கு விவரம்

3 - 6. (விவரங்கள் குறியீடுகளிலும் தமிழ் இலக்கங்களிலும் உள்ளன).

பின்பக்கம் :

7. 3வது : ஷ்டி துகையை ஷியார் கண்டுயிருக்கும் கிஷ்த்தி பந்தி படிக்கு சற்க்காரில் பற்று செலுத்தி 4 றசீது வாங்கி வரவு கிஷ்திபந்தி 1846 ஞூ நவம்பர் மீ 112 கலம் உ டிசம்பர் மீ 3/2 கலம் 3.

8. 1847 ஞூ சினிவரி மீ 3/2 கலம் 3 பிப்பிறவரி மீ மீ 11 உகலம் 3 மார்ச்சி மீ 112 3 1/2 கலம் 5. யேப்பிரல் மீ 3/2 3 1/2 கலம் மேய் மீ 112 3 1/2 கலம்.

9. சூன் மீ 112 7 1/2 கலம். 4வது கிஷ்த்தி பணம் செலுத்திவிய்யாமல் பாக்கி நின்று நின்ற பணத்துக்கு திட்டபடி வட்டி உடனே திட்டத்தில் கண்டு இருக்குற மாற்க்க படிக்கி உனிடத்தில்

10. வாங்கப்படும் 5வது : பட்டயத்து அதிகமாய் யாதொரு சில்லுகாவது நீயே வேறு குடுக்க வேண்டியதில்லை 1847 சூலை மீ 29 உ.

## 76. அரசு முத்திரையிட்ட விலை ஓலைப்பத்திரம்.

செந்தீ நடராசன்
உதவி: அ.கா.பெருமாள்

கன்னியாகுமரி மாவட்டம் நாகர்கோவில் கோட்டாறு ஊரைச்சார்ந்த திரு. எம். ஏ. சவரிதாசன் வில்லவராயர் மகன் இராஜன் வீட்டில் இந்த ஓலைச் சுவடி உள்ளது.

இதன் காலம் - கொல்லம் 1047, சித்திரை 23; பொது ஆண்டு 1872, மே 3. சனிக்கிழமை

இது ஒரு விலை ஓலை ஆவணம் முதல்பக்கத்தில் 6 வரிகளில் ஆவண விவரமும் பின்புறத்தில் பத்திரப் பதிவாளர்கள் குறிப்புகளும் உள்ளன.

1. 1041 வருடம் சித்திரை மாதம் 13- ந்தேதி கோட்டாறு பிடாக கௌலியில் கோட்டாறு கத்தி பண்டி ஸல் அந்தோணி பாக்கியத்துக்கு மேல்படியில் கத்தி மேல்படி மாதவடியான தொம்ம சவரி முத்து எழுதிக்கொடுத்த வில ஓலையாவிது
2. அகஸ்தீஸ்வரம் மண்டபத்து வாதுக்கல் கோட்டாறு பிடாக கௌலியில் வடிவீசுவரம் பவுதியில் கோட்டாறு கத்திக்காரத் தெருவில் சலியென் அந்தோணி வீட்டுமனக்கும் மேக்கு பேதக்கு சலியென் ஸலி மனக்கும் வடக்கு
3. சந்தியாவு சவரிமுத்து வீட்டு மனக்கும் கிழக்கு மெயிகெல் தொம்மக்கண்ணு வீட்டு மனக்கும் தெக்குமாக இவ னடுவில் 4 ஸெ(க்)ன்ற்று 228 ல் சென்மம் கோட்டாறு தேசிவினாயகப் பிள்ளயார் ஸ்வாமி வக ஸலி மனயில் ஞான் என்ற
4. கய்யாலளிச்சும் பணம் சிலவு செயிது கெட்டுயிரிக்குந்ந மேல்கூரக்கு மாத்திரம் மேல்படியானோடு 251 பணம் அரகம் கினக்க வாங்ஙிச்சும் கொண்டு விலையாயி எழுதிக் கொடுத்திருக்குந்ந தினாலண்ணு முதல் மேல்படியான் த
5. ன்னே அனுபவிச்சு மேல்படி பிள்ளயார் ஸ்வாமி வகக்கு ஆண்டு 1 க்கு 6 பணம் வீதம் கொடுத்து வந்நது போலே மேல்படியானும் கொடுத்து பற்று சிட்டிவும் வாங்ஙிச்சு கொள்ளுமாறும் இப்படி ஸம்மதிச்சு அந்தோணிபாக்கிய

6. த்துக்கு இந்த வில ஓல எழுதிக்கொடுத்த மாதவடியான் தொம்ம சவரிமுத்து இதிக்கு ஸாக்ஷி கோட்டாறு கத்திவண்டி ஸல் சாந்தக்குரிசு மாதவடியான் (ஒப்பம்) மேல்படியில் கத்தி மேல்படி ஸல் சந்தியாவு அந்தோணி (ஒப்பம்)

**ஆய்வுக்குறிப்புகள் -**

ஓலை 66 செ.மீ. நீளம் 3.5 செ.மீ. அகலம். இருபக்கமும் 6 + 5 வரிகளில் எழுத்துக்கள் குமரி மாவட்டம் திருவிதாங்கூர் அரசர்களின் ஆட்சியில் இருந்த போதுள்ள அரசு முத்திரையுடன் கூடிய ஓலை ஆவணம். அன்று காகித எழுத்து ஆவணங்கள் வழக்கில் வந்துவிட்ட போதிலும் ஓலை ஆவணங்கள் பெருவழக்காக இருந்ததாகத் தெரிகிறது. அரசர் ஆயில்யம் திருநாள் ராமவர்மா(1860 - 80). ஆவணத்தில் உள்ள பல சொற்கள் அக்காலச் சமூக வரலாற்றை அறிய உதவுவன. ஆவணத்தில் கொல்லம் ஆண்டைக் குறிப்பிட்டாலும், தென்பகுதி மக்கள் தமிழர்கள் என்பதால் மலையாள மாதப் பெயருக்குப் (மேஷம்) பதில் தமிழ் மாதப்பெயரான சித்திரையே குறிக்கப்பெறுகிறது. "கோட்டாறு பிடாகை கௌலியில்" நாஞ்சில் நாட்டின் பயிர் நிலஞ்சார்ந்த விவசாய நிலப்பிரிவாக 12 பிடாகைகள் குறிக்கப்பெறுகின்றன. அவற்றுள் இன்றுள்ள நாகர்கோவிலை உள்ளடக்கிய பெருநகரான கோட்டாறு முக்கிய பிடாகை. கௌலி என்பதற்கு லெக்சிகன் 'குறிப்பிட்ட காலஅளவு குறிப்பிட்டோ அல்லது நிரந்தரமாகவோ கொடுக்கப்படும் நிலக்குத்தகை உடன்படிக்கை' என்று பொருள் தருகிறது. ஓலை ஆவணத்தில் குறிக்கப்பெறும் நிலம் தற்போது புனித சவேரியார் கோவில் இருக்கும் பகுதி. அப்பகுதி உட்பட பெரும்பகுதி இடங்கள் கோட்டாறு செட்டு சமூகத்தினருக்குச் சொந்தமான தேசி விநாயகர் கோவில் சொத்து என்பதால், அன்று முதல் இன்று வரை இந்நிலங்கள் தனிமனிதர் பட்டா பூமியாக இல்லை. குத்தகை நிலமாகவே தொடர்கிறது. இந்நிலையையே 'கௌலி' சொற்றொடர் குறிக்கிறது எனக் கொள்ளவேண்டும். ஆவணத்திலும் நிலத்தை விற்பவர் தான் கொ டுத்து வந்தது போலவே தேசி வினாயகர் ஸ்வாமி வகைக்கு ஆண்டுக்கு 6 பணம் கொடுத்து வர வேண்டும் என்று நிபந்தனை விதிப்பது இதை உறுதிப்படுத்துகிறது.

இந்த ஆவணத்திற்குரிய சமூகத்தினர் கத்திக்காரர் என்று அழைக்கப் பெறுகின்றனர். மற்றொரு பிரிவினர் சவளக்காரர் என அழைக்கப் பெறுகின்றனர். அருகருகே வாழும் இருபிரிவினருமே

இன்று பரதவர் என்னும் சமூகப் பிரிவில் அடங்குகின்றனர். 'சவளம்' என்றால் 'குந்தம் - ஈட்டி'. இச்சமூகத்தினரின் மூதாதையர் போர் வீர மரபினர். இவர்களின் குடிப் பெயர்வு சோழர் படையெடுப்போடு நிகழ்ந்திருக்கலாம். காலப்போக்கில் கத்திகளை வியாபாரம் செய்பவர்களாகவும், பட்டா கத்திகளைப் பயன்படுத்தி மீன் வியாபாரம் செய்பவர்களாகவும் மாறுகிறார்கள். சவளக்காரர் கடலில் சென்று மீன்பிடிப்பது இல்லை. கடல்கரையில் இருந்து மீன்களைத் தலைச் சுமடாகக் கொண்டு வந்து உள்நாட்டில் விற்பவர்கள். கத்திக்காரர் இவ்வியாபாரத்தைச் செய்யவில்லை. ஆவணத்தில் வரும் 'கத்தி கச்சவடம்' என்ற சொல் கத்தி வியாபாரத்தைக் குறிக்கும். மலையாளத்தில் கச்சவடம் என்றால் வியாபாரம். இச்சமூகத்தினர் கிருஸ்துவத்திற்கு மாறிய பின்னரும் சில குடிகள் வில்லவராயர், பூபாலராயர், காலிங்கராயர், சிங்காராயர் போன்ற பழைய குலப்பெயர்களை விட்டு விடாமல் பயன்படுத்தி வந்துள்ளனர். சிலர் போர்த்துக்கீசியர்கள் தந்த பெர்னாண்டஸ், கோஸ்கா போன்ற குலப் பெயர்களுக்கு மாறவும் காண்கிறோம்.

அன்று கோட்டாறு, அகஸ்தீஸ்வரம் டிஸ்டிரிக்ட்டில் இருந்திருக்கிறது. பிற்காலத்தில் திருவனந்தபுரம் டிஸ்டிரிக்ட்டின் கீழ் வந்தது. "மண்டபவாதுக்கல்" என்ற சொல் அரசு அலுவலகங்களைக் குறிப்பது. ஆவணத்தில் காணப்படும் வட்ட வடிவ முத்திரையில் மலையாள எழுத்துக்கள் இடம் பெறுகின்றன. அதன் தமிழாக்கம் - "திருவிதாங்கோடு ரெஜிஸ்தர் கச்சேரி" நடுவில் "சங்கு" முத்திரை. முத்திரையின் கீழ் மலையாள ''நம்பர் 1" என்று இருக்கிறது. கேரளாவில் இன்றும் அரசு அலுவலகத்தைக் 'கச்சேரி' (உருதுசொல்) என்று மக்கள் குறிக்கும் வழக்கம் தொடர்கிறது.

மொழிவழி மாநிலப்பிரிவு ஏற்படும்வரை, குமரி மாவட்டத்தை உள்ளடக்கிய கேரள மாநிலம், இருபதாம் நூற்றாண்டில் Travancore State என்ற ஆங்கிலத்திலும் , தமிழ் - மலையாளத்தில் "திருவிதாங்கூர் சமஸ்தானம்" என்றும் வழங்கி வரக் காண்கிறோம். ஆனால் உண்மையில் நாட்டின் பெயர் திருவிதாங்கோடு என்பதை இம்முத்திரை தெரிவிக்கிறது. சோழர் ஆட்சிக்குப்பின், 12ஆம் நூற்றாண்டு தொடக்கத்தில், கொல்லத்தைத் தலைநகராகக் கொண்ட வேணாட்டு அரச பரம்பரையின் ஒரு பிரிவான திருப்பாப்பூர் சொரூபம் (dynasty), குமரி மாவட்டம் தக்கலை அருகேயுள்ள திருவிதாங்கோட்டைத் தலைநகராகக் கொண்டு அரசாளத் தொடங்குகிறது. இவர்கள் 13 ஆம் நூற்றாண்டை ஒட்டி

பத்மநாபபுரத்திற்குத் தலைநகரை மாற்றிவிடுகின்றனர், இந்த வேணாடு அரசே பதினெட்டாம் நூற்றாண்டில் "திருவிதாங்கூர் சமஸ்தானம்" என வளர்ச்சி பெறுகிறது. ஆயினும் நாட்டின் பெயரைப் பழைய தலைநகர் நினைவாக "திருவிதாங்கோடு" என்றே வழங்கி வந்ததை இம்முத்திரை உறுதிப்படுத்துகிறது. கேரள வரலாற்று ஆசிரியர்கள் இதனை சரிவர பதிவு செய்ய வில்லை.

ஆவணத்தின் இடப்புறமும் பின்புறமும் இடம் பெறும் (கிறுக்கலான) பதிவுகள் தற்காலப் பத்திரப் பதிவுகளில் காணப்படுவது போன்ற பதிவுத்துறை அலுவலர்களின் குறிப்புகளே. அவற்றில் "அகஸ்தீஸ்வரம் டிஸ்டிரிக்ட் ரெஜிஸ்டர் ஆபீசில்" பதிவு செய்யப்பட்ட விவரம், எண், தேதி, பதிவு செய்த அலுவலர் சுப்பையா கிருஷ்ணன் போன்ற விவரங்களும், பெற்றவர் வாங்கியவர் சாக்ஷிகள் கையொப்பங்களும் இடம் பெறுகின்றன.







## 77. செய்தித் திரட்டு - புதிய கண்டுபிடிப்புகள்

### 77 : 1 வாடிப்பட்டி வட்டாரக் கண்டுபிடிப்புகள்

மதுரை மாவட்டம், வாடிப்பட்டி வட்டாரத்தில் கோட்டை, கோட்டையூர், கோட்டைமேடு, கோட்டைத்தெரு, நரிமேடு, மேட்டுக்காடு, நத்தப்பள்ளம், குடியிருப்புக்காடு, குடியிருப்புத் தோப்பு, புதுக்கோட்டையான் காடு எனப் பல பெயர்களில் அழைக்கப்படும் இடங்களில் தொல்லியல் சான்றுகள் அறியப்பட்டுள்ளன.

கோட்டைமேடு (வாடிப்பட்டி), நரிமேடு, சல்லக்குளம், அ.கோவில்பட்டி, அ.இடையபட்டி, அழகாபுரி, கல்லணை, கோட்டைமேடு (அலங்காநல்லூர்), இரும்பாடி, மேட்டு நீரேத்தான், நீரேத்தான், குட்டிமேய்க்கிபட்டி, செம்மினிப்பட்டி, இராஜாக்கள்பட்டி, மறவர்பட்டி, வி.புதூர், 66 மேட்டுப்பட்டி, வெ.பெரியகுளம், கச்சைகட்டி, சொக்கலிங்கபுரம், டி.மேட்டுப்பட்டி, பாலமேடு, அய்யூர், பொந்துகம்பட்டி, விராலிப்பட்டி, சின்ன ஊர்சேரி, குறவன்குளம், நெடுங்குளம் (ரயில்வே கேட்), மணியஞ்சி, அச்சம்பட்டி, தனிச்சியம், சி.புதூர் (அய்யங்கோட்டை). இவ்விடங்களில் இரும்புக் கசடுகள், கருப்பு - சிவப்பு மற்றும் சிவப்பு மட்கலச் சில்லுகள் காணப்பட்டன. சிலவற்றில் இடைக்கால மட்கலச் சில்லுகளும் இருந்தன. கோட்டைமேடு, அ.கோவில்பட்டி, மறவர்பட்டி ஆகியவற்றில் நுண்கற்கால கருவிகள் அல்லது செதில்கள் இருந்தன. வெ.பெரியகுளத்தில் கல்கோட்டைச்சுவர்ப் பகுதி உள்ளது.

இரா.சந்தானம், தஞ்சாவூர்

### 77 : 2 திருக்கச்சூர் பைரவர்

காஞ்சிபுரம் மாவட்டத்தில் செங்கல்பட்டு வட்டத்தில் காட்டாங்கொளத்தூர் குறுவட்டத்தில் திருக்கச்சூர் அமைந்துள்ளது. இவ்வூரில் மருந்தீஸ்வரர் கோயிலில் பைரவர் மேற்கு நோக்கிய நிலையில் தனியாக காணப்படுகிறார். பீடம் முதல் 37 செ.மீ. உயரமும், 6 செ.மீ. கனமும் 15 செ.மீ. அகலமும் உள்ளது. உடலில் கபால ஓடுகளால் ஆன மாலை நாகங்கள் சுற்றியவாறு செய்யப்பட்டுள்ளது. கழுத்தில் உள்ள ஆரங்களாகிய கந்திகை, சரப்பள்ளி, கிரைவேயகஹாரம், வயிற்றில் உதரபந்தம், மார்பின் குறுக்கே செல்லும் பூநூலும் மேற்கையில் கேயூரமும் கீழ்புறக்கையில் கங்கணமும் இடுப்பில் நாககடிசூத்திரமும் சுற்றப்பட்டுள்ளது. கைகள்

திரிசூலம், கபாலம், உடுக்கை, நாகம் ஆகியவைகளைப் பெற்றுள்ளன. இவர் பத்ம பீடத்தில் நின்றவாறும் இவரின் நாய்வாகனம் வலதுபுரம் நின்றவாறும் உள்ளது. வாயின் இருபுறங்களிலும் கோரைப்பற்கள் உள்ளன. செவிகளில் பத்ரகுண்டலங்கள் அணிந்துள்ளார். சடைமுடியில் கபாலம், சந்திரன், நாகம், ஊமத்தைப்பூக்கள், கொன்றைமலர், காட்டுப்பூக்கள் இடம் பெற்றுள்ளன. அனல் மகுடம் நீண்டு உயர்ந்துள்ளது. இதன் காலம் பொ.கா. 15ஆம் நூற்றாண்டாகலாம்.

ந.தனசேகரன், தஞ்சாவூர்

### 77 : 3 வீரன் காலாடி நடுகல்

மதுரை மாவட்டம், வாடிப்பட்டி பேருந்து நிலையத்திலிருந்து தென்மேற்கில் 3 கி.மீ. தூரத்தில் கோட்டைமேடு என்னும் சிற்றூர் உள்ளது. இவ்வூருக்கும் இதன் அருகில் உள்ள சடையம்பட்டி என்கிற ஊருக்கும் இடையில் வாடிப்பட்டி ரயில் நிறுத்தம் அருகில் சிலைமரத்தோப்பு என அழைக்கப்படும் இடத்தில் ஒரு புளியமரத்தின் கீழ் கற்பலகைகளில் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ள இரண்டு சிற்பத் தொகுதிகள் காணப்படுகின்றன. இவற்றில் ஒவ்வொன்றிலும் இரண்டு உருவங்கள் உள்ளன. இதனை இப்பகுதியில் உள்ள நாச்சிகுளம் என்கிற கிராமத்தினைச் சேர்ந்த மக்கள் வருடத்தின் சில முக்கிய தினங்களில் வழிபாடு செய்வதாக உள்ளூர் மக்கள் தெரிவிக்கின்றனர். இச்சிற்பத்தினை உள்ளூர் மக்கள் 'வீரன் காலாடி சாமி' என அழைக்கின்றனர்.

ஒன்றில் இரண்டு பேர் நின்ற நிலையில் இரு கைகளையும் கூப்பி வணங்குகின்றனர். இருவரும் தலைப்பாகை, காதணி, கழுத்தணி, வலது பின் கையில் காப்பு, கால் முட்டி வரை கீழாடை போன்றவை அணிந்துள்ளனர். இச்சிற்ப அமைதியின் அடிப்படையில் இது பாண்டியர் காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம். மற்றொன்றில் இருவர் நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளனர். ஒருவர் தன் கைகளில் வில் அம்பினை ஏந்திக்கொண்டும் இன்னொருவர் தரையில் நிருத்திய ஈட்டியை தனது வலது கையில் பிடித்துக்கொண்டும் உள்ளார். இடது கைப்பகுதி சிதைந்த நிலையில் காணப்படுகின்றது. இருவருடைய இடைக்கச்சிலும் குறுவாள் உள்ளது. இருவரும் தங்கள் தலைமுடியினை வலது பக்கத்தில் கொண்டை போட்டுள்ளனர். காதில் குண்டலம், கழுத்தணி, காலில் சிலம்பு, கணுக்கால் வரை கீழாடை போன்றவை அணிந்துள்ளனர். வில் அம்பு ஏந்தியவர் வலது

முன் கையில் காப்பு அணிந்துள்ளார். சிற்பத்தின் முகப்பு திருவாச்சி போல் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் நாயக்கர் காலக் கலைப்பாணியில் அமையப்பெற்றுள்ளது.

இரா.சந்தனம், தஞ்சாவூர்

### 77 : 4 முருகமலை பாறை ஓவியங்கள்

தேனி மாவட்டம், பெரியகுளம் அருகே முருகமலை பகுதியில் புதிய பாறை ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையத்தின் ஆய்வாளர்கள் இவ்வோவியங்களைக் கண்டறிந்தனர். முருகமலைப் பகுதியில் சுமார் 100 அடி உயரத்தில் அமைந்துள்ள இயற்கையான குகையின் முகப்பில் இவ்வோவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. வழக்கமாக வெள்ளை மற்றும் காவி நிறங்களில் பாறை ஓவியங்கள் வரையப்பட்டிருக்கும். ஆனால் இங்கு முற்றிலும் வெள்ளை வண்ணமே பயன்படுத்தப்பட்டுள்ளது. மனிதர்கள் குழு நடனம் ஆடுவதுபோலவும், ஒரு விலங்கின் மீது அமர்ந்து இன்னொருவருடன் போர் புரிவது போலவும் காட்சிகள் உள்ளன. ஒரு வட்டத்திற்குள் ஒரு மனிதனின் உருவம் தீட்டப்பட்டுள்ளது. இத்தகைய பாறை ஓவியங்கள் பாண்டிய நாட்டில், கருங்காலக்குடி, கிடாரிப்பட்டி, சிறுமலை, தாண்டிக்குடி, பழனிமலை, காமாயகண்டன்பட்டி, மாங்குளம் போன்ற இடங்களில் ஏற்கனவே வல்லுநர்களால் கண்டறியப்பட்டள்ளன. பெரியகுளம் மலைப்பகுதியில் முதன் முதலாக இவ்வோவியம் கண்டறியப்பட்டுள்ளது.

ரா.உதயகுமார், பாண்டீசுவரன், மதுரை

### 77 : 5 செங்கமடை கோட்டை பெருங்கற்காலச் சின்னம்

இராமநாதபுரத்தில் இருந்து திருச்சி செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் சு.ஞ. மங்கலத்திலிருந்து 3 கி.மீ. தொலைவில் உள்ளது செங்கமடை என்ற ஊர். இங்குள்ள கோட்டைக்கரை ஆற்றின் கரையில் அமைந்துள்ள கோட்டை, பொ.ஆ.1713 முதல் 1725 வரை இராமநாதபுரம் சேது நாட்டை ஆட்சி செய்த முத்து விஜய ரெகுநாத சேதுபதியால் சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டது. அறுங்கோண வடிவில் அமைந்துள்ளதால் இதை ஆறுமுகம் கோட்டை என்கிறார்கள். இக்கோட்டைக்குள் கோட்டை அய்யனார், முனியசாமி கோயிலும் குளமும் உள்ளன. அக்குளத்தில் கறுப்பு சிவப்பு மண்பாண்ட ஓடுகள், சில்லுகள், முதுமக்கள் தாழிகள்,

மண்குவளைகள், குவளைத்தாங்கிகள், இரும்புத் தாதுக்கள் ஆகிய பெருங்கற்காலச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

க.சக்திவேல், இராமநாதபுரம்
வே.இராஜகுரு, இராமநாதபுரம்

## 77 : 6 கீழச்சீத்தை, வெள்ளா மறிச்சுக்கட்டி தடயங்கள்

இராமநாதபுரம் அருகே உத்தரகோசமங்கையில் இருந்து திருப்புல்லாணி செல்லும் வழியில் கீழச்சீத்தை என்ற ஊரில் கானத்திடல் என்ற பகுதியில் பண்ணைக்குட்டை தோண்டிய இடத்தில், ரோமானிய ரௌலெட்டட் ஓடுகள், சீனப் பீங்கான் போர்சலின் ஓடுகள், கருப்பு சிவப்பு பானை ஓடுகள், சிவப்பு பானை ஓடுகள், சிறு இரும்புக்கோடரி, இரும்புத் தாதுக்கள், இரும்புக் கழிவுகள், குறியீடு உள்ள பானை ஓடுகள், நெசவுத் தொழிலுக்குப் பயன்படுத்தப்படும் தக்களி, பாண்டி ஆட்டத்துக்குரிய சில்லுகள், சுடுமண் விளக்கு, மான்கொம்புகள், மணிகள் செய்யப் பயன்படும் கற்கள், தேய்ப்புக் கற்கள், சங்குகள், பவளப் பாறைகள் போன்றவை கண்டுபிடிக்கப்பட்டன. ரோமானிய ரௌலெட்டட் ஓடுகள், சீனப் பீங்கான் ஓடுகள் ஆகியவை கிடைத்துள்ளதன் மூலம் இவ்வூரார், ரோமானியர் மற்றும் சீனர்களுடன் வணிகம் செய்திருப்பது உறுதியாகிறது. இம்மாவட்டத்தின் பழமையான ஊர்களாக அறியப்பட்டுள்ள அழகன்குளம், தேரிருவேலி ஆகியவை ரோமானிய வணிக மையங்களாகும்.

சீத்தை என்ற தமிழ்ச் சொல் சிங்கள மொழியில் ‘சீத்தய’ என வணிகத்தைக் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தப்படுகிறது. இவ்வூரின் பெயரைக் கொண்டும் இவ்வூர் ஒரு வணிக மையமாக விளங்கி இருக்கும் எனக் கருதலாம். இவ்வூர் பொ.ஆ.முன் 300 முதல் பொ.ஆ.1200 வரையிலான காலத்தில் சுமார் 1500 ஆண்டுகள் புகழ்பெற்று விளங்கி இருந்திருக்கும்.

மேலும், கீழச்சீத்தையில் இருந்து 2 கி.மீ. தூரத்தில் உள்ள வெள்ளாமறிச்சுக்கட்டி கண்மாயில் கருப்பு சிவப்பு பானை ஓடுகள் மற்றும் கூரை ஓடுகள் கிடைத்துள்ளதால் அந்த இடத்திலும் சங்க காலத்தில் ஒரு ஊர் இருந்திருக்கும் என அறியமுடிகிறது. இவ்விரு இடங்களும் தேரிருவேலியில் இருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளன.

வே.இராஜகுரு, இராமநாதபுரம்
அமரர் க.இராஜமோகன், இராமநாதபுரம்

## 77 : 7 கொக்கரசன் கோட்டை

இராமநாதபுரம் மாவட்டம், சாயல்குடியிலிருந்து சூரங்குடி செல்லும் பழைய மங்கம்மாள் சாலையில் தரைக்குடி அருகில் உள்ளது கொக்கரசன் கோட்டை என்ற ஊர். இந்த ஊரில் பச்சைத் தண்ணீர்க்காரி என்ற மாலைக்காரி அம்மன் கோயில் பல்லாங்குறிச்சி கண்மாய்க் கரையில் அமைந்துள்ளது. இக்கோயிலைச் சுற்றியும் கண்மாய்க் கரையிலும் பல ஏக்கர் தூரத்திற்குப் பழங்கால பானை ஓடுகள் சிதறிக்கிடக்கின்றன. இங்கு சுடுமண்ணால் செய்யப்பட்ட இரும்பு உருக்காலையின் உடைந்த பகுதிகள், இரும்பு தாதுப் பொருள்கள், இரும்பு கழிவுப் பொருள்கள், கருப்பு சிவப்பு நிற பானை ஓடுகள், சிவப்பு நிற பானை ஓடுகள், பழுப்பு நிற பானை ஓடுகள், குறியீடு உள்ள பானை ஓடு, சுடுமண்ணால் செய்யப்பட்ட தாய்த் தெய்வ உருவ பொம்மை, கெண்டியின் நீர் ஊற்றும் மூக்குப் பகுதி ஆகியவை கண்டெடுக்கப்பட்டுள்ளது. இது சங்க காலம் முதல் 10-ஆம் நூற்றாண்டு வரை மக்கள் வாழ்ந்த பகுதியாக இருக்கலாம். தலை உடைந்த நிலையில் உள்ள சுடுமண்ணால் செய்யப்பட்ட அரைவட்ட வடிவத்தில் சிறிய அளவிலான பெண் உருவம் தாய் தெய்வமாக இருக்கலாம். இவ்வுருவம் மேலாடையின்றி இடுப்பில் ஆடை அணிந்து கையை விரித்து அமர்ந்த நிலையில் உள்ளது.

வே.இராஜகுரு, இராமநாதபுரம்

## 77 : 8 நெட்ரம்பாக்கம் ஊர் ஆய்வு

காஞ்சிபுரம் மாவட்டத்தில் மதுராந்தகத்திலிருந்து செய்யூர் செல்லும் வழியில் 20 கி.மீ. தொலைவில் நெட்ரம்பாக்கம் (நெற்றம்பாக்கம்) என்ற ஊர் அமைந்துள்ளது. இவ்வூரில் அமைந்துள்ள நந்தேசுவரர் கோயிலின் திருப்பணியின்போது சிவலிங்கத்தின் பிரம்மபாகத்தில் தமிழ் - பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளமை கண்டறியப்பட்டது. இக்கல்வெட்டு 'சேநருமான்' என்ற வாசகம் கொண்டது. கல்வெட்டுக்கு மேற்பகுதியில் விரிந்த தாமரை மலர், மொட்டு மற்றும் தாமரை இலைகள் காணப்படுகின்றன. இது தாமரை தடாகம் போன்று உள்ளது. இக்கல்வெட்டு பொ.கா.2 அல்லது 3-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக





இருக்கலாம் என்று கல்வெட்டினை படியெடுத்து வெளியிட்ட தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் செய்தி குறிப்பு கூறுகிறது.

மேற்படி கல்வெட்டு பொறிக்கப்பட்ட கோயில் ஆய்வு செய்யப்பட்டப்பொழுது, அக்கோயில் முன்பு செங்கற்கோயிலாக இருந்ததை நிழற்படம் மூலமாக அறியப்பட்டது. தமிழ் - பிராமி கல்வெட்டு பொறிக்கப்பட்ட தூண் பிற்காலத்தில் சிவலிங்க வடிவமாக செய்யப்பட்டு (கல்வெட்டு தலைகீழாக உள்ளது) வழிபாட்டில் இக்கோயிலில் இருந்ததும் அறியப்பட்டது. இக்கோயிலில் வழிபாட்டில் உள்ள அம்மன் வடிவத்தின் சிற்ப அமைப்பு 16 - 17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக விளங்குகிறது.

மேலும் இவ்வூரில் கள ஆய்வு மேற் கொண்டபொழுது ஊரின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ள ஏரிக்கரையில் பெருங்கற்காலச் சின்னங்கள் காணப்பட்டன. ஏரிக்கரையில் அமைந்துள்ள பொன்னி அம்மன் கோயில் முன்புறம் நிலத்தில் பாதி புதைந்துள்ள நிலையில் கொற்றவையின் சிற்பம் வழிபாட்டில் இருப்பது கண்டறியப்பட்டது. அழகிய பல்லவர் கால சிற்பம், எட்டு கரங்கள், பிரயோக சக்கரம், சங்கு, கத்தி, கேடயம், அம்பு, சூலம் போன்ற ஆயுதங்கள் காணப்படுகின்றன. வலது கரத்தில் மலர் ஏந்திய நிலை, தலையில் கரண்ட மகுடம். தலைக்கு மேலே அழகிய குடை துர்க்கையின் இடப்புறம் மேற்பகுதியில் மயில் உருவம் காணப்படுவது சிறப்பாகும். பல்லவர் கால கோயில் இருந்து அழிந்திருக்க வேண்டும் என ஊகிக்க முடிகிறது.



கி.ஸ்ரீதரன், சென்னை

**77 : 9 புழல் பல்லவர் கால சுப்ரமண்யர் சிற்பம்**

சென்னை அடுத்துள்ள புழல் சிவன் கோயிலில் அழகிய பல்லவர்கால முருகன் சிலை உள்ளது. பத்ர பீடத்தில் வலதுகால் மடித்து இடது கால் தொங்கவிட்டுள்ள இம்முருகரின் நான்கு கரங்களில்

மேலிருகரங்களில் அக்க மாலை, கமண்டலமும் உள்ளன. கீழிரு கரங்கள் அபய, ஊரு முத்திரை காட்டி விளங்குகின்றன. கண்ணிமாலை, கரண்ட மகுடம், வீரசன்னத்துடன் விளங்கும். இதனை சுமார் பொ.கா. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த - சுப்ரமண்யர் என்று கருதலாம்.

மா.சந்திரமூர்த்தி, த.காமாட்சி,
பி.சத்யா, க.ஆ.கவிதா,
சென்னை

### 77 : 10 பட்டீஸ்வரம் மாந்தன் சிற்பம்

கும்பகோணம் அருகில் உள்ள பட்டீஸ்வரத்தில் ஸ்ரீராமலிங்கஸ்வாமி கோயில் உள்ளது. இராஜராஜனுடைய தேவியரில் ஒருவரான பஞ்சவன் மாதேவி இறந்த பின்னர் அவருக்காக முதலாம் இராஜேந்திர சோழனால் தன் சிற்றன்னைக்கு எடுக்கப்பட்ட பள்ளிப்படை ஆலயம் இதுவாகும். இவ்வாலயத்தின் மாடம் ஒன்றில் ஜேஷ்டாதேவி தொகுப்பில் உள்ள மாந்தனுடைய சிற்பம் தனிப் பீடத்தில் பெரிய அளவில் காணப்படுகிறது.

சிற்பத்தின் தலைக்கோலம், ஆடை அணிகள் யாவும் முற்காலச் சோழர் கலைப்பாணியில் அமைந்துள்ளன. காலம் பொ.கா.9-ஆம் நூற்றாண்டு. இச்சிற்பம் பட்டீஸ்வரம் பகுதியில் இருந்து இக்கோயிலுக்குக் கொண்டு வரப்பட்டிருக்கலாம். ஜேஷ்டாதேவி குழுவில் மாந்தனின் சிற்பம் தனி பீடத்தில் காணப்படுவது அரிய படைப்பாகும்.

மா.சந்திரமூர்த்தி, சென்னை
முனைவர் கோ.எழில், ஆதிரை, நாகப்பட்டினம்
க.ஆ.கவிதா, சென்னை

### 77 : 11 திருக்கோடிக் காவல் பல்லவர் காலச் சிற்பங்கள்

கணபதி : திருக்கோடிக்கா திருக்கோடீஸ்வரர் திருக்கோயில் திருச்சுற்று மாளிகை தேவார மூவர் சிலைகளுக்கு அருகில் உள்ள கணபதி சிற்பம் நீண்டு மெலிந்த துதிக்கையுடனும் இருகரங்களுடனும் காணப்படுகிறது. இதன் தோற்றம் பல்லவர் காலத்தியதாகக் காணப்படுகிறது. சப்தமாதர் குழுவைச் சேர்ந்ததாகத் தெரிகிறது.

சரஸ்வதி : மேற்சொன்ன கணபதி அருகில் அதே நெடிதுயர்ந்த கலைப்பாணியில் சரஸ்வதி சிற்பம் இடது காலை மடித்து வலது காலைத் தொங்கவிட்டு அமர்ந்துள்ளது. ஜடா முடியும் ருத்ராட்ச குண்டலங்களும் உடைய இதன் பின்னிரு கரங்களில் அக்க மாலையும்

கமண்டலமும் இருக்க முன்வலதுகரம் அபயம் காட்டி இடது கரம் புத்தக முத்திரையில் சுவடியுடன் காணப்படுகிறது.

இலக்குமி : மேற்சொன்ன சிற்பங்களின் அருகிலேயே இச்சிற்பமும் உள்ளது. பத்திர பீடத்தில் இருகால்களையும் விரித்துத் தளரத் தொங்கவிட்டு அமர்ந்துள்ள இத்தெய்வத்திற்கு இரு கரங்களே உள்ளன. அவற்றில் இரு கரங்களிலும் நீண்ட தண்டுடன் கூடிய தாமரை மொட்டுக்கள் உள்ளன. இடையாடை கணுக்கால் வரையில் உள்ளது. நீண்ட செவிகளில் குழைகளும் கழுத்தில் கண்டசரமும் காரையும் உள்ளன. இம்மூன்று சிற்பங்களும் பொ.கா. 8-9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும்.

சூரிய மண்டல பிரம்மன் : மேற்சொன்ன கோயில் திருச்சுற்றில் இச்சிற்பமும் உள்ளது. பத்ம பீடத்தில் நின்றநிலையில் மூன்று முகத்துடன் காணப்படுகிறது. ஜடா மகுடமும், ருத்ராட்ச குண்டலங்களும், பூணூல், உதரபந்தம், கேயூரம், கைவளைகள் அணி செய்கின்றன. கழுத்தில் கண்டசரமும் அரும்புச்சரமும் உள்ளன. கணுக்கால் வரை இடைக்கச்சை உள்ளது. கரங்களில் அக்க மாலையும், கமண்டலமும் உள்ளன. இச்சிற்பம் பொ.கா.9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழர் கலைப் பாணியில் உள்ளது.

ஜேஷ்டாதேவி : இச்சிற்பம் இதே கோயிலில் வடமேற்கு மூலையில் உள்ளது. இருபுறமும் மாந்தன் மாந்தியுடன் தேவி பத்திர பீடத்தில் அமர்ந்துள்ளாள். இச்சிற்பம் புடைப்புச் சிற்பமாகப் பலகைக் கல்லில் வடிவமைக்கப்பட்டுள்ளது. அகட்டி ஊன்றிய கால்களுடன் உள்ள இத்தேவியின் இடது தோளில் தொங்கும் சடை அமைப்பு சிறப்பானது. முழங்காலில் இடது கரம் வைத்தும் வலது கரத்தில் விரிந்த தாமரை மலர் பிடித்தும் இவள் விளங்குகின்றாள். காக்கைக் கொடி காணப்படவில்லை. இவளது வலது புறமுள்ள மாந்தனின் வலது கரத்தில் கோல் ஒன்று அழகு செய்கின்றது. மணற் கல்லால் அமைந்த இச்சிற்பம் பொ.கா.8-9-ஆம் நூற்றாண்டினது.

திருக்கோடிக் காவல் கோயில் முன்னர் செங்கல்லால் அமைந்திருந்தது. இதனைச் செம்பியன் மாதேவியார் கற்றளியாக்கினார். மேற்சொன்ன சிற்பங்கள் செங்கற்தளியாக இருந்தபோது வழிபாட்டில் இருந்தவை. கற்றளியானபோதும் தொடர்ந்து வழிபாட்டில் உள்ளன.

மா.சந்திரமூர்த்தி, க.ஆ.கவிதா, சென்னை
விஜயலட்சுமி, நாகப்பட்டினம்

## 77 : 12 திருக்கோடிக்கா மன்னர் சிற்பங்கள்

சிவபாதசேகரன் (எமதர்மர்) : திருக்கோடிக்காவல் திருக்கோடீஸ்வரர் கோயிலின் மகாமண்டப முன்புற வடதிசை மாடத்தில் அரச லட்சணங்கள் பொருந்திய ஆணின் உருவம் இரு கரங்களை அஞ்சலி முத்திரையில் கொண்டு வணங்கி நிற்கிறது. இதன் தலையை அழகிய கொண்டை அலங்கரிக்கிறது. நீண்ட காதுகளில் புஷ்ப குண்டலங்களும் செவிப்பூக்களும் அணி செய்கின்றன. கத்தையான மீசையும் தாடியும் உள்ளன. அரச வடிவுடைய கம்பீரமாக தோன்றும் இவ்வுருவத்தின் தலையின் முன்புறம் இரு திருப்பாதங்கள் காட்டப்பட்டுள்ளன. நாடாளும் அரசனை ஒத்த மாமனிதரின் தலைமீது திருவடியை சுமந்து நிற்கும் இவ்வடிவம் சிவபாத சேகரன் என்ற விருதினை கொண்ட முதலாம் இராஜராஜசோழனின் உருவமாக இருத்தல் வேண்டும்.

முதலாம் இராஜராஜன் சூடிய பட்டப் பெயர்களில் ஒன்றான சிவபாதசேகரன் என்ற பெயரில் சிதம்பரம் அருகில் சிவபாதசேகர நல்லூர் (சிவாயம்). கருவூர் மாவட்டம் அய்யர்மலை அருகில் உள்ள சிவபாதசேகரநல்லூர் (சிவாயம்) ஆகிய ஊர்கள் உள்ளமைக் குறிப்பிடத்தக்கது. என்றும் சிவனையே சேவித்துச் சிவனது திருவடிகளைத் தன் சிரசில் சுமந்து சிவனுக்கென மாபெரும் ஆலயங்களைத் தோற்றுவித்த முதலாம் இராஜராஜனின் நினைவாக இச்சிற்ப வடிவினைப் பிற்கால சோழர்கள் கி.பி.11-12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கு செய்திருக்க வேண்டும். ஆனால், இவ்வுருவத்தின் கம்பீரமான முகத்தோற்றத்தையும், மிடுக்கான மீசையும் கொண்டு புராணிகர்கள் எமதர்மர் என்று அழைத்து வருகின்றனர்.

சோழ மன்னன் (சித்ரகுப்தன்) : மகாமண்டப தென்திசை கோஷ்டத்தில் கீழ்திசையை நோக்கிய வண்ணம் ஒரு மன்னரின் சிற்ப வடிவம் உள்ளது. இடது மார்பில் குறுவாளை ஏந்தி வணங்கும் வண்ணம் காட்சியளிக்கிறது. இவரது தலையில் கொண்டையும் மேல் நெற்றியில் நெற்றிப் பட்டமும் அலங்கரிக்கின்றன. நீள் செவிகளில் அணிகள் ஏதும் காட்டப்படவில்லை. கழுத்திலிருந்து மார்பிற்கு கீழ்வரை மணிமாலை (ருத்ராட்சம்) சரிந்துள்ளது. இடுப்பைச் சுற்றிலும் அரைபட்டிகையும், இடுப்பிலிருந்து முழங்காலுக்கு கீழ்வரை மடிப்புடைய ஆடையும், இடையின் பக்கங்களில் முழங்காலுக்குக் கீழ் வரை சரிந்து நிற்கும் ஆடைக்கட்டும் உள்ளன. முகத்தில் மீசையும் தாடியும் உள்ளன. வணங்கிய கரங்கள் வாள்

ஒன்றை மார்பில் சாய்த்து அணைத்துக் கொண்டுள்ளன. கி.பி.11-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இவ்வாலயத்திற்கு அறக்கொடைகள் நல்கிய மூன்றாம் குலோத்துங்கனின் திருவுருவமாக இதனைக் கருதலாம். புராணிகர்கள் இதனைச் சித்ரகுப்தன் என்ற கூறிவருகின்றனர். இப்பகுதியில் கிடைத்துள்ள திருவாலங்காடு போன்ற ஏனைய சிற்ப வடிவங்களுடன் இது ஒத்த அமைப்புடையதால் இதனை மூன்றாம் குலோத்துங்க சோழன் சிலையாகக் கருதலாம்.

மா.சந்திரமூர்த்தி, விஜயலட்சுமி,
க.ஆ.கவிதா, சென்னை

### 77 : 13 ஓமந்தூரில் அரிய சிற்பங்கள்

லகுளீசர் : விழுப்புரம் மாவட்டம், திண்டிவனம் வட்டத்தில் உள்ள ஓமந்தூர் கிராமத்தில் சிவன் கோயில் அருகில் லகுளீசர் சிற்பம் உள்ளது. 150 செ.மீ. உயரமும், 85 செ.மீ. அகலமும், 12 செ.மீ. கனமும் உடைய பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பமாக உள்ளது. இவ்வுருத்தின் காலடியில் இருபுறமும் இரு பணியாட்கள் காட்டப்பட்டுள்ளனர். வலப்புலத்தில் உள்ளவர் தலையில் உள்ள கலசத்தை இரு கைகளால் தூக்கிப் பிடித்து கால்களைப் பக்கவாட்டில் வைத்து நடக்கும் நிலையில் உள்ளார். இடப்புறம் உள்ளவர் இரு கைகளில் பூசைத் தட்டை முன்னோக்கி ஏந்திய நிலையில் பக்கவாட்டில் கால்களைக் கொண்டு நடக்கும் தோற்றத்துடன் செதுக்கப்பட்டுள்ளார். தலையை ஜடாபாரம் அலங்கரிக்கிறது. லகுளீசரின் மேல் இடப்புறம் சாமரம் போன்ற உருவமும் அதன் மேல் பறவையை ஒத்த உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. இச்சிற்பத்தின் கற்பலகை அமைந்த கருங்கல்லின் இடப்புறமும் வலப்புறமும் தலைப்பகுதியும் நீண்ட ரேகை ஓடியுள்ளது. ஜடாபாரத்தை முகத்திலிருந்து பிரித்துகாட்ட கல்லை ஆழமாக செதுக்கியுள்ளமை காணத்தக்கது. இது பொ.கா. 7-ஆம் நூற்றாண்டையப் பல்லவர் கலைப் பாணியைச் சேர்ந்தது.

ஜேஷ்டா தேவி சிற்பம் : நீள் வட்ட முகம், தூக்கிய புருவம், திறந்த கண்கள், நீள் நாசி, தடித்த உதடுகளை கொண்ட குவிந்த திருவாய், அளவான மேலுடல், மார்பு கச்சை இல்லா திறந்த தனங்கள். ஜேஷ்டையின் தலையின் வலப்புறமும் இடப்புறமும் மாந்தனும் மாந்தியும் இரு கைகளுடன் அமர்ந்துள்ளனர். இடப்புறமுள்ள மாந்தி இரண்டு கைகளுடன் அமர்ந்துள்ளாள். வலது

கையை கடக முத்திரையில் உயர்த்தியுள்ளாள். இச்சிற்பம் பொ.கா. 7-ஆம் நூற்றாண்டு பல்லவர் பாணியைச் சேர்ந்தது.

தீர்த்தங்கரர் சிற்பம் : ஓமந்தூர் கிராமத்தின் தென்மேற்குப் பகுதியில் உள்ள கருவேலங்காட்டில் தலையில்லா தீர்த்தங்கரர் சிற்பம் ஒன்று உள்ளது. தீர்த்தங்கரர் திசைகளையே ஆடையாகக் கொண்டவராக, அணியாத அழகராக அர்த்த பத்மாசனத்தில் அரைவட்ட பீடத்தின் மேல் அமர்ந்து காட்சியளிக்கிறார். தியான முத்திரை வைத்துள்ளார். மார்பில் ஸ்ரீவத்சம் என்னும் முக்கோண வடிவத் திருமறு திகழ்கிறது. இவ்வுருவம் இவ்வூர் சமணக் கோயிலின் மூலவராக இருந்திருக்க வேண்டும். தீர்த்தங்கரரின் தலைப் பகுதி உடைந்துள்ளது. எனவே இதனைத் தலையில்லா சாமி என்று ஊரார் அழைத்து வருகின்றனர். தீர்த்தங்கரரின் முன்னழகைப் போன்று பின்னழகையும் சிற்பிகள் கவனமாகச் செதுக்கியுள்ள திறனையும் காணமுடிகிறது. இவ்வுருவம் பொ.கா.10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. சோழர் காலத்தியது. முதலாம் இராஜராஜனுடைய கல்வெட்டு இவ்வூர் சிவாலயத்தில் காணப்படுவதால் அவனது சமகாலத்திலேயே தீர்த்தங்கரர் சிலை எடுக்கப்பட்டு வழிபாட்டில் இருந்தது எனலாம். பொ.கா.16-17-ஆம் நூற்றாண்டு வரை இக்கோயில் நல்ல வழிபாட்டில் இருந்துள்ளது. கோயில் அடித்தளங்கள் தவிர ஏனையவை முற்றிலும் சிதைந்தும், மண்மேடிட்டும் காணப்படுகின்றன. இச்சிற்பம் பீடத்துடன் உயரம் 74 செ.மீ., பீடம் நீக்கி உயரம் 61 செ.மீ., மொத்த அகலம் 80 செ.மீ., தோள் அகலம் 50 செ.மீ.

மா.சந்திரமூர்த்தி, சென்னை
முனைவர் அர.பூங்குன்றன், காட்பாடி
க.ஆ.கவிதா, சென்னை

### 77 : 14 காளையார் கோயில் சண்டிகேஸ்வரர்

சிவகங்கை மாவட்டம் காளையார் கோயில் சிவன் கோயில் நந்தவனத்தில் பாண்டியர் கால சண்டிகேஸ்வரர் சிற்பம் அண்மையில் கண்டறியப்பட்டது. சண்டிகேஸ்வரர் கல் மேடையின் மீது வலது காலை மடித்து, இடது காலைத் தொங்கவிட்டு, இரண்டு கரங்களுடன் அமர்ந்துள்ளார். வலக்கரம் கடக முத்திரையில் மழு ஆயுதத்தைப் பற்றியுள்ளது. இடது கரம் தொடை மீது ஊரு முத்திரையில் உள்ளது.

மா.சந்திரமூர்த்தி, க.ஆ.கவிதா, சென்னை

### 77 : 15 செட்டிக்காபாளையம் நடுகல்லும் தொல்பொருட்களும்

கோயம்புத்தூர் மாவட்டம், கிணத்துக்கடவு வட்டம் கிணத்துக் கடவிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ள செட்டிக்காபாளையம் ஊராட்சியில் மாலைகோயிலில் இந்நடுகல் உள்ளது. 3 அடி உயரம் 2 அடி அகலமுடைய இந்த நடுகல்லை கால்நடைகளுக்கான தெய்வமாக "ஆலகொண்ட மாலசாமி" என்று பெயரிட்டு வணங்கி வருகின்றனர். வீரன் தனது இடது காலை ஊன்றி வலது காலைச் சற்றுப் பின்வைத்து ஈட்டியைக் கொண்டு, ஆவேசமாகப் புலியைக் குத்துவதுபோல இச்சிற்பம் உள்ளது. வீரனின் தலையில் வலதுபக்கக் கொண்டை, கழுத்தில் அணிகலன்கள் இடுப்பில் இடைக்கச்சு, குறுவாள் ஆகியவை காணப்படுகின்றன. இக்கோயிலில் சுடு மண்ணால் ஆன காளை, பசு, ஆடு, நாய், பூனை, கோழி ஆகிய கால் நடைகளின் உருவங்களும், மனித உருவங்களும் நேர்த்திக்கடனாக வைக்கப்பட்டுள்ளன. மேலும் இக்கோயிலுக்கு அருகில் சாலையின் இடதுபுறம் உள்ள விளை நிலத்தில் கருப்புநிறப் பானை ஓடுகளும், இரும்பு உருக்குக் கசடுகளும் பரவலாகக் காணப்படுகின்றன.

மு.சதீஷ்குமார், கிணத்துக்கடவு

### 77 : 16 தெள்ளாரில் பல்லவர் கால ஜேஷ்டா தேவி சிற்பம்

தெள்ளார் நந்திவர்மன் கல்லூரியின் முன்புற வளாகத்தில் இவ்வழகிய சிற்பம் உள்ளது. பலகைக் கல்லின் நடுவில் ஜேஷ்டா தேவி பெரிய அளவிலும் அவளுக்குச் சற்று பின்புறமாக நின்ற நிலையில் மாந்தன் மாந்தி உருவங்களும் உள்ளன. இவளது இடதுபுறம் சிறிய அளவில் கழுதை வாகனமும் பணிப் பெண்ணும் காட்டப்பட்டுள்ளனர். காக்கைக் கொடி, துடைப்பம், உலக்கை ஆகியவையும் இவளது இருபுறமும் உள்ளன. வலது காலை மடித்து இடது காலைத் தொங்கவிட்டுள்ள இவளது மார்பில் தடித்த உபவீதம் உள்ளது. இச்சிற்பம் பொ.கா. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனலாம்.

மா.சந்திரமூர்த்தி, க.ஆ.கவிதா, சென்னை
கோ.எழில் ஆதிரை, நாகப்பட்டினம்

### 77 : 17 சிங்கிரிப்பள்ளி நடுகற்கள்

கிருட்டிணகிரி மாவட்டம் ஓசூர் வட்டத்தில் தீர்த்தம் கணவாயிலிருந்து சுமார் 25 கி.மீ. தொலைவில் சிங்கிரிப்பள்ளி என்ற

ஊர் உள்ளது. தொல்பழங்காலத்திலிருந்து கர்நாடகம் மற்றும் ஆந்திர மாநிலங்களிலிருந்து தமிழகத்திற்கு வருவதற்கு இந்த கணவாய் பயன்பட்டது. சிங்கிரிப்பள்ளியிலுள்ள வீரபத்திரசாமி கோயிலின் அருகில் சமார் 60 நடுகற்கள் வழிபாட்டிலுள்ளன. இந்த நடுகற்கள் அனைத்தும் கல்வீடு அமைப்பில் இருந்தன என்றும் இவை தற்போது வீரபத்திரசாமி கோயிலின் உட்பகுதியில் வரிசையாக வைக்கப் பட்டன என்றும் இப்பகுதி மக்கள் கூறுகின்றனர். நடுகற்களுடன் சதிக்கற்களும் இணைந்துள்ளன. பெரிய வடிவத்தில் ஒரு நடுகல் உள்ளது. இந்த நடுகல் வீரன் வில்லையும் அம்பையும் வைத்து வேட்டையாடும் நிலையில் வடிக்கப்பட்டுள்ளான். ஒரு காலை முன்வைத்தும், ஒரு காலை பின்வைத்தும், இரண்டு கால்களுக்கு இடையில் இடைக்கச்சு தொங்குகின்றவாறு அலங்கார அமைப்புடன் உள்ளது. தலைமுடியைத் துணியால் கட்டி வைத்துள்ள பாங்கு, அருகில் நிற்கின்ற பெண்ணின் கையில் உள்ள குத்திகைச் சொம்பு தொங்கவிட்ட நிலையிலுள்ள கை ஆகியவை அழகாகக் காட்டப்பட்டுள்ளன. பெண்களுக்கு மார்புக் கச்சைகள் காட்டப்படவில்லை. நடுகல்லிலுள்ள புடைப்புச் சிற்பங்களின் உருவ அமைப்பு, ஆடை அலங்காரங்கள் போன்றவற்றைக் கொண்டு இந்நடுகற்கள் சுமார் பொ.கா.15, 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று கூறலாம். இந்த நடுகற்களை இன்றும் குறுமன்ஸ் பழங்குடி மக்கள் தங்களுடைய குலதெய்வமாக வழிபடுகின்றனர்.

தி.சுப்பிரமணியன், தருமபுரி

## 77 : 18 செம்பரசனஅள்ளி நடுகற்கள்

கிருட்டிணகிரி மாவட்டத்தில் சின்ன ஆறு அருகில் செம்பரசன அள்ளி என்ற ஊர் அமைந்துள்ளது. இந்த ஊரின் அருகிலுள்ள தேவருபெட்டா என்ற மலையின் அடிவாரத்திலும் ஊருக்கு அருகிலும் 50-க்கும் மேற்பட்ட நடுகற்கள் வழிபாட்டிலுள்ளன. கல்வீடு அமைப்பில் பல நடுகற்கள் இன்றும் நல்ல நலையில் உள்ளன. பல நடுகற்கள் கோயிலின் உட்பகுதியில் வரிசையாக வைக்கப்பட்டுள்ளன. இவற்றில் பலவகையான நடுகற்கள் காணப்படுகின்றன. நடனக் காட்சிகள், கொம்பு ஊதும் உருவங்கள், குழல் ஊதும் உருவங்கள், சதிக்கற்கள் போன்றவை உள்ளன. இவை அனைத்தும் குறும்பர்களின் குலதெய்வமாக உள்ளன. இவை அவர்களுடைய பண்பாடு, கலாச்சாரங்களை வெளிபடுத்துகின்றனவாக உள்ளன. நடனக் காட்சிகளாக ஐந்து நடுகற்கள் உள்ளன. இவை அவர்கள் ஆடுகின்ற சேவையாட்டமாக இருக்கலாம். மூவர், ஐவர், எழுவர் என்ற

எண்ணிக்கையில் சேவையாட்டக் காட்சிகள் அமைந்துள்ளன. கொம்பு என்ற இசைக்கருவியை ஊதுகின்ற அமைப்பில் ஒருவரும், அவரைத் தொடர்ந்து உள்ளவர்கள் நடனமாடுகின்ற அமைப்பில் சிலரும் காணப்படுகின்றனர்.

தி.சுப்பிரமணியன், தருமபுரி

### 77 : 19 குலதெய்வமாக உள்ள நடுகற்கள்

கிருட்டிணகிரி மாவட்டத்தில் பாரூர் என்ற ஊரில் பெலதப்பசாமி என்ற பெயரில் உள்ள கோயிலில் 15 நடுகற்கள் வைக்கப்பட்டுள்ளன. தருமபுரி பகுதியிலுள்ள எல்லா குருமன் பழங்குடி மக்களும் ஆதிக்கடவுள் என்று இவற்றைக் கூறுகின்றனர். பொங்கல் பண்டிகை கொண்டாடுவதற்கு முன்னர் உள்ள இரண்டு நாட்களாகிய போகி மற்றும் பெரும் பொங்கல் நாட்களில் இத்தகைய நடுகற்களை வழிபடுகின்ற வழக்கம் உள்ளது. தருமபுரி பகுதியிலுள்ள இந்த இன மக்கள் எல்லோரும் இக்கடவுளை ஆதிகடவுளாக வழிபட்டனர். தற்போது வேறு இடங்களுக்கு சென்றுவிட்டதால் ஆண்டிற்கு ஒரு முறை வந்து வழிபடுகின்றனர்.

பெலதப்பசாமி என்றால் வெள்ளை நிறம் கொண்ட சாமி என்று பொருள். இங்குள்ள நடுகற்கள் மற்ற நடுகற்களில் இருந்து வேறுபட்டுக் காணப்படுகின்றன. ஒரு நடுகல்லில் இரண்டு வீரர்கள் நின்ற நிலையிலும் ஒரு பெண் அஞ்சலி அஸ்தத்திலும் வடிக்கப் பட்டுள்ளனர். முதலில் உள்ள வீரனின் கையில் தப்பட்டை என்ற இசைக்கருவியை வாசிப்பது போன்ற அமைப்பிலும் கரண்ட மகுடத்துடனும் காட்டப்பட்டுள்ளார். இரண்டாவது வீரனின் கைகளில் நீண்ட கத்தி போன்ற கருவி ஒறைக் கையில் பிடித்துக் கொண்டிருப்பது போன்றும் முடி அலங்காரம் கரண்ட மகுடத்தைப் போன்றும் உள்ளது. பல நடுகற்களில் தப்பட்டை என்ற இசைக் கருவியும் இடம் பெற்றுள்ளன. தலையில் சடையைப் போன்ற அமைப்பு ஒன்றும் உள்ளது. பெரும்பாலான நடுகற்களில் சடை காட்டப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இந்த புடைப்புச் சிற்பங்களின் உருவ அமைதியைக் கொண்டும் ஆடை அணிகலன்களைக் கொண்டும் விஜயநகர காலத்திய சிற்பக்கலை அமைப்பைப் போன்று காணப்படுகின்றது.

தி.சுப்பிரமணியன், தருமபுரி

## 77 : 20 குதிரை வீரன் கல்

தேனி மாவட்டம், பெரியகுளம் வட்டம், தேவதானப்பட்டி அருகில் நாயக்கர் காலத்து, 18-ம் நூற்றாண்டைச் சேர்ந்த குதிரை வீரன் ஒருவன் எதிர்களின் குதிரைப் படையுடன் சண்டையிட்டபோது உயிர் நீத்ததன் நினைவாக வீரக்கல் ஒன்று நாட்டப்பட்டுள்ளது. இவ்வீரன் வலபுறக் கொண்டையும் காதில் குண்டலங்களும் அணிந்துள்ளான். குதிரையின் மீதமர்ந்து வீராவேசத்துடன் பாய்ந்த நிலையில் எதிரியைத் தாக்கும் முகமாக இப் புடைப்புச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. இதில் குதிரை வீரனின் உடைகள் காற்றில் வேகமாய்ப் பறந்த நிலையும், குதிரையின் சேணத்தை இழுத்துப் பிடித்து, கால்களினால் அழுத்தி வேகம் காட்டும் நிலையும், குதிரை முன்னங்கால்களை மடக்கி, சேணத்தைச் சுண்டியிழுத்ததில் குனிந்த குதிரை, வேகமாக பறக்கும் நோக்கில் காட்டப்பட்டுள்து. இதில் வீரனின் உணர்ச்சி வேகத்தையும், வீரத்தையும் காட்டும் வண்ணம் வடிக்கப்பட்டுள்ளது.

ஆ.ஞானசேகரன், போடிநாயக்கனூர்

## 77 : 21 எரசக்க நாயக்கனூர் மலை பாறை ஓவியம்

தேனி மாவட்டம் உத்தமபாளையத்திலிரந்து 10 கி.மீ. கிழக்காக எரசக்க நாயக்கனூர் என்ற ஊர் உள்ளது. இவ்வூரின் தென்கிழக்கில் சுமார் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் மேற்கு தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியாக எரசக்க நாயக்கனூர் மலை அமைந்துள்ளது. இம்மலையில், பெருமாள் சுனை என்ற இயற்கையாக அமைந்த குகை தளத்தில், பண்டைக்கால மனிதன் பாறையில் தீட்டிய ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. குகையின் வெவ்வேறு பகுதிகளில், வெண்மை நிறத்தால் மனிதர்கள், விலங்குகள் மற்றும் சின்னங்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன.

இவ்வோவியங்களில் ஒன்று நான்கு மனித உருவங்கள் கைகளை நன்கு விரித்து ஆடல் புரியும் வண்ணம் வரையப்பட்டுள்ளது. இந்நான்கு மனித உருவங்களுள், இரண்டு மனித உருவங்களின் தலைபகுதியானது பறவையின் முகத்தை ஒத்து காணப்படுகின்றன. மற்றொன்றில் இரண்டு மனிதர்கள் சண்டையிடும் காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது. இவர்கள் எதிரெதிரே இருவேறு விலங்கின் மீது அமர்ந்துள்ளனர். ஒரு மனிதன் உயர்த்திய இடக்கையில் வாள் பிடித்து சண்டையிடுவது போன்று காட்டப்பட்டுள்ளது. மற்றொரு மனித உருவம் சற்று அழிந்த நிலையில் உள்ளதால் அவன் பிடித்திருக்கும் ஆயுதம் சரியாக தெரியவில்லை.

இவ்வோவியங்களில் சிந்து சமவெளி ஒத்த சில குறியீடுகள் காணப்படுகின்றன. ஓவிய தொகுதியில், இரண்டு முக்கோண வடிவங்கள் தனி தனியே உள்ளன. நடனமாடும் மனித உருவங்களுக்குக் கீழே ஒரு முக்கோணமும், சண்டையிடும் மனிதனின் கீழ் மற்றொரு முக்கோணமும் தென்படுகிறது. மற்றோர் இடத்தில், இரண்டு முக்கோணங்கள் ஒன்று சேர்ந்தாற்போல், உடுக்கை வடிவத்தை ஒத்து காணப்படுகின்றன. மானின் உருவம் வரையப்பட்ட இடத்திற்கு சற்று மேலே சில வளைந்த கோடுகள் உள்ளன. இம்மலைப் பகுதியில் பெருங்கற்படைச் சின்னமான நெடுங்கல் (ஆநரோசை) உள்ளமையால் பெருங்கற்காலத்தைச் சார்ந்த மனிதர்கள் இவ்வோவியத்தை வரைந்திருக்கலாம் என்று ஊகிக்கலாம்.

பா.ஜோதீஸ்வரன், சென்னை

## 77 : 22 எல்லப்பட்டி புத்தர் சிலை

தேனி மாவட்டம், உத்தமபாளையம் வட்டம், எல்லப்பட்டி என்ற ஊரின் தென்புறம் ஓடுகின்ற முல்லைபெரியாற்றங்கரையில் ஆய்வு செய்தபொழுது, தலையில்லாத புத்தர் சிலை ஒன்று காணப்பட்டது. இச்சிலையானது, அர்த்த பத்மாசனத்தில், உடலை நன்கு நிமிர்த்திய வண்ணம், தியான நிலையில் கைகளைப் பற்றி, மேலாடையோடு காணப்படுகிறது. இச்சிலை, சுமார் 4 1/2 அடி உயரம், 3 அடி அகலம் கொண்டுள்ளது. இச்சிலை பொ.கா. 9- 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனலாம். சமணர்களின் வாழிடமாக விளங்கும் உத்தமபாளையத்தில், புத்தர் சிலை காணப்படுவது சிறப்புடைய ஒன்றாகும். இதன் மூலம், பௌத்தம் மற்றும் சமணம் ஆகிய இரு சமயங்கள் தேனி மாவட்டத்தில் சிறப்புற்று விளங்கின என்பது தெளிவாகிறது.

பா.ஜோதீஸ்வரன், சென்னை

## 77 : 23 அபூர்வ வழிபாட்டுச் சிற்பம் கண்டுபிடிப்பு



புதுக்கோட்டை மாவட்டம், பொன்னமராவதி நகரில் அபூர்வமான வளமை வழிபாட்டுச் சிற்பம் ஒன்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையத்தின் செயலர் முனைவர்சொ.சாந்தலிங்கம் மற்றும் செயற்குழு உறுப்பினர் கரு.இராசேந்திரன் ஆகியோர் இந்த அபூர்வ சிற்பத்தைக் கள ஆய்வில் கண்டறிந்தனர். பொன்னமராவதி நகரின் மையப் பகுதியில் 4 அடி

உயரமுள்ள நடுகல் நடப்பட்டுள்ளது. மக்கள் இதனை நாட்டுக்கல் என்று பெயர் கொடுத்து வழிபடுகின்றனர்.

நான்கடி உயரமும், 1 1/2 அடி அகலமும் உள்ள இக்கல்லில் சிற்றுருவங்கள் சில செதுக்கப்பட்டுள்ளன. இக்கல்லுக்கு வெள்ளை அடித்து உருவங்களுக்கு சிவப்பு வண்ணம் பூசி மக்கள் வணங்கி வருகின்றனர். திருவாச்சி ஒன்றின் கீழ் பெண் உருவம் ஒன்று ஆடைகளற்ற நிலையில் செதுக்கப்பட்டுள்ளது. பெண் உருவத்தின் தலைக்குப் பதிலாக விரிந்த தாமரைப்பூ வடிவமைக்கப்பட்டுள்ளது. மேலிரு பக்கங்களில் இரண்டு சாமரங்களும், அதன் கீழ் சூரியன், பிறைச்சந்திரன் வடிக்கப்பட்டுள்ளது. பிறைச் சந்திரன் கீழ் ஒரு குத்தீட்டியும் காட்டப்பட்டுள்ளது. இவை அனைத்துக்கும் கீழாக திருநீற்றுப்படை தீட்டப்பட்டு குங்குமம் இடப்பட்டுள்ளது.

இச்சிற்பம் பெண்களால் குழந்தைப் பேறு வேண்டியும் மழைவளம் பெருகி வேளாண்மை சிறக்கவும் வேண்டி வழிபடப்படும் செழிப்புத் தெய்வமாகும். கலை வரலாற்றாசிரியர்கள் இதனைச் சக்கராயி என்றும் லச்சகவுரி என்றும் பெயரிட்டு அழைப்பர். தமிழ்நாட்டில் கும்பகோணத்தை அடுத்துள்ள தாராசுரத்தில் இது போன்றதொரு தெய்வம் மக்களால் வணங்கப்படுகிறது. பொ.கா.12-13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக தாராசுரம் சிற்பம் கருதப்படுகிறது. இதேபோன்ற மற்றொரு சிற்பம் கர்நாடக மாநிலம் பாதாமி எனும் இடத்தில் உள்ளது. பொன்னமராவதியில் தற்போது அறியப்பட்டுள்ள இச்சிற்பம் பொ.கா.12-13-ஆம் நூற்றாண்டுக்குரியதாகும். இக்கண்டுபிடிப்பின் மூலம் வளமைச் சடங்குகளும், வழிபாடுகளும் அண்மைக் காலம் வரை தமிழகத்தில் ஆழமாக வேரூன்றியிருப்பது உறுதிப்படுகிறது.

சொ. சாந்தலிங்கம், மதுரை

## 77 : 24 யானை குத்திப்பட்டான் கல்

திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டம் ஆழ்வார்குறிச்சி எனும் சிற்றூரில் இச்சிற்பம் உள்ளது. ஆழ்வார் குறிச்சியிலிருந்து சிவசைலம் செல்லும் சாலையில் உள்ளது இச்சிற்பம். சுவர் 3 அடி உயரம் உள்ள பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகிறது. இதில் வீரன் ஒருவன் யானை ஒன்றின் மத்தகத்தில் கத்தியால் குத்துவதுபோலவும் யானை தன் முன்னங் காலைத் தூக்கி வீரனை உதைப்பது போலவும் வடிக்கப்பட்டுள்ளது. இதன் காலம் பொ.கா.16-17-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

சங்க இலக்கியமான புறநானூற்றில் பொன்முடியார்,
"ஒளிருவாள் அருஞ்சமம் முறுக்கி
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"

எனப்பாடியுள்ளார் சிலப்பதிகாரத்தில் கோவலன் 'கடக்களிறு அடக்கிய கருணை மறவன்' எனச் சிறப்பிக்கப்படுகிறான்.

"ஆனை ஆயிரம் அமரிடை வென்ற மானவனுக்கு
வகுப்பது பரணி"

என்று பரணி இலக்கணம் பேசுகிறது. இந்தப் பின்னணியில் இப்போது கண்டறியப்பட்ட யானை குத்திப்பட்டான் நடுகல் முக்கியத்துவம் பெறுகிறது.

அ.குருஆறுமுகம், சேலம்

### 77 : 25 பண்ருட்டி, உளுந்தூர்பேட்டை வட்டாரத் தொல்லியல்

பண்ருட்டி மற்றும் உளுந்தூர்வேட்டை வாட்டாரத்தில் உள்ள கெடிலம் ஆற்றங்கரையில் கீழ்கண்ட ஊர்களில் கள ஆய்வு மேற்கொண்டு புதிய தொல்லியல் இடங்கள் கண்டுப்பிடிக்கப் பட்டன. மேலும் அவை இரும்புக்கால மற்றும் இடைக்கால பண்பாட்டுக் காலத்தைச் சார்ந்தவையாகும். அவை : திருவாமூர், திடீர்குப்பம், சிறுப்புலியூர், கிழக்கு மருதூர், திருநாவலூர் (மங்காரகுளம்), செஞ்சிக்குப்பம், பெரிய மாரனோடை, பெரும்பட்டு, கூவாகம், பெரிய செவலை, அயன்வேலூர், கீழ் குப்பம் வேலூர், பாண்டூர், செல்லூர், கொண்ட சமுத்திர பாளையம், அருங்குறுக்கை, தாமல், நன்னாவரம், அரளி ஆகியவை.

கி.தேவிஸ்ரீ, தஞ்சாவூர்

### 77 : 26 சேலம் வட்டார நடுகற்களும் சிற்பங்களும்

இரா.ரமேஷ், சென்னை

சேலம் மாவட்ட மேட்டூர் மற்றும் ஓமலூர் வட்டங்களில் உள்ள ஊர்களில் களாய்வு மேற்கொண்டு சில புதிய நடுகற்களும் சிற்பங்களும் கண்டறியப்பட்டுள்ளன.

கோவிந்தப்பாடி : சேலம் மாவட்டம், மேட்டூர் வட்டத்தில் மேட்டூரில் இருந்து மைசூர் செல்லும் சாலையில் 25 கி.மீ. தொலைவில் காவிரியாற்றின் கரையில் இவ்வூர் அமைந்துள்ளது.

மாரியம்மன் கோவிலின் பின்புறம் நடுகல் உடைந்த நிலையில் உள்ளது. மூன்று நிலைகளைக் கொண்ட இந்நடுகல்லின் பாதி பகுதி மண்ணில் புதைந்துள்ளது. வீரனின் தலை மற்றும் அதன் மேல் உள்ள தொகுதியில் கடவுள் மற்றும் அவரின் இருபுறமும் தேவகன்னிகளும் காட்டப்பட்டுள்ளனர். நடுகல்லின் அமைப்பைக் கொண்டு இதன் காலம் பொ.க. 13 - 14 ஆம் நூற்றாண்டு எனலாம்.

பனமரத்தூர் : ஊருக்கு மேற்கே உள்ள கவுண்டர் தோட்டத்தில் கிழக்கு பார்த்து நடப்பட்டுள்ள நடுகல்லில் வீரன் நின்ற நிலையில் வலது கையில் வாளும் இடது கையில் கேடயமும் வைத்துள்ளான். வீரனின் இடுப்பில் ஒரு குறுவாள் காட்டப்பட்டுள்ளது. வீரனின் வயிற்றில் இரண்டு அம்பும் தலையில் ஒரு அம்பும் தைத்துள்ளன. மாடுகள் வீரனின் இடது கால் புறம் காட்டப்பட்டுள்ளன. இந்நடுகல் பொ.கா. 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

சின்னதண்டா : இவ்வூர்ச் சாலை ஓரத்தில் கல் ஒன்று நடப்பட்டுள்ளது. பொ.கா.13-14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இந்நடுகல்லில் இரண்டு வீரர்கள் ஒரு புலியைத் தாக்குவது போன்று காட்டப்பட்டுள்ளது.

பெரும்பள்ளம் : பெரிய மாரியம்மன் கோவிலுக்கு பின்புறம் மூன்று நடுகற்கள் நடப்பட்டுள்ளன. பொ.கா. 12 - 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த முதல் நடுகல்லில் வீரன் ஒரு புலியை தாக்குவதுபோல் காட்டப்பட்டுள்ளது. அவன் அருகில் ஒரு பெண் உருவம் காட்டப்பட்டுள்ளது. இரண்டு மற்றும் மூன்றாம் நடுகற்கள் காலத்தால் பிற்பட்டவை. ஒரு நடுகல்லில் வீரன் மற்றும் அவனது மனைவியும் மற்றொரு நடுகல்லில் வீரனும் அவனது அருகில் இரண்டு பெண்களும் உள்ளனர்.

செங்கையூர் : இவ்வூர்ச் சாலையோரத்தில் ஒரு நடுகல் நடப்பட்டுள்ளது. இந்நடுகல்லில் இரண்டு வீரர்கள் சண்டையிடுவதுபோல் காட்டப்பட்டுள்ளது. ஒரு வீரன் குதிரையின் மேல் அமர்ந்துள்ளது போன்றும் மற்றொரு வீரன் கீழிருந்து குதிரையின் கழுத்தில் வாளால் குத்துவது போன்றும் காட்டப்பட்டுள்ளது.

மானதால் : இவ்வூரில் உள்ள நடுகல்லில் வீரன் கையில் வில் அம்புடன் காட்டப்பட்டுள்ளான்.

குண்டுதாசன்பட்டி : இவ்வூரின் வடக்கே நடப்பட்டுள்ள நடுகல்லில் வீரன் கையில் வில் அம்பு வைத்துள்ளான். வீரனின்

அருகில் அவனது மனைவியும் குழந்தையும் காட்டப்பட்டுள்ளனர்.

ஓமலூர் : இவ்வூரின் தெற்கே உள்ள கோட்டை மாரியம்மன் கோவிலின் பின்புறம் ஒரு நடுகல் நடப்பட்டுள்ளது. வீரன் ஒரு கையில் வாளும் மற்றொரு கையில் கேடயமும் வைத்துள்ளது போன்று காட்டப்பட்டுள்ளது.

பக்கநாடு : ஊருக்கு வடக்கே உள்ள சிவன் கோவிலின் அருகில் இரண்டு நடுகற்கள் கண்டறியப்பட்டுள்ளன. இரண்டு நடுகற்களிலும் வீரன் மற்றும் அவனது மனைவி இருவரும் வணங்குவதுபோல் காட்டப்பட்டுள்ளது.

கருப்பூர் : இவ்வூரில் அம்மன் கோவிலின் அருகில் ஒரு நடுகல் நடப்பட்டுள்ளது. நின்ற நிலையில் உள்ள உருவத்தின் வலது கையில் ஜாடியும் இடது கையில் தலைக்கு மேல் தூக்கி பிடித்தவாறு குடையும் உள்ளன. இது வாமனர் உருவமாகவும் அந்தணர்க்கு கொடுக்கப்பட்ட நிலதான எல்லைக் கல்லாகவும் இருக்கவேண்டும். ஊருக்கு கிழக்கே வரலாற்றுக்கால வாழ்விடப்பகுதி அமைந்துள்ளது. இவ்வாழ்விடப்பகுதியில் ஒரு விநாயகர் சிலையும் ஒரு தட்சிணாமூர்த்தி சிலையும் காணப்படுகின்றன. இச்சிலைகளின் காலம் பொ.கா. 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம்.

ஒண்டிவீரனூர் : ஊரில் உள்ள விநாயகர் கோவிலுக்கு அருகில் ஒரு நடுகல் மற்றும் இரண்டு பெண் தெய்வங்களின் சிலைகளும் காணப்படுகின்றன.

### 77 : 27 சேலம் மாவட்டத் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

சேலம் மாவட்டத்தில் உள்ள மேட்டூர் மற்றும் ஓமலூர் வட்டங்களில் களாய்வு மேற்கொண்டு சில புதிய தொல்லியல் இடங்களில் தொல்பொருட்கள் கண்யறியப்பட்டுள்ளன. அவை கீழே தரப்படுகின்றன.

வெள்ளகரட்டூர் : மேட்டூர் அணையின் நீர் பிடிப்பு பகுதியில் இருப்புக்கால ஈமச்சின்னங்களான கற்குவை மற்றும் கற்பதுக்கைகள் 100-க்கும் மேற்பட்டவை கண்டறியப்பட்டுள்ளன. கற்பதுக்கைகள் மேற்கு பக்க இடுதுளையுடன் காணப்படுகின்றன. கருப்பு மற்றும் சிவப்பு, பளபளப்பான கருப்பு, பளபளப்பான சிவப்பு நிற பானை ஓடுகள் கண்டறியப்பட்டுள்ளன. இவ்விடத்தை உள்ளூர் மக்கள் பாண்டியன் திட்டு என்று அழைக்கின்றனர்.

மல்லிகுந்தம் : ஊருக்கு மேற்கே வரலாற்று தொடக்க கால வாழ்விடப் பகுதி சுமார் 20 ஏக்கர் பரப்பளவில் கண்டறியப் பட்டுள்ளது. உள்ளூர் மக்களால் கோட்டைமேடு என்று அழைக்கப்படும் இவ்விடத்தில் கருப்பு மற்றும் சிவப்பு, கருப்பு, சிவப்பு பானை ஓடுகள் மற்றும் மணிகள் சங்கு வளையல் துண்டுகள் கண்டறியப்பட்டுள்ளன. வாழவிடப்பகுதி 2 மீட்டர் அளவு நிலப்பகுதியில் இருந்து உயர்ந்து காணப்படுகிறது.

மோட்டு ஆண்டிக்கரை : வரலாற்று தொடக்காகல வாழ்விடப்பகுதி ஊருக்கு மேற்கே சுமார் 10 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. இவ்விடத்தை அப்பகுதி மக்கள் கோட்டைமேடு என்று அழைக்கின்றனர்.

ஊஞ்சப்பட்டி : ஊருக்கு கிழக்கு பகுதியில் சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் இரும்புக்கால ஈமச்சின்னங்களான கற்பதுக்கை மற்றும் கற்குவைகள் கண்டறியப்பட்டுள்ளன. சுமார் 5 முதல் 15 மீட்டர் அளவுடைய 30-க்கும் மேற்பட்ட கற்குவைகள் நல்ல நிலையில் காணப்படுகின்றன. 100-க்கும் மேற்பட்ட கற்குவைகள் சிதைக்கப்பட்டுள்ளன.

மலையடிப்பட்டி :உள்ளூர் மக்களால் பாண்டியன்வீடு என அழைக்கப்படும் இரும்புக்கால ஈமச்சின்னமான கற்குவைகள் சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றன. கல்வட்டத்திற்கு பயன்படுத்தப்படும் ஒரு கல்லில் இரண்டு விலங்குகளின் படங்கள் கீறலாக வரையப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

பாண்டிகல் (நரிக்கல்லூர்) : ஊருக்கு மேற்கே உள்ள மலைப்பகுதியில் பாண்டிக்கல் என்ற இடத்தில் ஒரு சிறிய குகை காணப்படுகிறது. அக்குகையின் கீழ் உள்ள பாறையில் பண்டைய காலத்திய 154 குழிகள் காணப்படுகின்றன. இக்குழிகள் எதற்கு பயன்படுத்தப்பட்டது என்று சரியாக தெரியவில்லை.

நத்தப்பட்டி : ஊருக்கு கிழக்கே இரும்புக்கால மற்றும் வரலாற்றுத் தொடக்ககால வாழ்விடப் பகுதி சுமார் 10 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகிறது. இவ்வாழ்விடப் பகுதியில் கருப்பு மற்றும் சிவப்பு, பளபளப்பான சிவப்பு, பளபளப்பான கருப்பு நிற பானை ஓடுகள், கார்னீலியன் மணிகள் மற்றும் வட்டச் சில்லுகள் போன்றவை கண்டறியப்பட்டுள்ளன. உள்ளூர் மக்களால் இவ்விடம் நத்தக்காடு என அழைக்கப்படுகிறது.

ஓமலூர் : ஊருக்கு தெற்கே உள்ள கோட்டைமேடு பகுதியில் இரும்புக்கால வாழ்விடப் பகுதி சுமார் 20 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகிறது. இவ்வாழ்விடப் பகுதியில் கருப்பு மற்றும் சிவப்பு, பளபளப்பான சிவப்பு, பளபளப்பான கருப்பு நிற பானை ஓடுகள், சங்கு வளையல் துண்டுகள், வெள்ளை வண்ணம் பூசப்பட்ட சிவப்பு நிற பானை ஓடுகள், குறியீடுகள் மற்றும் வட்ட சில்லுகள் போன்றவை கண்டறியப்பட்டள்ளன. மேலும், கீழ்கண்ட ஊர்களில் இரும்புக் கால, வரலாற்றுத் தொடக்க கால வரலாற்றுக்கால வாழ்விடப் பகுதிகளும், பானை ஓடுகளும் கிடைத்துள்ளன. அவை:

வெள்ளகரட்டூர், நவப்பட்டி, மோட்டு ஆண்டிக்கரை, மல்லிகுந்தம், ஊஞ்சப்பட்டி, மலையடிபட்டி, செங்காட்டூர், வீரக்கல், கோட்டைமேடு, அம்மன் கோவில்பட்டி (ஜப்பான்வெட்டி), புலியம்பட்டி, பக்கநாடு, சௌரியூர், தொரமங்கலம், குப்பகவுண்டனூர் (நரிக்கல்லூர்), நத்தப்பட்டி, அமரகுந்தி, பெரும்பள்ளம், கோவிலூர், ஏனாதி, காருவள்ளி, புளியந்தோப்பு, நல்லூர், ஓமலூர், சம்பலகாடு, மாரமங்கலம், மஞ்சயங்காடு ஆகியவை.

இரா.ரமேஷ், சென்னை

### 77 : 28 கோரைக்குட்டம் சமண தீர்ந்தங்கரர் சிலை

இராமநாதபுரம் மாவட்டம், திருப்புல்லாணி அருகே கோரைக்குட்டம் செல்லும் வழியில் கொட்டகுடி ஆற்றங்கரையில் (அலையாத்தி காடுகள் நிறைந்த உப்பங்கழி) ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் தலைப்பகுதி இல்லாத யோக நிலைச் சமண தீர்த்தங்கரர் சிலை ஒன்றும், நின்ற நிலையில் கால் பகுதி மட்டும் உள்ள சிலை ஒன்றும் அறியப்பட்டுள்ளன. மறுமலர்ச்சிக் காலத்தில், சமண மதம் வலுவிழந்த நிலையில் பிற மதத்தினரால் சிலைகள் உடைக்கப்பட்டு நீர்நிலைகளில் எறியப் பட்டதின் காரணமாக இச்சிலைகள் இந்த ஆற்றில் வீசப் பட்டிருக்கலாம். இச்சிலைகள் உப்பு நீரால் அரிக்கப்பட்டுள்ளதால் அதன் பின்பகுதியில் உள்ள கல்வெட்டுக்கள் வாசிக்க இயலாத அளவற்கு அழிந்துள்ளன. பீடத்தில் உள்ள தீர்த்தங்கரரின் வாகனம் தொடர்பான உருவங்களும் தேய்ந்துள்ளன. இச்சிலை இருக்கும் இடம் திருப்புல்லாணி ஆதி ஜெகநாதப் பெருமாள் கோவிலில் இருந்து 1 கி.மீ. தூரமாகும்.

வே.இராஜகுரு, இராமநாதபுரம்.

### 77 : 29 நரிப்பையூர் முஸ்லிம் பள்ளிவாசல்

இராமநாதபுரம் மாவட்டம், சாயல்குடி அருகிலுள்ள நரிப்பையூரில், கடல்நீரைக் குடிநீராக்கும் திட்ட வளாகம் அருகில் முஸ்லிம் கபர்ஸ்தான் உள்ளே சுமார் 500 ஆண்டு பழமையான முஸ்லிம் பள்ளிவாசல் உள்ளது. இப்பள்ளிவாசல் மேற்குச் சுவரின் உள்பகுதியில் தொழும் திசை மாடம், வில் போன்று வளைந்த அமைப்பில் உள்ளது. ஒரு மண்டபம் போன்ற அமைப்பில் காணப்படும் இப்பள்ளிவாசலில் தொழும் மாடம், அர்த்தமண்டபம், முன்மண்டபம் ஆகியவை உள்ளன. இதன்மேல் மினார் எதுவும் கட்டப்படவில்லை. எனவே, இதை மொட்டைப் பள்ளிவாசல் என உள்ளூர் மக்கள் அழைக்கிறார்கள். இதன் சுவர் மணற்கற்களாலும் சுண்ணாம்பாலும் கட்டப்பட்டுள்ளது. மேற்கூரை பெரிய கற்களால் மூடப்பட்டு செங்கற்களால் வேயப்பட்டள்ளது. கீழிருந்து ஏறிச் செல்ல 18 படிகள் இதில் இருந்ததாகவும் அவை தற்போது மணலில் புதைந்திருப்பதாகவும் கூறப்படுகிறது. இப்பள்ளிவாசல் தூண்கள் தாமரைப்பூ போதிகையோடு கலை அழகுடன் அமைக்கப்பட்டுள்ளன. தூண்களிலும் மேற்கூரையிலும் பலவிதமான பூக்களின் உருவங்கள் கோட்டுருவங்களாக வெட்டப்பட்டுள்ளன. மொத்தம் மூன்று வாயில்கள் உள்ளன. இரவு நேரத்தில் தொழுவதற்கு வசதியாக விளக்கு வைக்கும் சாளரங்களும் உள்ளன.

- வே.இராஜகுரு, இராமநாதபுரம்

### 77 : 30 சாயல்குடிப் பகுதியில் மாலைக் கோயில்கள்

கணவனுடன் உடன்கட்டை ஏறிய மனைவிக்கு அமைக்கப்பட்ட நடுகல்லின் மேல் எழுப்பப்படும் கோயில் மாலைக்கோயில், மாலையீடு, மாலையடி, தீப்பாய்ஞ்ச அம்மன் கோயில், மாலைக்காரி, சீலைக்காரி அம்மன் கோயில் எனப்படுகிறது. இராமநாதபுரம் மாவட்டம் நரிப்பையூரில் பாரதமாதா உயர்நிலைப்பள்ளி எதிரில் இரண்டு மாலைக்கோயில்களும், கிழக்குக் கடற்கரைச் சாலையில் தரவைப் பகுதியில் ஒரு மாலைக்கோயிலும் உள்ளன. இரு கோயில்களில் நடுகல் சிற்பம் ஏதுமில்லை. மற்றொன்றில் பாதி உடைந்த நிலையில் கருங்கல்லிலான நடுகல் உள்ளது. இந்த நடுகல்லில், நிற்கும் வீரனின் சிற்பம் உள்ளது. உடைந்துபோன பகுதியில் பெண்ணின் உருவம் இருந்திருக்கலாம். இவற்றில் இரண்டு கோயில்கள் கோபுரம் போன்ற மேல் அமைப்புடனும் ஒன்று மொட்டைக் கோபுரமாகவும் உள்ளது. கோபுரம் இல்லாத

மாலையடி 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியர் காலக் கட்டடக்கலை அமைப்பில் உள்ளது. இதன் நடுவில் சிலை இருந்து வழிபட்டதற்கான தடயம் உள்ளது. மற்ற இரண்டும் 15ஆம் நூற்றாண்டிற்குப் பின் விஜயநகர, நாயக்க மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்டு இருக்கலாம். இம்மூன்று கோயில்களும் மணற்கற்களால் கட்டப்பட்டுள்ளன.

இதேபோல் சாயல்குடி அருகே கொக்கரசன்கோட்டை என்ற ஊரில் பேருந்து நிறுத்தம் அருகில் ஒரு மாலைக்காரியம்மன் கோயில் உள்ளது. இவ்வூரில் வசதி வாய்ப்புடன் இருந்த வெள்ளாளஞ் செட்டி சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவர், குதிரையில் வந்தபோது இடறி விழுந்து இறந்துவிட்டார். அவருடன் அவர் மனைவியும் உடன்கட்டை ஏறினார். இதனால் அப்பெண்ணின் விருப்பப்படி அவருடைய வம்சாவளியினர் இக்கோயிலைக் கட்டி குலதெய்வமாக வழிபட்டு வருகிறார்கள். இக்கோயில் 18ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. இக்கோயில் தற்போது வழிபாட்டில் உள்ளது.

தூத்துக்குடி மாவட்டம் வேம்பார் என்ற ஊரில் சிவபெருங்குன்றம் என்ற பகுதியில் ஒரு மாலைக்கோயில் உள்ளது. இது வேட்டைக்குப் போன போர் வீரன் ஒருவன், பாம்பு கடித்து இறந்த பின்பு அவன் மனைவி அவனுடன் உடன்கட்டை ஏறி இறந்ததின் நினைவாக அமைக்கப்பட்ட மாலைக்கோயில் ஆகும். மறவர் சமுதாயத்தினரின் குலதெய்வமாக அவர்களின் வம்சாவளியினரால் தற்போதும் வழிபடப்பட்டு வருகிறது.

வே.இராஜகுரு, இராமநாதபுரம்

### 77 : 31 சம்மந்தவயல் புத்தர் சிலை

இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டம் ஆனந்தூர் அருகில் சம்மந்தவயல் என்ற ஊரின் வயல் வரப்பில் கி.பி.11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புத்தர் சிலை உள்ளது. தினத்தந்தி தொண்டி செய்தியாளர் மணிமாறன் தகவலின் பேரில் இது அறியப்பட்டது. ஐந்தடி உயரம் உள்ள இச்சிற்பத்தில் புத்தர் அமர்ந்த நிலையில் தியான கோலத்தில் உள்ளார். இதன் கீழ் பகுதி மண்ணில் புதைந்த நிலையில் உள்ளது. மார்பில் சீரை என்ற மேலாடை அணிந்து நீண்ட காதுகளுடன் காணப்படுகிறார். அவர் கையில் உள்ள தர்மச் சக்கரமும், தலையில் உள்ள சுருள்முடியும் சிதைந்த நிலையில் உள்ளன. சுருள்முடிக்கு மேல் உஷ்ணீஷம் என்ற தீச்சுடர் காணப்படுகிறது. அதில் துளை உள்ளது. இது நவரத்தினக் கற்கள் பதிப்பதற்காக

உருவாக்கப்பட்டிருக்கலாம். புன்னகை புரியும் இதழ்களுடன் மிக அழகாக சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது.

வே.இராஜகுரு, இராமநாதபுரம்

### 77 : 32 உத்தரகோசமங்கை ஏகபாத மூர்த்தி சிற்பம்

இராமநாதபுரம் மாவட்டம் உத்தரகோசமங்கையில் மரகத நடராஜர் சன்னதியின் வெளிப்புற வடக்குத் தேவகோட்டத்தில் ஏகபாத மூர்த்தி சிற்பம் உள்ளது. இங்குள்ள ஏகபாத மூர்த்தி சிற்பத்தில் நின்ற நிலையில் இருக்கும் சிவன், முன்னிரு கைகளில் அபய, வரத முத்திரைகளுடனும், பின்னிரு கைகளில் மான், மழுவை ஏந்தியும் காட்சியளிக்கிறார். பிரம்மா மூன்று தலைகளுடன் காணப்படுகிறார். பிரம்மாவும், விஷ்ணுவும் அமர்ந்த நிலையில் ஒரு கால் மட்டும் கொண்டு உள்ளனர். விஷ்ணு, பிரம்மாவின் கைகள் வணங்கிய நிலையில் இல்லாமல் அபய முத்திரையுடன் உள்ளன. மற்றொரு கையில் அவர்களுக்கான ஆயுதங்களை ஏந்தி உள்ளனர். இச்சிற்பம் தனிச் சிறப்புடையதாகும். மரகத நடராஜர் சன்னதி, பொ.ஆ.1678 முதல் 1710 வரை சேது நாட்டை ஆண்ட கிழவன் சேதுபதி காலத்தில் கட்டப்பட்டதாகக் கூறப்படுவதால், இந்த ஏகபாத மூர்த்தி சிற்பமும் அதே காலத்தைச் சேர்ந்ததாகக் கருதலாம்.

வே.இராஜகுரு, இராமநாதபுரம்

### 77 : 33 குழந்தையுடன் தீயில் பாய்ந்த பெண் - சதிக்கல்

தேனி மாவட்டம், சின்னமனூர் வட்டம், ஓடைப்பட்டிக்கருகில் 17 - 18-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சதிக்கல் கண்டறியப்பட்டுள்ளது. சதிக்கற்களில் பெண்கள் மட்டுமே செதுக்கப்பட்டிருப்பது காணப்படும் ஒன்று. இக்கல்லில் தாயும், சேயும் வடிக்கப்பட்ட நிலை குறிப்பிடத் தகுந்த ஒன்றாகும். புடைப்புச் சிற்பமான ஒரு ஆண் மகன் அதாவது அவளின் கணவன் போர் வீரனாக இருந்து போரில் இறந்துள்ள நிலையைக் குறிக்கும் வகையில் உடைவாளை கம்பீரமாக ஒரு கையில் பிடித்தவாறு மறுகையில் நீண்டவாளைத் தரையில் ஊன்றி, நிற்பதுபோல் காட்டப்பட்டுள்ளான். பெண் மழங்கால் வரை சேலையுடுத்தியும், மேலாடையின்றி ஒழுங்கமைக் கப்பட்ட கேசமும், காலில் தண்டையும், கையில் வளையல்களும் அணிந்துள்ளதால் செல்வச் செழிப்புள்ளவள் என்று கருதலாம். காவல் தெய்வமாக இன்று இச்சதிக்கல் போற்றப்பட்டு வருகிறது.

- எம்.கனகராஜ், போடிநாயக்கனூர்.

## 77 : 34 அண்ணன் தம்பி வீரக்கல்

தேனி மாவட்டம், மஞ்சிநாயக்கன்பட்டி ஊராட்சிக்குட்பட்ட கொப்புரெங்கன்பட்டி என்ற பூதிப்புரம் கிராமத்தில் அண்ணன் தம்பி இருவருக்காக வைக்கப்பட்டுள்ள 17 - 18ஆம் நூற்றாண்டு வீரக்கல் ஒன்று அறியப்பட்டுள்ளது. இச்சகோதரர்கள் இவ்வூரின் ஊர்க்காவல் வீரர்களாக இருந்து எதிரிகளிடமிருந்து இவ்வூரைப் பாதுகாக்கும் பொருட்டு நடைபெற்ற போரில் வீரமரணம் அடைந்ததின் நினைவாக இந்நடுகல் வைக்கப்பட்டிருக்கலாம். இது 4 அடி உயரமும், 3 அடி அகலமும் உடையதாகும். இங்கு இரு வீரர்களின் உருவங்களும் புடைப்புச் சிற்பமாக காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. இவ்விரு வீரர்களும் தத்தமது வலது கையில் பெரிய போர்வாளை உயர்த்திப் பிடித்த நிலையிலும் இடது கைகள், அவரவர் இடுப்பிலுள்ள குறுவாளைப் பிடித்துக் கம்பீரமாக நிற்கின்றனர். இடதுபுற தலைக் கொண்டை அமைப்பும், காதில் குண்டலங்களும், முழங்கால் வரை கட்டிய கச்சையும் வெகு நேர்த்தியாக காட்டப்பட்டுள்ளன.

- சி. மாணிக்கராஜ், போடிநாயக்கனூர்

## 77 : 35 ஒட்டன்சத்திரம் வட்டாரத் தொல்லியல்

திண்டுக்கல் மாவட்டம், வேடசந்தூர் - ஒட்டன்சத்திரம் சாலையில் 8 கி.மீ. வடகிழக்காக கேதையுறும்பு என்ற ஊர் அமைந்துள்ளது. இவ்வூரின் தெற்குபுறத்தில் சுமார் 200 அடி மலைக்குன்றின் மேல் இரு பெரிய கற்பாறைகள் ஒன்றோடு ஒன்று சாய்ந்து பண்டைய மனிதனின் வாழ்விடம் போன்று காட்சியளிக்கிறது. இதனுள், பாறைக்கீறல்கள் (Petroglyphs) குறுக்கும் நெடுக்குமாக கீறப்பட்டுள்ளன. சுமார் 1 செ.மீ. ஆழமும், 5 செ.மீ. உயரமும் கொண்டதாக இவை அமைந்துள்ளன. அனைத்து கீறல்களும் அருகருகேயே உள்ளன. இங்கு மேலும் புதிய கற்காலத்தைச் சார்ந்த இரண்டு கைக்கோடாரிகள் அறியப்பட்டுள்ளன. இவை சுமார் 20 செ.மீ. நீளமும், 6 செ.மீ. கனமும் கொண்டவை. மேலும், இரும்பு கசடுகளும், கருப்பு சிவப்பு பானை ஓடுகளும் இங்கு கிடைக்கின்றன. இம்மலையின் உச்சியில் செங்கல் மற்றும் சுண்ணாம்பிலான சிதிலமடைந்த மேற்குப் பார்த்த கோயில் ஒன்றும் உள்ளது. செங்கற்கள் 10 செ.மீ. நீளமும் 3 செ.மீ. கணமும் உள்ளவை. இங்கு தலை உடைந்த சிலை ஒன்றுள்ளது. முருகப்பெருமானின் அம்சமான ருத்ராக்ஷமாலை, இடது கையை தொடையில் வைத்தவாறு உள்ள ஊருஹஸ்த அமைதி, மரவுறி ஆடை ஆகியவை காணப்படுவதால்

இதனை முருகனின் சிலை எனலாம். மேலும், மலைக் குன்றில் ஆங்காங்கே சதுர வடிவில் 1/2 அடி அளவிற்கு குறியீடுகள் உள்ளன. இம்மலையின் வடக்குப் புறத்தில் 6 இடங்களில் நன்கு தேய்ந்த வழுவழுப்பான தரைப்பகுதிகள் உள்ளன.

பெ.முருகன், சென்னை

### 77 : 36 கீழ்பசாரில் அரிய சிற்பங்கள்

திண்டிவனம் வட்டம், கீழ்பசார் கிராமத்தில் திரௌபதி அம்மன் கோயில் அருகில் 5அடி உயரம் கொண்ட கற்பலகையில் கொற்றவை எருமை தலை மீது நேராக நின்றகோலத்தில் எட்டுக்கரங்களுடன் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளாள். தலையைக் கரண்ட மகுடமும் கண்ணி மாலையும் அழகு செய்கின்றன. கொற்றவையின் பின்புறம் மானும் சிங்கமும் காட்டப்பட்டுள்ளன. வலது புறத்தில் உள்ள அடியவர் மண்டியிட்டு இரு கரங்கள் கூப்பி அன்னையை வழிபடும் நிலையிலும் இடப்புறத்தில் உள்ள அடியவர் இடது கரத்தில் கட்டாரி ஏந்தி, வலதுகரத்தில் தன் தலையை அரிந்து கொள்ளும் நிலையிலும் செதுக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் காலம் பொ.கா.10-ஆம் நூற்றாண்டாகக் கருதலாம். இவ்வூர் குளக்கரையில் 5 அடி உயரம் கொண்ட பெருமாள் சிற்பம் நேராக நின்ற கோலத்தில் நான்கு கரங்களுடன் காட்சியளிக்கிறது. மேற்கரங்கள் சங்கு, சக்கரம் ஏந்தியும் கீழ்வலது கரம் அபயம் அளித்தும் இடது கரம் தொடைமீது வைத்த நிலையிலும் செதுக்கப்பட்டுள்ளது. இப்பெருமாளை அடி முதல் முடிவரை அணிகலன்கள் அழகு செய்கின்றன. இச்சிற்பத்தைச் சோழர் கலைப் பாணியைச் சார்ந்ததாகக் கருதலாம்.

கோ.உத்திராடம்
அன்னம்பாக்கம்

### 77 : 37 கவுந்தப்பாடி, சண்டிகேசுவரர், மூத்ததேவி சிற்பங்கள்

ஈரோடு மாவட்டம் கவுந்தப்பாடியில் இருக்கும் விசுவேசுவரசுவாமி - விசாலாட்சி சிவன்கோயில் வளாகத்தில் பழமையான சண்டிகேசுவரர் சிற்பம் காணப்படுகிறது. சிற்பம் அமர்ந்த நிலையில் உள்ளது. இடது காலைத் தரையில் கிடைமட்டமாகக் கிடத்தி, வலது காலைத் தூக்கிக் குத்திட்ட நிலையில் உள்ளது. நன்கு விரிந்த சடைமண்டலம், குண்டலங்கள், ஆரம், தோள்வளைகள், கழல்கள், முப்புரிநூல் ஆகியவை உள்ளன. காலம் பொ.கா. 13-ஆம்

நூற்றாண்டாக இருக்கக்கூடும். மேற்சொன்ன அதே இடத்தில் காணப்படும் மூத்ததேவியின் சிற்பம் அமர்ந்த நிலையில் உள்ளது. இடது காலைக்கிடை மட்டத்தில் வைத்தும் வலது காலைத் தொங்கவிட்டவாறும் அமர்ந்திருக்கிறாள். தேவியின் வலப்பக்கத்தில் காளை முகத்துடன் கூடிய மாந்தனின் உருவமும் இடப்பக்கத்தில் மாந்தியின் உருவமும் வடிக்கப்பட்டுள்ளன. இருவரின் அமர்ந்த கோலமும் தேவியின் கோலத்தை ஒத்துள்ளன. மூவரின் கால்களின் கீழ்ப்பகுதி மண்ணுக்குள் புதைந்து மறைந்துள்ளது.

### 77 : 38 குறிஞ்சேரி - முருகன் சிற்பம்

உடுமலை வட்டம், குறிஞ்சேரி ஊரில் தற்போது விநாயகர் கோயில் என்றழைக்கப்படும் கோயில் வளாகத்தில் அழகிய தோற்றத்தில் முருகனின் சிற்பம் நின்ற கோலத்தில் சிங்கமுகத்துடன் கூடிய திருவாசியுடன் காணப்படுகிறது. உடன் வள்ளி, தெய்வானை தேவியர் சிற்பங்கள் உடைந்துவிட்ட நிலையில் மார்புப் பகுதிவரை காணப்படுகின்றன. மயில் முழுதாக உள்ளது. ஊர்ப்பூசல் ஒன்றின் காரணமாக இச்சிறிபங்கள் இடம் பெயர்க்கப்பட்டன எனக் கூறப்படுகிறது. அணிகலன்கள், ஆடை அமைப்பு என அழகிய வேலைப்பாடுகளுடன் அமைந்த சிற்பங்கள். பொ.கா.17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கக்கூடும்.

### 77 : 39 நாதம்பாளையம் - நடுகல் சிற்பம்

திருப்பூர் மாவட்டம், சேவூர் அருகில் நாதம்பாளையம் என்னும் கிராமத்தில் காணப்படும் நடுகல் சிற்பத்தில் வீரன் தன் இடது கையில் துப்பாக்கியை ஏந்தியவாறு இருப்பதுதான் இப்பகுதியில் இதுவரை பார்த்த நடுகற்களினின்றும் இந்நடுகல்லை வேறுபடுத்திக் காட்டுகிறது. நாயக்கர் காலப்பாணியில் பெரிய தலைக் கொண்டையும் நீண்ட செவிகளும் அவற்றில் தடித்த காதணிகளும் உள்ளன. பதக்கத்துடன் கூடிய ஆரம், தோள்வளை, கைவளை, கால் கழலும் சிற்ப வடிவை அழகு செய்கின்றன. வீரனின் வலது கையில் உள்ள ஆயுதம் ஒரு வேல் கம்பாக இருக்கக்கூடும்.

### 77 : 40 பாப்பம்பட்டி - நினைவுக்கல்

கோவை வட்டம், கோவில்பாளையம் அருகில் பாப்பம் பட்டியில் உள்ள கருகாளியம்மன்கோவில் வளாகத்தில் ஒரு நினைவுக்கல் சிற்பம் வழிபாட்டில் உள்ளது. இச்சிற்பத்தில் ஆணும் பெண்ணும் நின்ற நிலையில் கைகளைக் கூப்பி வணங்கும் நிலையில்

காணப்படுகிறார்கள். இருவரின் தலைக்குமேல் சிங்கமுக திருவாசி காணப்படுகிறது. ஆணின் வலது புறம் இரு முனைகளைக் கொண்ட சூலம் போன்ற ஓர் ஆயுதம் நிறுத்தப்பெற்றுள்ளது. இச்சிற்பம் 17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

### 77 : 41 துங்காவி - நினைவுக்கல்

உடுமலை அருகே துங்காவி என்னும் ஊரில் அமராவதி ஆற்றின் வாய்க்கால் அருகே உள்ள கோயிலின் கருவறைக்கு அருகில் ஒரு சிறிய மாட அமைப்பினுள் ஆணும் பெண்ணுமாக இருக்கும் ஒரு நினைவுக்கல் உள்ளது. இடுப்பளவு மட்டுமே உருவங்கள் தெரிகின்றன. மீதிப்பகுதி நிலத்துள் புதைந்துள்ளன. உருவங்களின் தலைப்பகுதிக்கு மேலே மாலை போன்ற ஒரு தோரண அமைப்பு காணப்படுகிறது. சிற்பத்தின் காலம் 16-ஆம் நூற்றாண்டாக இருக்கக்கூடும்.

### 77 : 42 கோதவாடி - தாய்த் தெய்வச் சிற்பம்

கோவை மாவட்டம், கிணத்துக்கடவு வட்டத்தில் உள்ள கோதவாடி தார்ச் சாலையின் ஓரத்தில் ஒரு சிறிய மரத்தடியில் ஒரு பெண்ணின் சிற்பம் இரண்டடி உயர அளவில் உள்ளது. பெண் தன் கையில் ஒரு குழந்தையை வைத்திருக்கிறாள். அவளது உடலை ஒட்டிய நிலையில் உடலின் இரு புறமும் பெண்ணை முட்டுகின்ற தோற்றத்தில்இரு மாடுகளின் உருவங்கள் உள்ளன. பெண்ணின் தலை கொண்டை முடிந்த தோற்றம். காதுகளில் காதணிகள் உள்ளன. கைகளில் வளைகள் காணப்படுகின்றன. சிலையின் அருகில் மண்ணாலான ஒரு விளக்கு மாடமும் சிலை முழுதும் ஆங்காங்கே திருநீற்றைப் பூசிக் குங்குமம் இட்டும் மக்கள் வழிபாட்டில் இச்சிலை உள்ளது. கருவுற்ற போயர்குலப் பெண் ஒருத்தி மாடு மேய்க்கும்போது மாடு பாய்ந்து இறந்து போனதாகவும் அவளே ஒட்டாம்மன் என்னும் சிறு தெய்வச் சிலையாக வழிபடப்படுகிறாள் என்றும், வேளாண் பணிக்குச் சென்ற கணவனுக்கு உணவு எடுத்துச் செல்லும் வழியில் கருவுற்ற அப்பெண் மாடு முட்டியதால் இறந்து போனாள் என்றும் செவிவழிச் செய்திகள் உள்ளன. கருவில் சுமந்த நிலையில் இறந்துபோனதால் குறியீட்டாகக் கையில் குழந்தையுடன் சிலையை வடித்துள்ளனர். சிலையை வடித்துவைத்தவர் மாகாளி ஆச்சாரி என்னும் சிற்பி என்பது ஒரு செய்தி.

## 77 : 43 கண்ணாடிப்புத்தூர் - ஐயனார் சிற்பம்

உடுமலையை அடுத்துள்ள கண்ணாடிப்புத்தூரில் முள்மரங்களும் புதர்ச்செடிகளும் நிறைந்த பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்ட ஐயனார் சிற்பம் அமர்ந்த நிலையில் உள்ளது. வலது காலைக் கிடை நிலையில் வைத்தும், இடது காலை உயர்த்தி மடக்கியும் அமர்ந்துள்ளார். தலைப்பகுதி ஜடா மண்டலத்துடனும் காதில் பத்திர குண்டலங்களும் வலது கையில் செண்டும் வைத்திருக்கிறார். இதன் காலம் பொ.கா. 12 நூற்றாண்டாகலாம்.

## 77 : 44 பெள்ளாதிக்கோட்டை

கோவை மாவட்டம், காரமடை அருகில் பெள்ளாதி என்னும் ஒரு சிற்றூர். அங்கு வீரசங்காதீசுவரர் பெயரில் கொங்குப் பாண்டியனான சுந்தரபாண்டியன் மற்றும் விஜயநகர கிருஷ்ண தேவராயரின் கல்வெட்டுகள் உள்ளன. இக்கோயிலின் அண்மையில் பீரங்கிமேடு என்னும் பெயரில் , அடுக்கடுக்காக அமைந்த படிகளோடு கூடிய ஒரு மேடை உள்ளது. திப்புசுல்தான் இங்கு கோட்டை ஒன்றை அமைத்திருந்ததாகவும் கோட்டையில் பீரங்கிமேடு அமைத்து அதில் பீரங்கியை நிறுத்தி வைத்திருந்ததாகவும் தொல்லியல் துறையினர் பீரங்கிமேட்டுப் பகுதியில் முப்பத்திரண்டு கல் குண்டுகளைக் கண்டெடுத்ததாகவும் ஊர் மக்கள் கூறுகின்றனர். கோட்டை இருந்ததற்கான சான்றுகள் எவையேனும் கிடைக்குமா என ஆராய்ந்ததில் தகுந்த சான்று ஒன்று கிடைத்தது. குசயூஉளை Buchanan Hamilton என்னும் ஆங்கிலேயர் எழுதிய “A Journey from Madras through the Countries of Mysore, Canara and Malabar” என்னும் நூலில் காணப்படுகின்ற குறிப்பு பெள்ளாதியில் ஒரு மண் கோட்டை இருந்ததை உறுதிப்படுத்துகிறது.

1800-ஆம் ஆண்டு பிரிட்டிஷார் திப்பு சுல்தானைப் போரில் வென்றதால் மைசூர் இராச்சியம் கிழக்கிந்தியக் கம்பனியுடன் இணைந்தது. அப்போது பிரிட்டீஷ் இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்த வெல்லெசுலி பிரபு, மருத்துவரும் தாவர இயல் அறிஞருமாகிய பிரான்சிஸ் புக்கானன் ஹாமில்டன் என்பவரை நியமனம் செய்து மைசூர் இராச்சியம் முழுதும் நில ஆய்வு (Survey) செய்யப்பணித்தார். புக்கானன் தம் பயணக் குறிப்பில், 1800-ஆம் ஆண்டு அக்டோபர் 26-ஆம் தேதியன்று புறப்பட்டுப் பவானி ஆற்றின் கரையோரமாக சிறுமுகை என்னும் ஊர் நோக்கிப் பயணம் மேற்கொள்வதைக் குறிப்பிடுகிறார். அடுத்த நாள் அக்டோபர் 27ஆம்

தேதியன்று பெள்ளாதி ஊரைக் கடந்து சென்றதாகவும் அப்போது ஒரு மண் கோட்டையைக் கண்டதாகவும் பதிவு செய்கிறார்.

(இச்செய்தியை பலரும் அறிய உதவிய திருவாளர்கள் சிவப்பிரகாசம், சேலூர், ஜெய்சங்கர் - அவிநாசி, பி.கே.செல்வராஜ் - வாகராயம்பாளையம்; உருத்திரன் - தேவனாம்பாளையம்; மீனாட்சி சுந்தரம் - கோவை, எம்.நாகராஜன் - உடுமலை; சங்கிலித்துரை - கண்ணாடிப்புத்தூர் ஆகியோர்க்கு நன்றி).

து.சுந்தரம், கோவை

### 77 : 45 கிருஷ்ணகிரியில் வாமனர் கோட்டுருவக்கல்

கிருஷ்ணகிரியை ஒட்டிய அக்ரஹாரம் என்ற இடத்தில் பெருமாள் கோயில் பின்புறம் உள்ள தோட்டிகுண்டு பாறையின் மீது வாமனர் உருவ கீரல் பொறிப்பாக உள்ளது. அருகில் உள்ள பெருமாள் கோயில் அல்லது அந்தணர்க்குத் தானம் அளித்ததின் அடையாளமாக இக்கீரல் படம் இருக்கலாம். சுமார் 200 ஆண்டுகள் பழமைவாய்ந்ததாகும். சிறிய பிராமணர் வடிவத்தில் உள்ள வாமனரின் வலதுகை நீரை வார்ப்பது போன்றும் இடது கையில் கமண்டலமும் உள்ளது. அவரது தலைக்கு மேல் குடை உள்ளது. இருபுறமும் சூரிய சந்திரர்கள் காட்டப்பட்டுள்ளனர்.

கோவிந்தராஜ், கிருஷ்ணகிரி

### 77 : 46 நேமம் பகுதியில் பல்லவர்கால சிலைகள்

தஞ்சாவூர் மாவட்டம், தஞ்சாவூர் வட்டம் நேமத்தில் இருந்து சுமார் 1 கிலோ மீட்டர் தூரத்தில் ஐயர் மேடு பகுதியில் உள்ள இஞ்சினியர் கொல்லையில் 3 சிலைகள் காணப்படுகின்றன. இந்த சிலைகள் கண்ணன் சேதுராயர் அவர்களால் பாதுகாக்கப் படுகின்றன. இந்த சிலைகள் சுமார் 8, 9-ஆம் நூற்றாண்டை சேர்ந்ததாகும். மூன்று சிலைகளில் இரண்டு தலைப்பகுதி இல்லாமல் காணப்படுகின்றன. மூன்றாவது சிலை இடுப்பில் இருந்து கால் பகுதி வரை தான் காணப்படுகிறது. இந்த மூன்று சிலையுமே சுகாசன நிலையில் இருப்பதுபோல் வடிவமைக்கப் பட்டுள்ளன. ஒரு சிலையில் தாமரை மொட்டு கையில் வைத்திருப்பதுபோல் செதுக்கப்பட்டுள்ளது.

சே.சுதா, தஞ்சாவூர்
மா.சைலேஷ், சேலம்

## 77 : 47 திருவண்ணாமலை மாவட்டம் பூண்டியில் அரிய சிற்பங்கள்

திருவண்ணாமலை மாவட்டம், கலசபாக்கம் வட்டத்தில் செய்யாற்றின் வடகரையில் பூண்டி கிராமம் அமைந்துள்ளது. செய்யாற்றின் வடகரையில் அமைந்துள்ள 7 கரைகண்டேசுவரர் ஆலயங்களுள் "பூண்டி கரைகண்டேசுவரர்" ஆலயமும் ஒன்று. இவ்வாலயம் ராஜசிம்மன் பல்லவர் காலத்தில் எழுப்பப்பட்டுள்ளது. கால வெள்ளத்தில் சிதைந்த கோவிலில் இடம்பெற்ற பல்லவர் கால சிற்பங்கள் ஊரைச் சுற்றி காணக் கிடைக்கின்றன. அவற்றில் லகுலீசர், கொற்றவை சிற்பங்கள் குறிப்பிடத்தக்கவை.

லகுலீசர் : கரை கண்டேஸ்வரர் ஆலயம் அருகாமையில் உள்ள அகத்தீஸ்வரர் ஆலயத்தின் முன்புறம் உள்ள பலகைக் கல்லில் மீது புடைப்புச் சிற்பமாக லகுலீசர் சிற்பம் உள்ளது. இடது காலை மடித்து, வலது காலை அக்காலின் மேல் மடித்த நிலையில் இரண்டு கைகளுடன், யோகாசனத்தில் கைகளில் லாங்குலம் என்னும் கைத்தடியும் நாகபாம்பும் உள்ளன. பாம்பின் தலைப்பகுதி புஜத்தின் மேல் ஏறி இடது தோளின் மேல் மகுடத்துடன் ஒட்டிக் காணப் படுகிறது. ஜடாபாரம், பத்ர குண்டலங்கள், உருண்ட தோள்வளை, உதரபந்தம் எடுப்பான மூக்கு, தடித்த உதடு, கீழ்நோக்கிய கண்கள் உடைய இச்சிற்பம் பொ.கா. 7 - 8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

கொற்றவை : பூண்டி கிராமத்தில் இருந்து கலசபாக்கம் செல்லும் சாலை ஓரத்தில் எட்டு கை காளியம்மன் என்னும் கோவிலில் பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ள கொற்றவை இன்றும் வழிபாட்டில் உள்ளது. எருமை தலை மீது இரு கால்களையும் நேராக ஊன்றிய நிலையில் எட்டு கரங்களுடன் இவ்வுருவம் செதுக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் இருபுறமும் இரு மறவர்கள் காட்டப்பட்டுள்ளனர். கலை மானும் காட்டப்பட்டுள்ளது. எண் கரங்கள் சக்கரம், சங்கு, அம்பு, வில் குறுவாள், கேடயம், அபய முத்திரை, ஊரு முத்திரை கொண்டுள்ளன. சுமார் 3 அடி உயரமும், 2 அடி அகலமும் உடைய இச்சிற்பம் பொ.கா. 7 -8ஆம் நூற்றாண்டு எனலாம்.

விஜயநகர் / நாயக்கர் கால நடுகற்கள் : இதே பூண்டி கிராமத்தின் அரசு தொடக்கப்பள்ளி அருகாமையில் உள்ள சமாதி வளாகத்தில் 2 நடுகற்கள் சிறிதும் பெரிதுமாக காணப்படுகின்றன. சிறிய நடுகல் தலையில் உள்ள கொண்டை பின்பக்கம் சரிந்துள்ளது. இச்சிறிய நடுகல்லில் எழுத்துக்கள் ஏதும் பொறிக்கப்படவில்லை. சிற்பத்தின்

அமைப்பும், தலைகோலமும் கைகளில் உள்ள ஆயுதங்களையும் கொண்டு இதன் காலம் பொ.கா.16-ஆம் நூற்றாண்டு எனக் கருதலாம். வலக்கரம் அம்பை உருவிய நிலையிலும், இடக்கரம் வீரன் வில்லை வளைத்த நிலையிலும் சித்தரிக்கப்பட்டுள்ளது. தலையில் நாயக்கர் காலக் கொண்டை சற்று இடப்புறம் சரிந்த நிலையில் அலங்கரிக்கக் காணலாம். நீள் செவிகளில் வட்டமான குழைகள் அலங்கரிக்கின்றன. பரந்த முகத்தில் முறுக்கிய மீசையுடன் முன்னோக்கிய வண்ணம் காட்டப்பட்டுள்ளான். தலையை அலங்கரிக்கும் மதிரை (மதுரை) கொண்டை, காதணிகள், தொடை வரை அலங்கரிக்கும் இடையாடை, பக்கங்களில் சரிந்து நிற்கும் ஆடைக்கட்டு, கால்களில் உள்ள கழல்களின் அமைப்பு யாவும் கொண்டு இதனை நாயக்கர் கால நடுகல் சிற்பமாகக் கருதலாம்.

மா.சந்திரமூர்த்தி
ராஜ் பன்னீர் செல்வம்
சென்னை

**77 : 48 மருத்துவாம்பாடி கொற்றவை**

திருவண்ணாமலை வட்டம் மற்றும் மாவட்டம், மருத்துவாம்பாடி கிராமத்தில் மேல்நிலை நீர்தொட்டிக்குக் கீழ் வெட்டவெளியில் எல்லை பிடாரி என்ற பெயரில் வணங்கப்பட்டு வருகிறது. பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ள இவ்வுருவம் இன்றும் வழிபாட்டில் உள்ளது. எருமை தலை மீது இரு கால்களையும் நேராக ஊன்றிய நிலையில், எட்டு கரங்களுடன் இவ்வுருவம் மகிஷன் மீது நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளது. கொற்றவையின் எண்கரங்களில் சக்கரம், சங்கு, அம்பு, வில், வாள், கேடயம், மணி ஆகியவையும், இடதுக்கரம் தொடை மீது ஊரு முத்திரையில் அமைந்தும் காணப்படுகின்றன.

துர்கையின் வலதுபுறம் கலைமானின் உருவமும் வாகனமாக காட்டப்பட்டுள்ளது. துர்கையின் இருபுறமும் அமர்ந்துள்ள மறவர்களின் உருவங்களும் உள்ளன. சுமார் 3 அடி உயரமும், 2 அடி அகலமும் உள்ள இச்சிற்பம் கிராமியக் கலைப் பாணியில் உள்ளது. பல்லவர் காலத்திய சிற்பமாக இதனைக் கருதலாம்.

ராஜ்பன்னீர்செல்வம்
சென்னை

## 77 : 49 சேம்பள்ளி, நலங்காநல்லூர் பாறை ஓவியங்கள்

வேலூர் மாவட்டத்தின் வடமேற்கு பகுதியில் ஆந்திர மாநில எல்லையை ஒட்டியவாறு குடியாத்தம் வட்டம் அமைந்துள்ளது. இவ்வட்டத்தில் அமைந்த இயற்கையான குகைகள் பலவற்றுள் பல்வேறு காலகட்டங்களைச் சேர்ந்த மக்களால் வரையப்பட்ட ஓவியங்கள் 35-க்கும் மேற்பட்ட இடங்களில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. அவற்றுள் இவ்வட்டத்திலுள்ள சேம்பள்ளி மற்றும் நலங்காநல்லூர் ஆகிய இரண்டு ஊர்ப் பாறை ஓவியங்கள் குறித்த விவரங்கள் இங்கு தரப்படுகிறது.

சேம்பள்ளி : குடியாத்தம் நகருக்கு வடமேற்கே சுமார் 8 கி.மீ. தொலைவில் கௌண்டின்யநதியின் தெற்கு கரையில் சேம்பள்ளி கிராமம் அமைந்துள்ளது. இவ்வூரில் சேம்பள்ளி மலை, அனுப்பலாகுண்டு மலை, தேன்கல்லு மலை ஆகிய மலைகள் அருகருகே காணப்படுகின்றன.

அனுப்பலாகுண்டு - குகை - 1 : அனுப்பலாகுண்டு மலையின் வடக்குச் சரிவில் வடக்கு நோக்கியவாறு அமைந்த குகையின் கூரை மற்றும் சுவர்ப் பகுதியில் வெண்மை நிறத்தில் (White Kaolin) வரையப்பட்ட ஓவியங்களும், குறியீடுகளும் காணப்படுகின்றன. இரண்டு மனித உருவங்கள் (in rudimentary form) கோட்டுருவங்களாக தீட்டப்பட்டுள்ளன. ஒரு பறவையின் உருவம் நின்று கொண்டிருப்பது போன்று தீட்டப்பட்டுள்ளது. மேலும், பல கருக்கள் (motifs) மற்றும் வடிவங்கள் (designs) தனித்தனியாக ஆங்காங்கே வரையப் பட்டுள்ளன. அவற்றுள் உடுக்கை, சூரியன், சங்கு போன்ற அடையாளச் சின்னங்களும் அம்பு குறியீடு, பெருக்கல் குறியீடு, முக்கோணம் போன்ற கேத்திர கணித மாதிரிப் படங்களும் (Geometrical designs), திரிசூலம் போன்ற ஆயுதங்களின் குறியீடுகளும் வரையப்பட்டுள்ளன. நான்கு மலைகள் தொடர்ச்சியாக இருப்பது போன்ற அடையாளச் சின்னம் இக்குகையில் வரையப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். சில இனம் காண இயலாத அடையாளச் சின்னங்களும் இங்கு காணப்படுகின்றன. பண்டைத் தமிழ் (தமிழ் பிராமி) எழுத்துக்களைப் போன்று சில எழுத்துகளும், நாமம் போன்ற குறியீடுகளும் வரையப்பட்டுள்ளன. பெருங்கற்படைக்கால (இரும்பு காலம்) எச்சங்களான கருப்பு - சிவப்பு, கருப்பு நிறமட்பாண்ட ஓடுகளும், இரும்பு கழிவுகளும் இக்குகையின் அருகில் ஏராளமாகக்

காணப்படுவதால் இவ்வோவியங்கள் அக்காலத்தைச் சார்ந்த மக்களால் வரையப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

அனுப்பலாகுண்டு - குகை - 2 : மேற்கு நோக்கியவாறு அமைந்துள்ள இக்குகை ஒரு பெரிய குண்டின் அடிப்பகுதியில் உள்ளது. இக்குகையின் கூரைப் பகுதியில் வெளிர் மஞ்சள் நிறத்தில் தீட்டப்பட்ட ஓவியங்களும், குறியீடுகளும் காணப்படுகின்றன. நாமம், திரிசூலம், கூட்டல் குறியீடு போன்ற குறியீட்டுச் சின்னங்களும், பண்டைய தமிழ் எழுத்துக்களைப் போன்ற குறியீடுகளும் இக்குகையில் அதிகமாகக் காணப்படுகின்றன. இக்குகைக்கு அருகில் இரும்பு காலத்தைச் சேர்ந்த தடயங்கள் சிதறிக் கிடக்கின்றன.

ஆனைகுண்டு கெவி : குடியாத்தம் வட்டத்தில் சேம்பள்ளிக்கு மேற்கே கிழக்குத் தொடர்ச்சி மலைப்பகுதியைச் சார்ந்த ஒரு மலை தேன் கல்லு மலை என அழைக்கப்படுகிறது. இதன் மேல்பகுதியில் ஆனைகுண்டு கெவி என்றழைக்கப்படும் ஒரு பெரிய பாறை உள்ளது. இப்பாறையானது யானையின் தோற்றத்தில் உள்ளதால் இதனை உள்ளூர் மக்கள் ஆனைகுண்டு கெவி என அழைக்கின்றனர். ஆனைகுண்டு பாறையின் அடியில் தெற்கு மற்றும் வடக்கு பகுதிகளில் குகைத் தளங்கள் காணப்படுகின்றன. இவற்றின் உட்பகுதியில் உள்ள கூரை மற்றும் சுவர்ப் பகுதிகளில் வெண்மை நிறத்தில் தீட்டப்பட்ட ஓவியங்கள் காணப்படுகின்றன. அவற்றில் 6 மனித உருவங்கள் கோட்டுருவங்களாக வரையப்பட்டுள்ளன. ஒரு மனிதன் தனது இடது கரத்தில் திரிசூலத்தை ஏந்தியவாறு காணப்படுகிறான். மற்றொரு மனிதன் கல் போன்ற ஒரு பொருளைக் கையில் வைத்துக்கொண்டு வேகமாக எறிவதுபோல காட்டப்பட்டுள்ளான். மற்ற மூன்று மனித உருவங்கள் கைகளை நீட்டிக் கொண்டிருப்பது போல காட்சியளிக்கின்றனர். அடையாளம் காண இயலாத ஒரு பெரிய பறவையின் உருவமும், பொன்வண்டுபோல் தோற்றமளிக்கும் ஒரு பெரிய வண்டின் உருவமும் இங்கு அழகாகத் தீட்டப்பட்டுள்ளன. மேலும், பல குறியீடுகளும் இக்குகையில் வரையப்பட்டுள்ளன. நீண்ட பிடியினைக் கொண்ட திரிசூலம், நான்கு முனைகளுடன் கூடிய நீண்ட ஆயுதம், இரு பக்கமும் திரிசூலம் உள்ள ஆயுதம் ஆகியவைகளும், இரண்டு சதுரங்களைக் கொண்ட மூலை விட்டங்கள், கூட்டல் குறியீட்டுடன் கூடிய வட்டம், நேர்கோடுகள், வட்டம், செங்குத்தான கோடுகள், நடுவில் ஒன்றோடொன்று இணைந்துள்ள மூன்று கோடுகள், இருபக்க திரிசூலம், மூன்று

முனைகளைக் கொண்ட நீண்ட நேர்கோடு, சிறிய திரிசூலங்கள், சீப்பு போன்ற வடிவம், வில் - அம்பு குறியீடு, நந்தி பாதம் போன்ற பல குறியீடுகள் வரையப்பட்டுள்ளன. சில குறியீடுகள் வரிசையாக உள்ளன. இவை தவிர சில தமிழ் பிராமி எழுத்துக்களைப் போன்றும் சிந்துவெளி முததிரைகளில் காணப்படும் குறியீடுகள் போன்றும் உள்ளன. இவை பெருங்கற்படைக் காலம் எனப்படும் இரும்பு காலத்தைச் சேர்ந்தவைகளாகும். இக்குகைக்குச் சற்றுத் தொலைவில் பெருங்கற்கால சின்னங்கள் அதிக அளவில் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

சேம்பள்ளி மலை : சேம்பள்ளி மலை என்றும், நானக்கல் மலை என்றும் உள்ளூர் மக்களால் அழைக்கப்படும் இம்மலை சேம்பள்ளி ஊருக்கு தெற்கே சுமார் 1 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இம்மலை புதிய கற்காலம் மற்றும் இரும்புகால எச்சங்களை அதிக அளவில் கொண்டுள்ளது. இம்மலையின் வடக்கு மற்றும் கிழக்கு அடிவாரத்தில் புதிய கற்கால மற்றும் இரும்புக்கால வசிப்பிடப் பகுதி காணப்படுகிறது. மேலும், மலையின் மேல்பரப்பில் பெருங்கற்காலச் சின்னங்களான கல்திட்டைகள் (Dolmen) அதிக அளவில் காணப்படுகின்றன. முதல் குகையில் வெள்ளை நிறத்தில் நான்கு ஆரமுள்ள சக்கரம், திரிசூலம், நாமம் ஆகியவை வரையப்பட்டுள்ளன. வடமேற்குச் சரிவில் உள்ள இரண்டாவது குகை நாமகுண்டு என உள்ளூர் மக்களால் அழைக்கப்படுகிறது. இதன் கூரைப் பகுதியில் வெண்மை நிறத்தில் இருபதுக்கும் மேற்பட்ட திரிசூலங்கள், அம்பு முனை, நாமக்குறியீடு, பண்டைய தமிழ் எழுத்துக்களைப் போன்ற குறியீடுகள் உள்ளன.

பெரிய குண்டு : சேம்பள்ளி ஊருக்கு மேற்கே சுமார் 2 கி.மீ. தொலைவில் அட்டகல்லு என்றழைக்கப்படும் மலைக்கு அருகே பெரிய குண்டு என உள்ளூர் மக்களால் அழைக்கப்படுகின்ற பெரிய குகைப் பகுதி உள்ளது. இக்குகையில் வெள்ளை நிறத்தில் வரையப்பட்ட உடுக்கை, கூட்டல் குறியீடு அல்லது பண்டைய தமிழ் எழுத்தான க (+) போன்ற குறியீடு, நான்கு உள் கட்டங்களைக் கொண்ட சதுரம் நாமம், செவ்வக வடிவ பெட்டி, பூச்சித்திரங்கள் உள்ளன. இக்குகைக்குக் கிழக்கே சுமார் 500 மீட்டர் தொலைவில் இரும்புக் காலம் மற்றும் வரலாற்று ஆரம்பகால வசிப்பிடப் பகுதி காணப்படுகிறது.

நலங்காநல்லூர் : குடியாத்தம் நகருக்கு மேற்கே சுமார் 8 கி.மீ. தொலைவில் மொரசபள்ளியின் துணை கிராமமான நலங்காநல்லூர்

உள்ளது. நலங்காநல்லூர் கிராமத்திற்கு வடக்கே 1 கி.மீ. தொலைவில் கும்மி மலை அமைந்துள்ளது. இம்மலையின் தென்மேற்குச் சரிவில் அர்ச்சுனன் மேடை என்றழைக்கப்படும் இடத்தில் சுமார் 15 மீட்டர் நீளமுடைய பெரிய குகை காணப்படுகிறது. கிழக்கு பார்த்தவாறு அமைந்துள்ள இக்குகையின் உட்புறத்தில் வெள்ளை நிறத்தில் தீட்டப்பட்ட ஓவியங்கள் உள்ளன.

அவற்றின் கோட்டுருவங்களாக ஐந்து மனித உருவங்கள் பல கால்களைக் கொண்ட பூரான் போன்ற பூச்சியின் வடிவம் இரண்டு நேர்கோடுகள் இரண்டு செங்குத்தான கோடுகள் குறுக்கும் நெடுக்குமாக வெட்டுவது போன்றும், அக்கோடுகளின் அனைத்து முனைகளிலும் முட்கள் உள்ளது போன்ற படம், நான்கு மலைகள் தொடர்ச்சியாக இருப்பதைப் போன்ற வடிவம் வரையப்பட்டுள்ளது. வடிவ கணித தோற்றங்களான சதுரம், வட்டம் அல்லது சந்திரன், கூட்டல் குறியிடு, பெருக்கல் குறியீடுகள், சக்கரம், சூரியன், சூரிய உதயம், சந்திரன் போன்ற வடிவங்கள், திரிசூலம், அம்புமுனை போன்ற ஆயுதங்கள், பண்டைய தமிழ் எழுத்தான ம (ன) போன்ற குறியீடு ஆகியவை காணப்படுகின்றன.

பொலிகுண்டு மலை : நலங்காநல்லூர் கிராமத்திற்கு வடக்கே பொலிகுண்டு என்றழைக்கப்படும் சிறிய மலை அமைந்துள்ளது. இதன் கிழக்குப் பகுதியில் கிழக்கு திசையை நோக்கியவாறு அமைந்துள்ள குகையில், வெண்மை நிறத்தில் வரையப்பட்ட ஓவியங்கள் காணப்படுகின்றன. சதுர வடிவிலான பெட்டி போன்ற கட்டத்திற்குள் சில கோடுகள் உள்ள வடிவம் குறிப்பிடத்தக்கதாகும்.

கி.குமார், சென்னை

### 77 : 50 அமராபதி புதூர்

சிவகங்கை மாவட்டம், காரைக்குடி - தேவகோட்டைச் சாலையில் அமைந்த ஊர் அமராபதிபுதூர். இந்திரனின் நகரமான அமராபதியின் பெயரால் பொன்னமராவதி, அமராபதி என ஊர்ப் பெயர்கள் அமையும் மரபில் இவ்வூர் அமராபதி புதூர் எனப் பெயர் பெற்றிருக்கிறது. இவ்வூரில் காட்டு சிவன் கோயில் என அழைக்கப்படும் ஸ்ரீவந்தருளீஸ்வரர் கோயில் 19ஆம் நூற்றாண்டு இறுதியில் திருப்பணி செய்து கட்டப்பட்ட கோயிலாகும். இத்திருப்பணியில் செங்கல் மரத்திருப்பணியாக மதில் திருச்சுற்று ஆகியவை அமைந்து இன்று செடி, கொடி, மரங்களால் முற்றிலும்

சிதைந்துவிட்டது. எனினும் கருவறை பிற சந்நதிகள் கற்திருப்பணி என்பதால் சிதையாது எஞ்சியுள்ளன. இங்கு சீராகத் துண்டிடப்பட்ட இரண்டு கற்களில் துண்டுக் கல்வெட்டுகள் உள்ளமை தற்பொழுது மீண்டும் நடக்கும் திருப்பணியின்போது அறியப்பட்டுள்ளது. இவை 13-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டின் இறுதி மற்றும் கையொப்பமிடும் பகுதியைச் சேர்ந்தவை.

முதல் துண்டு

1. ழுத்து உ வாணராயன் தற்குறியும் ...

2. டாழ்வான் எழுத்து உ இப்படிக்கு ப ...

இரண்டாம் துண்டு

1. ருக்கும் ஸ்ரீ ஹஸ்த,ாசராய முதலி ...

2. களும் எம்மில் இசைந்த விலைப் பெ[பா] ...

அமராவதி புதூரில் மேலும் ஐயனார்கோயில், கருப்பர் கோயில்களும் உள்ளன. இவ்வூர் மறவர் வாழ்ந்த பகுதி என்பதால் இங்கு சேதுபதிகள் காலக் கோட்டை ஒன்றும் பராமரிப்பு இன்றியுள்ளது. நல்ல கோட்டை வாயிலும், கொத்தளங்களில் ஒன்றும் இன்றும் எஞ்சியுள்ளன.

சு.இராசகோபால், சென்னை

**77 : 51 தனுஷ்கோடி வட்டெழுத்து வணிகர் கல்வெட்டு**

இராமேஸ்வரம் அடுத்து கடல்கொண்ட தனுஷ்கோடிப் பகுதியில் ஒரு துண்டுக் கல்வெட்டு கண்டறியப்பட்டது திரு.பக்ஷிசிவராசன், இலங்கையில் சாசனங்கள் பற்றி ஆர்வமுடைய திருமதி.எழில்வாணி பத்மகுமாருக்குத் தான் அங்கு அர்ச்சகர் பயிற்சி கொடுக்கச் சென்றதின் காரணமாக அது பற்றித் தகவல் கொடுத்திருந்தார். திருமதி.எழில்வாணி அவர்கள் என்னைத் தொடர்பு கொண்டபோது திரு.பக்ஷிசிவராசன் அவர்களுடன் தொடர்பு கொண்டு தகவல்களும் படங்களும் பெறப்பட்டன.

தனுஸ்கோடி காட்டுப்பகுதியில் சிதைந்து மண்மூடிய காளி கோயில் அருகே உள்ள முனீஷ்வரர் கோயிலில் சூலம் அருகே சூடம் ஏற்றும் கல்லாக இச்சதுரத் துண்டுக்கல் உள்ளது. கல்வெட்டின் ஒரு சிறுபகுதியே உள்ளபோதும் நல்ல 8ஆம் நூற்றாண்டு வட்டெழுத்து

அமைதியில் இக்கல்வெட்டுள்ளது. வணிகக் குழுக்கள் பற்றிய குறிப்பும் உள்ளது.

1. வரும் ச
2. ஸமீசுவரூத்து வூரோ
3. ம் வளஞ்சிய
4. திசையாயி
5. ..

இலங்கை மற்றும் பாண்டிய அரசுகளுக்கானத் தொடர்பின் பின்னணியில் வணிகர்களின் நடவடிக்கைகளே முன்னிற்பன. இது துண்டுக் கல்வெட்டானாலும் 'ராமேசுவரம்', 'வளஞ்சியர்', 'திசையாயிரத்தவர்' குறித்த சொற்களைக் கொண்டுள்ளமை சிறப்பாகும். அதுவும் ஒரு காளி கோயில் பகுதியில் கிடைப்பதும் இன்னும் சிறப்பாகும். வளஞ்சியர், திசையாயிரத்தவர் வணிகக் குழுவினரே. முற்காலப் பாண்டியர் கலைப்பாணியில் காளியின் செப்புத் திருமேனி ஒன்று இன்று இராமேஸ்வரத்தில் இராமர், இலக்குமணர், சீதை, அனுமன் குழுச் செப்புத் திருமேனிகளுடன் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இராமேசுவரம் இடைக்காலப் பாண்டியர் கல்வெட்டில் கோடி நாட்டு இராமேசுவரம் என்றே குறிக்கப்பிடுவதும் தனுஷ்கோடியின் முக்கியத்துவத்தைக் காட்டுகிறது. இக்காட்டுப் பகுதியில் வரலாற்றுத் தேடல் செய்யும்போது இன்னும் அரிய பல செய்திகள் வெளிப்படக்கூடும்.

- சு.இராசகோபால், சென்னை

## 77 : 52 திருவரங்கம் கொட்டாரக் கல்வெட்டுகள்

தமிழகத்தில் திருவரங்கம், திருவானைக்காவல், திருப்பாலைப் பந்தல் முதலிய இடங்களில் கோயில் சார்ந்த நெற்களஞ்சியங்கள் (கொட்டாரங்கள்) உள்ளமை தமிழகத் தொல்லியலார் அறிந்த செய்தி. மிகப் பெரிய கோயிலான ஸ்ரீரங்கத்தில் 10 - 12 அடி ஆழ [கல்] தொட்டிகளும் 30 அடி உயர கொட்டாரங்களும் உள்ளன. கொட்டாரம் என்றும் இந்நெற்களஞ்சியங்கள் திருவரங்கத்தில் மேற்புறமாக கோசாலையை ஒட்டி வரிசையாக உள்ளன. இடைக்காலத்தில்



கோயிலுக்கு கிடைத்த நெல் வருவாய்க்கு ஏற்ப இவை பெரிய அளவில் செங்கல் சுதையால் அமைக்கப்பட்டுள்ளன. பராமரிப்பு இன்றி நெடுநாளாக சிதைவுப் பாதையில் இருந்த இவை அண்மையில் புனரமைக்கப்பட்டன. அப்பொழுது அங்கு கிடைத்த துண்டுக் கல்வெட்டுகள் மற்றும் தொல் பொருட்கள் குறித்து பேரா.இராஜவேலு அவர்களுக்குத் தகவல் தரப்பட்டு பேரா.சுப்பராயலு அவர்களுடன் பார்க்கச் சென்றபோது எடுக்கப் பட்ட படங்களின் உதவியுடன் அக்கல்வெட்டுகள் படிக்கப்பட்டு இங்கு தரப்படுகின்றன.

இக்கல்வெட்டுகள் சிறு பலிபீடம் போன்ற அமைப்பிலும் உடைந்த உருளைத் தூண்களிலும், வெட்டிய துண்டுக் கற்களிலும் உள்ளன. இவை முதலாம் இராஜராஜன் மெய்க்கீர்த்திப் பகுதியுடனும் எழுத்தமைதியுடனும் உள்ளமை குறிப்பிடத்தக்க தாகும். பலிபீடக் கல்வெட்டு மந்திரச் சொற்களுடன் கிரந்த எழுத்தில் உள்ளது.

**1**

1. ஓம் ஸ்ரீம் ஓம்
2. ஓம் பூஹா ஓம்

வெட்டிய துண்டுக் கற்களில் முதலாம் இராஜராஜனின் மெய்க்கீர்த்திப் பகுதியும் அவனது பெயரும் உள்ளன.

| **2** | | **3** | |
|---|---|---|---|
| 1. | .. றை [நாடு] | 1. | ம் கங்க . . . |
| 2. | யும் குட | 2. | மலைநாடுங் ... |
| 3. | சை புகழ் | 3. | தர ஈழ மண் . . |
| 4. | திண்டி | 4. | றன் வென் . . . |
| 5. | ஊழியு | 5. | ள் எல்லா . . . |
| 6. | செழிய | 6. | ரைத் தேசு . . . |
| 7. | ரானஸ்ரீ | 7. | ராஜராஜ . . . |

உடைந்த உருளைத் தூணில் திரிபுவன மாதேவியார் பெயரும் ஏதோ ஒரு கொடை குறித்த செய்தியும் உள்ளது. கல் ஒரு புறம் தேய்ந்துள்ளது.

**4**

1. திரிபுவன மாதேவியார்
2. ... ஆள்வார்
3. ...
4. ற் குவைய்த்த
5. ... கொண்டு

- சு.இராஜகோபால், சென்னை

*முதலை வாய்ப்பிள்ளை சிற்பம் :* திருப்பூர் மாவட்டம், அவிநாசி சேவூர் சாலை செம்பாக்கவுண்டம்பாளையம் - பட்டறை பேருந்து நிறுத்தம் அருகில், செம்பியநல்லூர் ஊராட்சியில் சூலாயுதத்துடன் முதலை வாய்ப்பிள்ளை சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. இக்கல் 2' அகலம், 2 1/2' உயரத்துடன் உள்ளது. கி.பி.10- 11ஆம் நூற்றாண்டுகளில் செம்பியன் நல்லூர் என்று அழைக்கப்பட்ட ஊர் இது. அவிநாசிலிங்கேஸ்வரர் கோவிலுக்குத் தானமாக வழங்கப்படும் இடத்தில் சூலாயுதத்துடன் முதலைவாய்ப் பிள்ளை சிற்பம் வடிக்கப்படுவது மரபு கி.பி.8ஆம் நூற்றாண்டில் அவிநாசியில் சுந்தரமூர்த்தி நாயனார் முதலையால் விழுங்கப்பட்ட சிறுவனைப் பதிகம் பாடி உயிருடன் மீட்ட புராணச்செய்தியைக் குறிக்கும் வகையில் முதலைவாய்ப்பிள்ளை சிற்பம் அவிநாசி தல புராணத்துடன் தொடர்புடையது. மேலும் கணியூர், கொடுமணல் ஆகிய இடங்களில் உள்ள இந்த முதலைவாய்ப்பிள்ளை சிற்பம் அவிநாசி கோயிலுக்குச் சொந்தமான நிலத்தைக் குறிக்கும்.

*பெரிய கானூர் சதிக்கல் சிற்பம் :* 16 அல்லது 17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த 2' நீளம், 1 1/2' உயரம் உள்ள சதிக்கல் அவிநாசி - பெரிய கானூர் குளக்கரையில் வைக்கப்பட்டுள்ளது. ஆண் உருவம் வலது கையில் குறுவாள் வைத்த நிலையிலும், பெண் உருவம் இரு கைகளையும் தனது வயிரருகே பிணைத்த நிலையிலும் உள்ளது. இத்தம்பதியினர் குளம் கட்டியது - பராமரித்தது காரணமாக இவர்கள் சிற்பம் இங்கு நிறுவப்பட்டிருக்கலாம். இக்கல்லில் கல்வெட்டுக்கள் ஏதும் கிடையாது.

*கருமாபாளையம் கல் திட்டை :* அவிநாசி, கருமாபாளையம் ஊராட்சி, ஸ்ரீ எல்லம்மாள் கோயில் அருகே கல்திட்டை ஒன்று காணப்படுகிறது. மேல் பலகைக் கல்லின் அளவு 5 1/2', 3' கல்திட்டையின் அகலம் 3 1/2', உயரம் 2 1/2' கல்திட்டையின் நீளம் 5'. பொதுவாக கல்திட்டைகளில் உள்ள இடுதுளை கிழக்கு நோக்கி இருக்கும். ஆனால் இக்கல்திட்டையில் இடுதுளை மேற்கு நோக்கி உள்ளது. காலம் -சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருக்கலாம். தற்போது, ஸ்ரீ எல்லம்மாள் கோயிலின் பழைய கோயில் என்று மக்கள் கருதி வழிபாட்டில் வைத்திருக்கிறார்கள்.

*கருமாபாளையம் புலிக்குத்திக்கல் :* திருப்பூர் மாவட்டம், அவிநாசி, கருமாபாளையம் ஊராட்சி, குளக்கரை அருகில் 16 அல்லது

17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புலிக்குத்திக்கல் ஒன்றுள்ளது. வீரனின் அருகில் அவனது மனைவியின் சிற்பம் மதுக்குடுவையுடன் நின்ற நிலையில் அமைக்கப்பட்டிருக்கும் அழகான புடைப்புச் சிற்பம் ஆகும். புலிக்குத்தும் வேகத்தில் வீரனது சடைமுடி காற்றில் பறக்கும்படி அமைத்திருப்பது சிற்பக் கலைக்கு சான்றாகும். சிற்பங்களின் ஆடைகள், ஆபரணங்கள் தெளிவாகத் தெரியும் வகையில் வடித்திருப்பது சிறப்பு.

புள்ளைச்சாமி : மேற்காணும் புலிக்குத்திக்கல் அருகே, கிராம மக்களால் புள்ளைச்சாமி என்றழைக்கப்படும் சிற்பம் காணப்படுகிறது. பெண் தன் கைக்குழந்தையுடன் நின்றிருக்கும் புடைப்புச் சிற்பம், பசு தன் கன்றுடன் இருக்கும் சிற்பம் அழகுற வடிக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் நீர் வளத்தைக் குறிப்பதாகும். குளக்கரைகளில் இச்சிற்பம் வைக்கப்படுவது மரபு.

நொச்சிக்குட்டை சதிக்கல் சிற்பம் : 14 அல்லது 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த 1' நீளம், 1 1/2' உயரம் உள்ள சதிக்கல் அவிநாசி - புளியம்பட்டி சாலையில் உள்ள நொச்சிக்குட்டை, கோயில் புதூரில் அமைந்துள்ள ஸ்ரீ கரிவரதராஜ பெருமாள் கோயில் அருகில் வைக்கப்பட்டுள்ளது. ஆண் உருவம் ஒன்றும், பெண் உருவம் ஒன்றும் சங்கு, சக்கரம், நாமக் குறியீடுகளுடன் புடைப்புச் சிற்பமாக உள்ளது. பெண் உருவம் இரு கைகளைத் தூக்கிய நிலையிலும், மாலை அணிந்த நிலையிலும், ஆண் இடது கையில் தண்டம் வைத்த நிலையிலும் பெண் உருவத்திற்கு கீழே ஒரு மதுக்குடுவையும் உள்ளது. இக்கல்லில் கல்வெட்டுக்கள் ஏதும் கிடையாது.

நரியம்பள்ளி புதூர் வாமனர் உருவம் : திருப்பூர் மாவட்டம், அவிநாசி, நரியம்பள்ளிபுதூரில் வாமனர் உருவம் தாங்கிய நடுகல் ஒன்று உள்ளது. 2', 2' அளவுள்ள சதுர பலகைக் கல்லில் வாமனர் உரும் கோட்டுருவமாக வடிக்கப்பட்டுள்ளது. காலம் 16 அல்லது 17ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

**ச.மு.ரமேஷ்குமார், அவிநாசி**

### 77 : 54 அவிநாசி வட்டார தொல்லியல் கண்டுபிடிப்புகள்

கோவை மாவட்டம், அவிநாசி வட்டாரத்தில் மேற்கொள்ளப் பட்ட தொல்லியல் களமேற்பரப்பாய்வில் பல்வேறு இடங்களில் தொல்லியல் சான்றுகள் கண்டறியப்பட்டது. அவை பின்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளது.

1. பொங்குபாளையம் பெருமநல்லூரிலிருந்து 2 கி.மீ. தொலைவில், திருப்பூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது நடுகல் (புலிகுத்திகல்).

2. திருமுருகன்பூண்டி அவிநாசியிலிருந்து வடகிழக்காக 5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது நடுகல் (சதிக்கல்).

3. இராயம்பாளையம் அவிநாசியிலுருந்து 3 கி.மீ. தொலைவில் நடுவச்சேரி செல்லும் சாலையில் அமைந்துள்ளது நடுகல் (வீரக்கல்).

4. கருக்கன்காட்டுப் புதூர் அவிநாசியிலிருந்து வடக்கே 6 கி.மீ. தொலைவில் நம்பியூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது நடுகல் (புலிக்குத்திகல்).

5. நடுவச்சேரி அவிநாசியிலிருந்து வடக்கே 8 கி.மீ. தொலைவில் நம்பியூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது நடுகல் (வீரக்கல்).

6. சேர்வகாரன் பாளையம் (விஜயமங்கலம்) விஜயமங்கலத்தில் இருந்து மேற்கே 8 கி.மீ. திருப்பூர் செல்லும் சாலையில் இவ்வூர் அமைந்துள்ளது குத்துக்கல் (பெருங்கற்கால ஈமச்சின்னம்).

7. காட்டுப்புதூர் பூலுவப்பட்டியிலிருந்து கிழக்கே 6 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது கல்வட்டம் மற்றும் கல்திட்டை (பெருங்கற்கால ஈமச்சின்னம்).

8. பாப்பநாயகன் பாளையம் பூலுவப்பட்டியிலிருந்து கிழக்கே 10 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது கல்வட்டம் (பெருங்கற்கால ஈமச்சின்னம்).

9. கருணாம்பதி பெருமநல்லூரிலிருந்து வடக்கே 4 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது நடுகல் (வீரக்கல்).

10. பந்தம்பாளையம் சேவூரிலிருந்து வடக்கே 3 கி.மீ. தொலைவில் நம்பியூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது குத்துக்கல் (பெருங்கற்கால ஈமச்சின்னம்).

த.விஜய், சென்னை - 5

### 77 : 55 வீரபாண்டி நடுகல்

கோவை மாவட்டம், வடக்கு வட்டம் தாலுக்காவில் உள்ள எண் 4, வீரபாண்டி என்னும் கிராமத்தில் களமேற்பரப்பாய்வு மேற்கொள்ளும்பொழுது நடுகல் கண்டறியப்பட்டது. இந்த

நடுகல்லானது மேட்டைப்பாளையம் - சத்தியமங்கலம் சாலையை இணைக்கும் இணைப்பு சாலையில் சாமநாயக்கன் பாளையம் பேருந்து நிறுத்தம் அருகே காணப்படுகிறது. இக்கல்லின் இரு பக்கமும் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல் இரண்டடி அகலமும் மூன்றடி உயரமும் கொண்டதாகும். முன்புறம் புலியிடம் வீரன் ஒருவன் சண்டையிடும் காட்சியானது பொறிக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தில் வீரன் தனது வலது கையினால் புலியைப் பிடித்துள்ளான் இடது கையினால் வாளினைக் கொண்டு புலியின் வயிற்றில் குத்துவது போன்று இச்சிற்பமானது அமைந்துள்ளது. மேலும் இக்கல்லின் பின்புறம் காளையின் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்லின் செய்தியானது வீரன் ஒருவன் தனது காளையைப் புலியிடம் இருந்து காப்பாற்ற அதனுடன் சண்டையிட்டு இறந்திருக்க வேண்டும் என கருதலாம். எனவே, அவ்வீரனின் வீரத்தை போற்றும் வகையில் இந்நடுக்கல் எடுக்கப்பட்டிருக்க வேண்டும். இந்நடுகல்லை இவ்வூர் மக்கள் புலிகுத்திகல் என்று தற்பொழுது அழைக்கின்றனர். மேலும், இந்நடுகல் இன்றும் வழிபாட்டில் உள்ளது. இந்நடுகல்லின் கீழ்ப்பகுதியில் எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்தது எனவும் அது தற்பொழுது மண்ணில் புதைந்திருப்பதனாலும் அதில் கூறப்பட்டுள்ள செய்தியினை அறிய முடியவில்லை. மேலும், இதன் சிற்பக் கலை அம்சங்கள் மற்றும் அமைதியினைக் கொண்டு இந்நடுக்கல்லானது 11, 12ஆம் நூற்றாண்டை சார்ந்ததாகக் கருதலாம்.

த.விஜய், சென்னை - 5

### 77 : 56 முருகன் துறை நடுகல்

ஈரோடு மாவட்டம் சத்தியமங்கலம் வட்டம், முருகன் துறையில் ஒரு அழகிய நடுகல் உள்ளது. பொ.கா.16-ஆம் நூற்றாண்டாகலாம். குதிரைமீது அமர்ந்த புலியுடன் சண்டையிடும் வீரன் உருவம் உள்ளது. குதிரை உருவம் காளையின் உருவம்போலும் உள்ளது. கல்லின்மேல் பகுதியில் சந்திரன், சூரியன் புடைப்புச் சிற்பங்களும் நடுவில் கவிழ்ந்த தாமரையின் கோட்டுருவமும் உள்ளது. புலியின் தொடைப்பகுதியில் அணிவேலைப்பாடாக கொடி அணி செதுக்கப்பட்டுள்ளது. புலி, வீரன் உருவங்கள் புடைப்புச் சிற்பங்களாக உள்ளதால் இடைவெளிகளிலும் ஓரத்திலும் உள்ள தாழ்ந்த பகுதிகளில் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. தொடக்கத்தில் 'ஆனந்தாளு' என்ற சொல்லும், கீழ்பகுதியில் மீண்டும 'விவவருசத்து' என்ற சொல்லும்

உள்ளன. இடைப்பகுதியில் 'மாசிமகன் குள்ளன்' என்ற பெயரும் இறுதியில் 'உபையம்' என்ற சொல்லும் உள்ளன. கல்வெட்டினைப் படியெடுத்து முழுமையாகப் படிக்கவேண்டும்.

அ.பழனியப்பன், சண்பை

## 77 : 57 பெருந்தொழு புலிக்குத்திக் கல்

திருப்பூர் அருகில் உள்ள பெருந்தொழுவில் உள்ள பெருமாள் கோவிலின் முன் புறத்தில் நடுகல் ஒன்று உள்ளது. இதை இப்பகுதி மக்கள் தற்போது ஆஞ்சநேயர் சிலை என வழிபட்டு வருகின்றனர். இந்த நடுகல் 105 செ.மீ. அகலமும் 120 செ.மீ. உயரமும் கொண்டதாகும். இதில் வீரனின் தலை நேராகப் புலியைப் பார்த்த வண்ணம் உள்ளது. வீரனின் வலது கையில் உள்ள வாளால் புலியைக் குத்தும் நிலையிலும், இடது கை மடக்கிப் பாயும் புலியைத் தடுக்கும் நிலையிலும் அமைத்து உள்ளனர். புலியின் முன்னங்கால் இரண்டும் எழுந்த நிலையில் வீரனின் கைகளைத் தாக்கும் நிலையிலும், பின்னங்கால் ஒன்று நிலத்திலும், மற்றொன்று வீரனின் தொடை மேல் அழுத்திய நிலையிலும் உள்ளது. புலியின் வால் மேல் நோக்கிய நிலையில் உள்ளது. வீரன் இடுப்பு பகுதியில் அழகிய ஆடை அணிந்து உள்ளான். கழுத்தில் ஆபரணமும், தலையில் தலைப்பாகையும் அணிந்து உள்ளான். இந்த அமைப்பைப் பார்க்கும்போது இது நாயக்கர் காலத்தைச் சேர்ந்ததாகும்.

சு.இரவிகுமார், சி.திருநாவுக்கரசு, திருப்பூர்

## 77 : 58 கோவில்பாளையத்தில் பெருங்கற்காலச் சின்னங்கள்

திருப்பூர் அருகில் உள்ள கோவில்பாளையத்தில் (திருப்பூரிலிருந்து தென் கிழக்காக 15 கி.மீ. தொலைவில் உள்ளது) பெருங்கற்காலப் பண்பாட்டைச் சேர்ந்த 10 கல்வட்டங்கள் (சில சிதைந்த நிலையில் உள்ளன) மற்றும் கருப்பு சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு வண்ண மட்கலங்களின் ஓடுகளும் கிடைக்கின்றன. மேலும், கொங்கு மண்ணுக்கே உரித்தான பல வண்ண வேலைப்பாடுகளுடன் (ஹுநளபைடே) மட்கலங்களின் ஓடுகளும் கிடைக்கின்றன. மேலும, குறியீடுகள் சங்கு வளையல்கள், சில்லுகள், இரும்பு கசடுகள் போன்றவையும் இங்கு காணப்படுகின்றன.

சு.இரவிகுமார், திருப்பூர்

### 77 : 59 கெடிமேடு புதிர்நிலை

கோவை மாவட்டம், பொள்ளாச்சி வட்டத்தில் உள்ள கெடிமேட்டில் ஏழு சுற்றுக்கோட்டை மாரியம்மன் திருக்கோவில் அமைந்துள்ள பகுதியில் பழைமையான புதிர்நிலை உள்ளமை அறியப்பட்டுள்ளது. 'கெடி' என்ற சொல் 'கோட்டை' என்பதைக் குறிக்கும்.

இது ஒரு சதுரப்புதிர்நிலை ஆகும். ஏறக்குறைய 56' ஒ 56' அடி பரப்பில் உள்ளது. ஏழு பாதைகள் கொண்டது. ஒவ்வொரு பாதையும் 2'6 அடி அல்லது 3'6 அகலம் உடையது. ஐந்தாவது சுற்றில் 2'6 ஒ 2'6 வடிவில் பாதை அடைபட்டுள்ளது. பிள்ளைப் பேறு, எண்ணிய யாவும் அடைய வேண்டுதல், கால்நடைகள் நோய் தீர வேண்டுதல் ஆகியவற்றுக்காக மக்கள் இதனை வழிபட்டு வருகின்றனர்.

சு.இரவிகுமார், திருப்பூர்

### 77 : 60 ஆலங்குடி வட்டாரப் பகுதியில் நுண்கற்காலப் பண்பாட்டு இடங்கள்

புதுக்கோட்டை மாவட்டம், ஆலங்குடி வட்டாரத்தில் அண்மையில் கள ஆய்வு மேற்கொண்டபோது அரசடிப்பட்டி, நெம்மக்கோட்டை, பாப்பான்விடுதி விளக்கு, மணக்கொல்லை, கே.ராசியமங்களம், கீழாத்தூர், தவளப்பள்ளம், களபம், மூக்கம்பட்டி, செட்டியாப்பட்டி ஆகிய இடங்களில் நுண்கற்காலப் பண்பாட்டுச் சின்னங்கள் கண்டறியப்பட்டுள்ளன. இதற்கு முன்னர் இம்மாவட்டத்தில் 20-க்கும் மேற்பட்ட இடங்களில் நுண்கற்காலப் பண்பாட்டைச் சார்ந்த நுண்கற்கருவிகள், செதில்கள் மற்றும் மூலக்கற்கள் போன்றவற்றை கண்டறியப்பட்டுள்ளது. இதனை வலுசேர்க்கும் வகையில் மேற்குறிப்பிட்ட இடங்களில் பதிதாக நுண்கற்காலத்தைச் சார்ந்த தொல்லியல் சான்றுகள் கண்டறியப் பட்டுள்ளன.

#### நுண்கற்காலப் பண்பாட்டு இடங்கள்

நுண்கற்காலப் பண்பாட்டுக் கருவிகள் செம்மண் படிவுகளிலும், வண்டல் மண் படிவுகளிலும், செம்பராங்கற் படிவுகளிலும் காணப்படுகின்றன. தவளப்பள்ளம் மற்றும் மூக்கம்பட்டி ஆகிய இடங்களில் செம்மண் படிவுகளிலும், மணக்கொல்லை, பாப்பான்விடுதி விலக்கு போன்ற இடங்களில் வண்டல் மண் படிவுகளிலும் நுண்கற்காலக் கருவிகள் மற்றும் செதில்கள்

காணப்படுகின்றன. அரசடிப்பட்டி, நெம்மக்கோட்டை, கே.ராசியமங்களம், கீழாத்தூர், களபம், செட்டியாப்பட்டி ஆகிய இடங்களில் செம்மண் படிவுகளுடன் கூடிய செம்பராங்கற் படிவுகளில் குவாட்ஸ் வகை நுண்கற்காலப் பண்பாட்டுத் தடயங்கள் கண்டறியப்பட்டு சேகரிக்கப்பட்டுள்ளன.

நாடோடிகளாக வாழ்ந்த நுண்கற்காலத்திய மனிதர்கள் நுண்திறனுடன் கருவிகளை நேர்த்தியாகவும், செம்மையாகவும் நுணுக்கமாகவும் உருவாக்கியுள்ளனர். ஆய்வுப் பகுதியில் சேகரிக்கப் பட்ட நுண்கற்கால கருவிகளானது மூலக்கற்கலில் காணமுடிகிறது. அதேபோன்று மூலக்கற்களில் இருந்து வெளிவருகின்ற செதில்களை மறுவேலைப்பாடு செய்து பல சிறு கருவிகளையும் செய்துள்ளனர். இதற்கு காட்டாக நெம்மக்கோட்டை, கீழாத்தூர் ஆகிய இடங்களில் சேகரிக்கப்பட்ட கிழிப்பான், பிறை வடிவக்கருவி மற்றும் யூ வடிவக்கருவி போன்றவற்றை குறிப்பிடலாம்.

- ஆ.ராஜா, தஞ்சாவூர்

**77 : 61 கிருஷ்ணகிரி வட்டார புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள்**

கிருஷ்ணகிரி மாவட்டம், கிருஷ்ணகிரி வட்டத்தில் மேற் கொள்ளப்பட்ட களமேற்பரப்பாய்வில் புதிய தொல்லியல் சான்றுகள் கண்டறியப்பட்டன. அவை கீழ்வருமாறு :

கொடுங்கூர், நுண்கற்கால கருவிகள் புதிய கற்கால கருவி, இரும்புகால வாழிவிடம்; மேல் அம்மனேரி, நடுகல்; திருச்சிற்றம் பலம், இடைபழங்கற்கால தொழிற்கூடம், புதிய கற்கால கருவிகள், இரும்பு கால வாழ்விடம்; குண்டலகுண்டா, இடைபழங்கற்கால கருவிகள், புதிய கற்கால பானை ஓடுகள், பாறை ஓவியங்கள்; சின்னமட்டாரம்பள்ளி, பழைய கற்கால கருவிகள், புதிய கற்கால கருவிகள்; ஆலப்பட்டி, நடுகல்; கிருஷ்ணகிரி, புதிய கற்கால கருவிகள், பாறை ஓவியங்கள், கல்வெட்டு, நடுகற்கள்; மைதண்டபள்ளி, நடுகல்; மகாராஜக்கடை, பாறை ஓவியங்கள்.

சீ.பரந்தாமன், சென்னை

## 77 : 62 இறையூர் காமாட்சியம்மன் கோயில் கழுவடியான் தூண்

புதுக்கோட்டை மாவட்டம், குளத்தூர் வட்டம், இறையூர் காமாட்சியம்மன் கோயிலில் இத்தூண் உள்ளது. தரைக்கு மேல் 5 அடி உயரம் கொண்டதாக இக்கல்த்தூண் உள்ளது. தூணின் மேற்பகுதி கொம்பு போல் கூர்மையாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இக்கல்த்தூணின் அடிப்பகுதியில் வீரன் ஒருவன் இரு கரம் கூப்பி அஞ்சலி முத்திரையில் நின்றுகொண்டுள்ளான். நாயக்கர் காலப் பாணியில் குடுமி இடது பக்கத் தலையில் இடம் பெற்றுள்ளது. கழுமரம் என்பது பழங்காலத்தில் கழுவேற்றத்திற்கு நடப்பட்ட ஈட்டி போன்ற வடிவம் கொண்ட மரமாகும். இத்தூண் கல்லால் ஆனதாக உள்ளது. குற்றவாளிகளைக் கழுவிலேற்றிய செய்தி வரலாற்றில் அறியப்படுகின்றது. அத்தூணின் பெயரிலேயே உள்ள கழுவடியான் என்ற பெயரிலுள்ள உண்மையை அறிந்து பொருள் கொள்ளல் பொருந்தும். கழுவடியான் என்றால் அது ஒரு துர்தேவதையாகும். "கழுவடியில் மனிதனுயரமான கழியில் தாபிக்கப்பட்டுள்ள ஒரு சிறு தேவதை" என்று சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள தமிழ்ப் பேரகராதி பொருள் தருகிறது. அக் கூற்றிற்கு சிறந்த எடுத்துக்காட்டாக இறையூர் கழுவடியான் தூண் விளங்குகின்றது என்று சொல்லலாம்.

அ.சந்திரபோஸ், புதுக்கோட்டை

## 78. ஆந்திராவில் சோழர் உருவாக்கிய பிரம்மதேயம்

சூ.சுவாமிநாதன், மைசூர்

ஆந்திர மாநிலம், கடப்பா மாவட்டத்திலுள்ள இராசம்பேட்டை வட்டத்திலுள்ள நந்தலூரில் சௌமியநாதர் திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலின் மண்டபத்தின் வடக்கு மற்றும் மேற்குப் பகுதியில் விக்கிரம சோழனின் 8-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. இக்கல்வெட்டானது சோழர்களின் சமூக அரசியலுக்கு மிகவும் முக்கியமானதாகும். இது சோழர் காலத்தில் ஆந்திராவில் ஒரு பிரம்ம தேயம் உருவாக்கப்பட்டதைக் குறிப்பிடுகின்றது. வழக்கமாக வரும் விக்கிரமசோழனின் மெய்க்கீர்த்தியான, பூமாது புணர ... என்ற தொடருடன் தொடங்குகிறது.

இக்கல்வெட்டு கி.பி.12-ஆம் நூற்றாண்டின் தமிழ் மொழியில், தமிழ் எழுத்துகளில் வெட்டப்பட்டுள்ளது இதில் வடமொழி சொற்கள் வரும் இடங்களில், கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கல்வெட்டில் சில இடங்களில் பங்கு என்று எழுதியுள்ள இடங்களில் பம்கு என்று உள்ளது.

இக்கல்வெட்டு பொத்தப்பி நாட்டைச் சேர்ந்த மகாமண்டலேசுவரன் விமாலாதித்ததேவன் என்பவன், பாக்கை நாட்டில் இருக்கிற மண்ணூர் என்கிற ஊருக்கு, விக்கிரமசோழசதுர்வேதிமங்கலம் என்ற பெயரை சூட்டித் தானமாகக் கொடுத்துள்ளதைக் குறிப்பிடுகிறது. இச்சதுர்வேதிமங்கலத்தை 74 பிராமணர்களுக்கு, 70 பங்குகளாக இத்தெலுங்கு சோழ அரசன் பிரித்துக் கொடுத்துள்ளதைக் காணமுடிகிறது. இச்சதுர்வேதிமங்கலம் நான்கு பக்க எல்லைக்குள் உட்பட்டிருந்த நீர், நிலம், தரிசு நிலம், காடு, குன்று, குண்டு, குழி முதலியவைகளை உட்கொண்டுள்ளது. இச்சதுர்வேதி மங்கலமானது, மேற்கண்ட பிராமணர்களுக்கு முக்கியமாக சோழ அரசனின் தென்னாட்டு வெற்றிக்காக, 70 பங்குகளாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. இப்பிராமணர்களின் சொந்த ஊர்களையும், கோத்திரங்களையும், பெயர்களையும், பங்குகளின் எண்ணிக்கைகளையும் முறையே கீழ்கண்ட அட்டவணையில் காணலாம்.

| வ.எண். | சொந்த ஊர் | கோத்திரம் | பிராமணரின் பெயர் | பங்கு |
|---|---|---|---|---|
| 1. | முடும்பை | வத்ஸ | யஞ்ச நாராயண தசப்பிரியப்பட்ட சோமாசியார் | 2 |
| 2. | மேலது | —— | ஸ்ரீபாதபட்டர் சோமாசியர் | 1 1/2 |
| 3. | கௌதம் | திவிதகோமபுரம் | வாமனசதுர்வேதி பட்டர் | 1/2 |
| 4. | காராம்பிச்செட்டு | பாரத்துவாச | குமாரசாமி பட்டர் | 1/2 |
| 5. | மேலது | —— | .. நய பட்டர் | 1/2 |
| 6. | குரோவி | பாரத்துவாச | சிரி கிருஷ்ணப் பட்டர் | 1 |
| 7. | குரவசிரி | கௌவுதம | தட்சிணாமூர்த்தி பட்டர் | 1 |
| 8. | பாடகம் | பாரத்துவாச | ஆட்கொண்ட பட்டர் | 2 |
| 9. | மேலது | —— | வாமனபட்டர் | 1 1/2 |
| 10. | கந்தாடை | வாதுல | சங்கரநாராயண பட்டர் | 1 |
| 11. | நடறேப்பள்ளி | —— | திருவிசலூர் அடிகள் பட்டர் | 1/2 |
| 12. | வற்றலூர் | பாரத்துவாச | பாலேந்திமௌவுளி பட்டர் | 1 |
| 13. | காஞ்சிக்குறி | மேலது | சர்வதேவ பட்ட உபாத்தியாயர் | 1/2 |
| 14. | கந்தாடை | வாதுல | யாதவ பட்டர் | 1 |
| 15. | உறுப்புட்டூர் | வத்ச | பத்மநாப பண்டிதர் | 2 |
| 16. | கந்தாடை | வாதுல | மாதவ தசப்பிரிய பட்டர் | 1 |
| 17. | மேலது | மேலது | ஸ்ரீராம பட்டர் | 1 |
| 18. | மேலது | —— | ஆளவந்தான் பட்டர் | 1/2 |
| 19. | புளிங்கற்குறி | —— | கோவாண்டவன் பட்ட சோமாசியர் | 2 |
| 20. | இவுணி | பாரத்துவாச | ஸ்ரீராம பட்டர் | 1 |
| 21. | மேலது | —— | தோணய பட்டர் | 1 |
| 22. | மேலது | —— | சிறியதோணய பட்டர் | 1 |
| 23. | இராயூர் | சட்மர்சண | சொட்டை ஈஸ்வர பட்டர் | 1/2 |
| 24. | கிராஞ்சி | ஹரித்த | சிரிராம பட்டர் | 3/4 |
| 25. | பிராயாகை | கௌசிக | சோமநாதபண்டித சோமாசியர் | 1 |
| 26. | கந்தாடை | வாதுல | திருவேங்கடம் தசப்பிரிய பட்டர் | 1/2 |
| 27. | பத்தரை | பாரத்துவாச | சிரிராம பட்டர் | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| 28. | கந்தாடை | வாதுல | தாமோதிரச் சதுர்வேதி பட்ட சோமயாஜியார் | 1 |
| 29. | முடும்பை | வத்ச | ஸ்ரீ வத்சாங்க பட்ட சோமயாஜியார் | 3/4 |
| 30. | கோமபுரம் | கௌண்டின்ய | மாதவசப்பிரிய பட்டர் | 1 |
| 31. | முடும்பை | வத்தச | இருவேங்கடம் பட்டர் | 1 |
| 32. | மேலது | —— | சிரிவத்தசங்க பட்டர் | 1 |
| 33. | மேலது | —— | யக்ஞநாராயண பட்டர் | 1/4 |
| 34. | கோனராஞ்சி | —— | யக்ஞநாராயண பட்டர் | 3/4 |
| 35. | கோமபுறம் | கௌண்டின்ய | தட்சிணாமூர்த்தி சதுர்வேதி பட்டர் | 1 |
| 36. | உறுப்புட்டூர் | வத்ச | நாராயண பட்டர் | |
| 37. | மேலது | —— | உலகுமுண்டான் பட்டர் | 1 |
| 38. | செறுவனூர் | —— | ஈஸ்வரபட்டர் சர்வாதித்தியன் | 1 |
| 39. | கோமபுறம் | கௌண்டின்ய | சந்திரகுமார பட்டர் | 1 |
| 40. | இருங்கண்டி | கௌசிக | வெண்ணைக்கூத்த பட்டர் | 1 |
| 41. | உறுபுத்தூர் | —— | பூதி விஷ்ணு பட்டர் | 1 |
| 42. | அட்டாம்புறம் | காசியப | சிரிராம பட்டர் | 1 |
| 43. | மேலது | —— | யக்ஞமூர்த்தி பட்டர் | 1 |
| 44. | உறுப்புட்டூர் | வத்தச | அருளாள பட்டர் | 1 |
| 45. | நடாதூர் | மேலது | நாராயண பட்டர் | 1 |
| 46. | சுரசாரம்பி | ஹரித | நாராயண பட்டர் | 1/4 |
| 47. | மேலது | —— | ஆட்கொண்ட வில்லி தசப்பிரிய பட்டர் | 1/2 |
| 48. | மேலது | —— | ஸ்ரீராம பட்டர் | 3/4 |
| 49. | கந்தாடை | வாதுல | விநாயக பட்ட ஆழ்வார் | 1 |
| 50. | படாகம் | —— | சோமதேவ பட்டர் | 1 |
| 51. | இராயூர் | சட்மர்சண | சோட்டை ருத்திர விஷ்ணு பட்டர் | 1 |
| 52. | உறுபுட்டூர் | வத்தச | சஷ்டிருத்திர பட்டர் | 1/2 |
| 53. | —— | பார்த்துவாச | —— | 1/2 |
| 54. | ஆடுக்குடி | —— | சோமாஸ்கந்த குமார பட்டர் | 1 |
| 55. | கிடம்பி | ஆத்திரேய | இராமபிராந் பட்டர் | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| 56. | செட்டலூர் | கௌசிக | பொந்தாழிக்கய்ய பட்டர் | 1 |
| 57. | வங்கிபுரம் | காசியப | அருளாள தசப்பிரியர் | .. |
| 58. | கிராஞ்சி | ஹரித | தோணாய பட்டர் | 3/4 |
| 59. | வாணந்தி | —— | சிரிநீலகண்ட பட்டர் | 1 |
| 60. | —— | வாதுல | சங்கர நாராயண பட்ட சோமாசியர் | 1/2 |
| 61. | ஆலின்கொன்றை | ஹரித | நாராயண பட்டர் | 1/2 |
| 62. | செட்டலூர் | கௌசிக | அய்யப்பிரான் பட்டர் | 1 |
| 63. | பொற்புறம் | பார்த்துவாச | ஸ்ரீகிருஷ்ண பட்டர் | 1/2 |
| 64. | பெருங்கண்டூர் | காசியப | பெரியரச பட்டர் | 1 |
| 65. | —— | வத்ச | ஜன்னய பட்டர் | 1 |
| 66. | —— | கௌசிக | கேசவ பட்டர் | 1 |
| 67. | —— | கௌண்டின்ய | பெத்ததத்வேதி பட்டர் | 1 |
| 68. | —— | கௌசிக | ஈஸ்வர பட்டர் | 1 |
| 69. | —— | காசியப | நாகே பட்டர் | 1 |
| 70. | —— | —— | வைத்தியப் பணி | 1 |
| 71. | —— | —— | அருளாள தசப்பிரிய பட்டர் | 1 |
| 72. | வங்கிபுறம் | வத்தச | யக்ஞமூர்த்தி சதுர்வேதிபட்ட சோமாசியர் | 1 |
| 73. | குண்டூர் | பார்த்தவாச | சிரிராம பட்டர் | 1/2 |
| 74. | —— | காசியப | சோலை அரசு பட்டர் (மருத்துவர்) | 1 |

இந்த அட்டவணையின் வழியாக சுமார் 28 ஊர்களைச் சார்ந்த 10 கோத்திரங்களைச் சார்ந்த 74 பிராமணர்களுக்கு விக்கிரமசோழ சதுர்வேதி மங்கலத்து நிலங்களை 70 பங்குகளாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளதை அறிந்துக்கொள்ள முடிகிறது.

இக்கல்வெட்டின் இறுதிப் பகுதியில் ஆறு பாடல்கள் வடமொழியிலும், கிரந்த எழுத்துகளிலும் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றில் முதல் பாடல் மண்ணூரைச் சார்ந்த உத்தம பிராமணனைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இரண்டாவது பாடல் சூரியக்குலத்தில், பிறந்த விமலாதித்தனைப் பற்றிக் குறிப்பிடுகிறது. மூன்றாவது பாடல் விக்கிரமசோழனின் பாதங்களை வணங்கிய அரசனின் பெருமைகளைக் குறிப்பிடுகிறது.

பொதுவாக கற்றறிந்த பிராமணர்களுக்குக் கொடுக்கப்படும் கொடைகளின் பங்குகளைக் குறிப்பிடும்பொழுது, செப்புப் பட்டயத்தில் வெட்டப்படுவது மரபாகும். ஆனால், இங்கு அந்தணர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அக்கிரகாரம் பிற்காலச் சோழர்களின் மரபுக்கு மாறாக அமைந்துள்ளது. இருப்பினும் இத்தகைய நிகழ்வுகள் பாண்டியர்களின் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இது சோழர்களால் ஆந்திராவில் உருவாக்கப்பட்டுள்ள இறுதி அக்கிரகாரமாகும். பிராமணர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள இந்த கொடையானது ஏன் செப்புப் பட்டயத்தில் வெட்டாமல், கல்லில் வெட்டியுள்ளனர் என்பது சிந்திக்கப்பட வேண்டியது. இது ஒரு சிற்றரசரின் கொடையாகும். மேலும், இக்கொடையில் சோழ அரசர் நேரிடையாக ஈடுபடவில்லை. இது சோழ அரசன் வெற்றி பெறவேண்டும் என்பதற்காக, அவனது சிற்றரசனால் கொடுக்கப்பட்டுள்ளதாகும். இதன் மற்றொரு சிறப்பு இந்தக் கொடை கொடுக்கப்பட்டுள்ள ஊரானது சோழ நாட்டிலிருந்து மிகவும் தொலைவில் அமைந்துள்ள பொத்தப்பி நாட்டில் அமைந்துள்ளது என்பதாகும். இக்கொடையைக் கொடுத்தள்ள பொத்தப்பிச் சோழர்கள், சோழர்களைப் போன்று இவ்வூரிலும் பிரம்மதேயம் ஒன்று உருவாக்கி அந்தணர்களுக்கு ஈந்தனர்.

இச்சதுர்வதே மங்கலம் உருவாக்கப்பட்டதன் நோக்கம் சோழ அரசன் நலமுடன் வாழவேண்டும் என்பதற்காக பொத்தப்பி சோழனால் கொடுக்கப்பட்டுள்ளதாகும். தங்களது நிலையை வலுப்படுத்திக் கொள்ளவும் சோழர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகவும் குறுநில மன்னர்கள் இத்தகைய உத்திகளை மேற்கொண்டனர். விக்கிரமசோழன் அரியணைக்கு வரும்பொழுது அவனுக்குப் பல இன்னல்கள் இருந்தன. அவனது மாற்றாந்தாயின் மகனான பராந்தகனுக்கு, முதலாம் குலோத்துங்களின் ஆதரவு பெருமளவில் இருந்தது. பராந்தகனின் பல கல்வெட்டுக்கள் சோழ நாட்டில் கிடைத்திருப்பதே இதற்குச் சான்று. அவனுக்கு தாயாதிகளின் தொந்தரவுகள் இருந்தன. மேலைச்சாளுக்கிய அரசனான ஆறாம் விக்கிரமாதித்தியன் வேங்கியில் அரியணையைக் கைப்பற்றுதற்குரிய தருணத்தை எதிர் நோக்கிக் கொண்டிருந்தான். விக்கிரம சோழன், வேங்கி நாட்டை சோழ நாட்டின் பிரதிநிதியாக ஆட்சி செய்துகொண்டிருந்தான். அதே நேரத்தில் சாளுக்கிய நாட்டின் எல்லைப் பகுதியில் சோழ ஆதிக்கம் நுழைய முடியாத

நிலையில் அமைந்திருந்தது. விக்கிரமசோழன் சோழ நாட்டுக்குச் சென்றவுடனேயே, விக்கிரமாதித்தன் வேங்கியிலுள்ள சோழர் பிரதிநிதியை விரட்டிவிட்டு வேங்கி அரண்மனையைப் பிடித்துக் கொண்டான். இவற்றிற்கெல்லாம் மேலாக விக்கிரம சோழனின் ஆட்சியில், சோழநாட்டில் ஏற்பட்டிருந்த வெள்ளம், பஞ்சம், பயிர்ச்சேதம் முதலான பாதிப்புகளினால் விக்கிரம சோழன் பெரிதும் இன்னலுற்றான். அச்சமயத்தில் ஹோசள நாட்டின் அரசன் விஷ்ணுவர்த்தன், விக்கிரம சோழனுக்குத் தஞ்சாவூரில் தன் நலன் பொருட்டு ஆட்சியமைக்க உதவியுள்ளதை அறிந்துக்கொள்ள முடிகிறது. எனவே, சோழ அரியணை ஆரம்ப கட்டத்தில் விக்கிரம சோழனுக்கு ஒரு முள் மெத்தையாகத்தான் இருந்தது.

தெலுங்கு சோழ அரசனாகிய சித்தராசனின் மகன் விமலாதித்தியன் என்பவன் கடப்பா மற்றும் நெல்லூர் ஆகிய பகுதிகளை ஆட்சிசெய்து கொண்டிருந்தான். இத்தெலுங்கு சோழ அரசனே, மேற்கண்ட சதுர்வேதி மங்கலத்தைக் கொடையாகக் கொடுத்துள்ளான். இவன் தஞ்சை சோழர்களின் கீழ் நிர்வாகம் செய்தவன். சோழர்களின் உறவுக்காரனும் ஆவான். விக்கிரமசோழனின் 3-ஆம் ஆட்சியாண்டுக் (கி.பி.1121) கல்வெட்டு ஒன்று பொத்தப்பி நாட்டை ஆட்சி செய்துகொண்டிருந்த மஹாமண்டலேசுவரன் பெத்தராசாவாகிய சித்தராச என்பவன் 20 பிராமணர்களுக்கு அக்கிரகாரம் ஒன்றைச் சோழ அரசர்கள் வலிமையுடன் வாழவேண்டும் என்பதற்காக கொடுத்துள்ளதைப் பற்றித் தெரிவிக்கிறது. இப்பொத்தப்பிச் சோழ அரசனைப் பின்பற்றிதான் இவனது மகன் விமலாதித்தியன் மிகப்பெரிய அக்கிரகாரம் ஒன்றைத் தனது நாட்டில் கொடுத்துள்ளான். குறுநில மன்னர்களாகிய பொத்தப்பி சோழர்கள், சோழ மன்னர்களின் நலன் கருதியே பல நன்மைகளை செய்துள்ளனர் குறிப்பாக விக்கிரம சோழ மன்னனின் காலத்தில் இது நல்ல உறவாக மலர்ந்துள்ளதைக் காணமுடிகிறது.

இக்கொடைகள் பெரும்பாலும் தக்ஷிணாயனம் காலத்தில் மழைக் காலங்களில் கொடுக்கப்பட்டள்ளன. பிராமணர்களுக்கு நிலக்கொடைகளைக் சூரிய கிரகணம், சந்திர கிரகணம் போன்ற நாட்களில் கொடுத்துள்ளதைப் பல கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. இந்நாட்களில் கொடுக்கப்படும் கொடைகள் பிராமணர்களின் நன்மைகளுக்கு மட்டுமின்றி, கெட்ட அறிகுறிகளை ஒடுக்குவதற்காக ஒருவகை நம்பிக்கையின் அடிப்படையில்,

கொடுக்கப்பட்டுள்ளதாகக் கருதலாம். இவற்றின் அடிப்படையில், விக்கிரம சோழன் தஞ்சாவூரில் எவ்வித தொந்தரவுகளும் இன்றி, ஆட்சி செய்வதற்காகவும், நலமுடன் வாழ வேண்டும் என்பதற்காகவும், இவனது ஆதிக்கத்தின் கீழிருந்த சிற்றரசர்கள் பல அக்கிரகாரங்களைக் உருவாக்கியுள்ளனர் என்று கருதுவது தவறாகாது.

இத்தகையக் காரணங்களால் பொத்தப்பிச்சோழ மன்னன் விமலாதித்தனால் கொடுக்கப்பட்ட மண்ணூர் கிராமமானது, 70 பங்குகளாகப் பகுக்கப்பட்டு, 74 பிராமணர்களுக்கு பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளதையும், அவ்வூருக்கு சோழ மன்னன் விக்கிரமசோழனின் பெயரிலே விக்கிரம சோழச்சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது. இச்சதுர்வேதி மங்கலத்தில் அமைந்துள்ள நிலப்பகுதியானது நீர், நிலம், தரிசு நிலம், காடு, குன்று, குண்டு, குழி முதலியவற்றைக் கொண்டு அமைந்திருந்த மணற்பாங்கான ஊர் என்று முன்னரே குற்றிப்பிடப்பட்டுள்ளது. இங்கு கொடுக்கப்பட்டுள்ள நிலப்பகுதி கள் விவசாயம் செய்வதற்கு ஏற்றாற்போல அமைந்திருந்ததா அல்லது பங்குகள் பிரித்துக் கொடுக்கப்பட்டவுடன் விவசாய நிலமாகப் பண்படுத்தப்பட்டுள்ளதா என்பதைப் பற்றி அறிந்துக் கொள்ளமுடியவில்லை. இத்துடன் ஒவ்வொரு பங்கும் அளிக்கப் பட்ட கிராமத்தில் எவ்வளவு நில அளவைக் கொண்டிருந்துள்ளன என்பதனையும் அறியமுடியவில்லை. மேலும், கொடையைப் பெற்றுள்ளப் பிராமணர்கள் தங்களுக்குரிய பங்கின் நிலத்திற்குரிய பலனை மட்டும் பெற்றுக்கொண்டார்களா என்றும் தெரியவில்லை.

கொடையைப் பெற்றுக்கொண்ட பிராமணர்கள் தங்களுக்குரிய பங்கின் நிலத்தின் ஒரு பகுதியை விவசாயம் செய்வதற்கு விட்டிருக்கவேண்டும். அனைத்து காடுகளையும் அழித்துவிட்டு அந்நிலங்களை விவசாயம் செய்வதற்கு பயன்படுத்தினார்களா? கொடையைப் பெற்றுக்கொண்டவர்களால் அவ்வாறு செய்திருக்க முடியுமா அல்லது அது தேவையா என்பதை ஊகித்து உணர வேண்டிய நிலையில் உள்ளது. இருந்தபோதிலும், அளிக்கப்பட்ட காட்டுப்பகுதியின் ஒரு பகுதியை கால்கறிகளைத்தரும் செடிகளையும் பழம் தரும் மரங்களையும் நட்டு இருக்கவேண்டும். இத்துடன் விறகு தரும் மரங்களையும், ஹோமங்களுக்குப் பயன்படும் மரவகைகளையும் நட்டிருக்க வேண்டும். மேலும், தருப்பை புல்லு வகைகளையும் விளைவித்திருக்கவேண்டும்.

இவற்றிற்குத் தேவையான நீரை, குளம், குட்டை, ஓடை, ஆறு போன்றவற்றிலிருந்து பயன்படுத்தியிருக்கவேண்டும். இத்தகையக் காட்டுப் பகுதியைப் பாதுகாப்பதற்கு கொடைப் பெற்றுக்கொண்ட பிராமணர்கள் தங்களுக்குள் இவற்றை வரையறை செய்துக் கொண்டிருக்க வேண்டும் என்று கருதலாம்.

பிரம்மதேயங்களின் உருவாக்கமானது மேற்கண்ட சமயத் தொடர்பானக் காரணங்களுக்காக மட்டுமின்றி, பொருளாதார வளர்ச்சி நிலையை மேம்படுத்துவதற்காகவும் என்று கருதலாம். இதோடு மட்டுமின்றி பிரம்மதேயங்கள் கோயில்களைக் கட்டுவதற்கும், கிணறுகளை வெட்டுவதற்கும், நிலங்களைப் பண்படுத்துவதற்கும், கண்மாய்கள் அமைப்பதற்கும், ஏரி, குளங்களை வெட்டுவதற்கும், கல்விக் கூடங்களை நிர்வாகிப்பதற்கும், ஈடுபடுத்திக் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது. மொத்தத்தில் பிரம்தேயங்கள் சமூக வளர்ச்சிக்காக கொடுக்கப்பட்டுள்ளன என்று கருதலாம். இவற்றைப் பற்றி பேராசிரியர் கரோஷிமா கருத்து தெரிவிக்கையில், இவை பிராமணர்களின் எண்ணத் தாக்கங்களை வெளிப்படுத்துகின்ற பகுதியாக அமைந்திருந்துள்ளன என்றும், பிராமணர்கள் அல்லாதார்களின் வசிப்பிடப் பகுதியிலிருந்து தங்களைச் சமூக அமைப்பில் தனித்துக்காட்டிக் கொள்வதற்காக உருவாக்கப்பட்டுள்ளன என்றும் மேலும் பழங்குடிகளை நாகரிகத்தின் எல்லைக்குள் கொண்டு வரவும் இப்பிரமதேயங்கள் பணியாற்றின என்றும் குறிப்பிட்டுள்ளார்.

மேற்கண்ட கல்வெட்டில், பிராமணர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள பங்குகள் பெரும்பாலும் கால் பங்குகளாகவே அமைந்துள்ளன. நான்கு பிராமணர்களுக்கு மட்டும் முறையே இரண்டு பங்குகள் கொடுக்கப்பட்டுள்ளன. இவை எந்த அடிப்படையில் கொடுக்கப்பட்டுள்ளன என்பது புரியவில்லை. ஆனால், இவற்றை கல்வி, வயது, அனுபவம் போன்ற தகுதிகளை அடிப்படையாகக் கொண்டு கொடுக்கப்பட்டிருக்கலாம். நிலப்பங்குகளைப் பெற்ற இவ்வந்தணர்கள் பெரும்பாலும் ஆந்திராவைச் சேர்ந்தவர்கள். கல்வெட்டில் காட்டப்பெற்ற இவர்களது சொந்த கிராமங்கள் நெல்லூர் - குண்டூர் பகுதிகளில் உள்ளன.

கொடை பெற்றுக்கொண்ட பிராமணர்கள், தங்களுடைய பங்குகளைத் திருக்கோயிலில் பணி செய்வதற்கும், இவர்களுக்குப் பணிபுரிகின்ற குயவர்கள், தச்சர்கள், கொல்லர்கள், ஆசிரியர்க, வண்ணான்கள் போன்ற மற்றப் பணியாளர்களுக்கு கொடுத்து, அவர்களிடம் வேலை வாங்கியிருக்கலாம். இந்த கல்வெட்டில் பிராமணர்களுக்கு மருத்துவம் பார்க்கும் இரண்டு மருத்துவர்களுக்கு மட்டும் இரண்டு பங்குகள் கொடுத்துள்ளதை தெளிவாக அறிந்துகொள்ள முடிகிறது.

இவற்றைப்போன்று கொடை பெற்றுக்கொண்டுள்ள பிராமணர்களின் பெயர்களும் முக்கியத்துவம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. குறிப்பாக ஒரு பிராமணனின் பெயரானது, வாஸ்தாங்க பட்டர் என்று வந்துள்ளது. இப்பெயர் விஷ்ணுவின் மார்பில் வீற்றிருக்கும் இலஷ்மியைக் குறிப்பிடுகிறது. மற்றொரு பிராமணனின் பெயரானது உலகமுண்டான் என்று வந்துள்ளது. இது கிருஷ்ணன் தன்னுடைய தாய்க்கு தன்னுடைய வாயில் உலகத்தை காட்டியதைக் குறிப்பிடுகிறது. மற்றொரு பெயரானது இராமபிரான் என்பதாகும். இவற்றைப் போன்று பொன்னாழிகை என்ற பெயரும் வந்துள்ளது. இது விஷ்ணு பெருமான் தனது கையில் வைத்திருக்கும் பொந் பாத்திரத்தைக் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது. பிறிதொருப் பெயர் பெத்தன்ன துவைதா என்பதாகும். இப்பெயர் தெலுங்கு மற்றும் சமஸ்கிருதத்தில் வல்லவரான இரண்டு வேதங்களில் சிறப்பான அறிவுடையவர் என்று உணரமுடிகிறது. இன்னொரு பெயரானது விநாயகப்பட்டர் ஆழ்வார் என்பதாகும். இது வைணவ ஆழ்வார்க்கு வைத்துள்ள சைவப் பெயர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அடிக்குறிப்புகள்

1. தென்னிந்திய கல்வெட்டுகள், தொகுதி 23, எண் 579.
2. J. Sundaram, Land System in Tamilnadu
3. S. Swaminathan, Agraharas, some aspects of its rise and fell, of JMS.
4. J. Sundaram, Nandivarman and Sri Vaishnavas - Their homes, Sudharshana, B.R.Gopal commemoration Volume (2000).

## 79. கீழடி அகழாய்வு

கி.அமர்நாத் ராமகிருஷ்ணா,
மு.ராஜேஷ், நா.வீரராகவன்
இந்திய தொல்பொருள் களஆய்வுத் துறை
அகழாய்வு பிரிவு, பெங்களூரு

இந்திய தொல்பொருள் களஆய்வுத் துறையின் கீழ் இயங்கி வரும் அகழாய்வு பிரிவு எண்.6 (பெஙகளூரு), 2013 - 2014 ஆண்டில் வைகை நதிப் பகுதியின் வரலாற்றையும் தொன்மையையும் அறிந்துகொள்ளும் பொருட்டு தேனி, திண்டுக்கல், மதுரை, சிவகங்கை ராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களில் தொல்லியல் கள ஆய்வு மேற்கொண்டது. வைகை நதி உற்பத்தியாகும் வெள்ளி மலையில் தொடங்கி அது வங்கக் கடலோடு கலக்கும் பகுதிவரை ஊர் ஊராகச் சென்று ஆற்றின் இருமருங்கிலும் தீவிர ஆய்வு செய்து தொல்லியல் சார் இடங்கள் முறையே ஆவணப்படுத்துவதோடு மட்டுமல்லாமல் அவற்றுள் ஏதேனும் முக்கியமானதொரு இடத்தினைத் தேர்ந்தெடுத்து அகழாய்வு செய்வதும் இக்கள ஆய்வின் நோக்கமாக இருந்தது.

தென்தமிழகத்தின் முக்கிய நீராதாரமாக விளங்கும் வைகை நதி மேற்கு தொடர்ச்சி மலைத்தொடரில் வெள்ளிமலை அருகே உற்பத்தியாகிறது. சுருளியாறு, கொட்டக்குடியாறு, வராஹ நதி, மஞ்சளாறு, மருதாநதி போன்ற உப ஆறுகளின் நீரினைப் பெற்று மேலும் விரிவடைந்து சுமார் 250 கிலோ மீட்டர் தூரம் மேற்சுட்டிய ஐந்து மாவட்டங்களின் வழியே பாய்ந்து சங்ககாலப் பாண்டியர் துறைமுகமான அழகன்குளம் அருகே ஆற்றங்கரையில் வங்கக் கடலுடன் கலக்கிறது.

வைகை நதிப் பள்ளத்தாக்குப் பகுதியில் இதற்கு முன்னர் 1950-களில் முனைவர் கே.வி.இராமன் அவர்களால் ஆங்காங்கு சிறு அளவிலும் பின்னர் 2006-இல் முனைவர் கா.ராஜன் அவர்களால் புலிமான்கொம்பை, தாதப்பட்டி நடுகற்கள் கண்டுபிடிக்கப் பட்டதைத் தொடர்ந்து வைகை நதியின் மேற்பகுதியில் தொல்லியல் கள ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. பலவகை தொல்லியல் சிறப்பினைக் கொண்டிருப்பினும்கூட இதுகாறும் வைகை நதி பள்ளத்தாக்குப் பகுதியில் விரிவான அகழாய்வு ஏதும் மேற்கொள்ளப் படவில்லை. அனுப்பானடி, பரவை (1888), தி.கல்லுப்பட்டி (1976),

கோவலன் பொட்டல் (1980), அழகன்குளம் (1986), மாங்குளம் (2007) ஆகிய இடங்களில் சிறிய அளவில் அகழாய்வு நடைபெற்றுள்ளது.

2013 - 2014-இல் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் பல்வேறு தொல்லியல் எச்சங்கள் கொண்ட சுமார் 293 ஊர்கள் வைகை நதி பள்ளத்தாக்குப் பகுதியில் அடையாளம் காணப்பட்டன. இதில் வரலாற்றின் வெளிச்சத்திற்கு வராத புதிய தொல்லியல் சிறப்பு வாயந்த ஊர்களும் பலபழங்கால ஊரிருக்கை மேடுகளும் கண்டறியப்பட்டன. அவற்றில் டொம்பிச்சேரி, சித்தர்நத்தம், மாரநாடு, அல்லி நகரம், கீழடி, ராஜகம்பீரம், பாண்டிக்கண்மாய். அரசநகரி ஆகிய ஊர்கள் பரிசீலிக்கப்பட்டு அவற்றுள் மதுரையருகில் சிவகங்கை மாவட்டத்தில் அமைந்துள்ள கீழடி தொல்லியல் அகழாய்விற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது. இவ்வூர் மதுரையிலிருந்து 12 கி.மீ. தொலைவில் தென்கிழக்கு திசையில் ராமேசுவரம் செல்லும் பண்டைய வணிகப் பாதையில் வைகை நதியின் தென்கரையில் அமைந்துள்ளது.

கீழடி மற்றும் கொந்தகை உள்ளடக்கிய பகுதி பிற்காலப் பாண்டியர் காலத்தில் குந்திதேவி சதுர்வேதிமங்கலம் என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளது. கீழடியுள்ள அர்ஜுனேசுவரர் கோயிலில் காணப்படும் பொ.கா. 12 - 13ஆம் நூற்றாண்டு கல்வெட்டுக்களில் வேலூர் குளக்கிழ் எனும் நாட்டுப் பிரிவின் கீழ் இவ்வூர் அமைந்திருந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது.

தற்போதைய கீழடி ஊரிலிருந்து தென்கிழக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் மணலூர் கண்மாயின் மேற்கரையில பள்ளிச்சந்தை திடல் என்றழைக்கப்படும் இடத்தில் தொல்லியல் மேடொன்று உள்ளது. சுமார் 2.88 மீட்டர் உயர்ந்து காணப்படும் இம்மேடு 80 ஏக்கர் பரப்பளவில் 3.5 கிலோ மீட்டர் சுற்றளவைக் கொண்டு தற்பொழுது தென்னந்தோப்பாக உள்ளது. மேட்டின் மேற்பரப்பிலேயே பலவகையான மட்கலன்கள், தொல்பொருட்கள், பெரிய அளவிலான சுட்ட செங்கற்கள் மற்றும் கூரை ஓடுகள் சிதறுண்டு கிடக்கின்றன. இங்கிருந்து கிழக்கே சுமார் 1 கிலோ மீட்டர் தொலைவில் கொந்தகை செல்லும் பாதையில் இதனோடு தொடர்புடைய ஈமக்காடும் அமைந்துள்ளது. இங்கு பல ஈமத்தாழிகள் எலும்புத் துண்டுகளோடு பல வகை மட்பாண்டங்களுடன் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன.

இவற்றினை அடிப்படையாக வைத்து நீண்ட இடைவெளிக்குப் பிறகு இந்திய தொல்பொருள் ஆய்வுத் துறையால் வைகை நதி பள்ளத்தாக்குப் பகுதியில் இரும்புக் காலம் முதல் பல்வேறு காலகட்டங்களில் ஏற்பட்ட பண்பாட்டு வளர்ச்சி மற்றும் உருமாற்றத்தினை அறிந்துகொள்ளும் வகையில் கீழடியில் சென்ற ஆண்டு (2014 - 2015) விரிவான தொல்லியல் அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது.

பள்ளிச்சந்தை திடலின் கிழக்கு (டுடிஉயடவைல 1) மற்றும் நடுப்பகுதியில் (டுடிஉயடவைல 2) 43 அகழாய்வுக் குழிகள் இடப்பட்டன. இக்குழிகளில் கீழடியின் தொல்லியல் சிறப்பையும் பண்பாட்டு வளர்ச்சியையும் புலப்படுத்தும் வகையில் 2.50 மீட்டர் முதல் 4.00 மீட்டர் ஆழத்திற்கு தொல்லியல் எச்சங்கள் காணப்பட்டன. இவை சுமார் பொ.கா.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் பொ.கா.10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாக கணக்கிடப்பட்டுள்ளன. இங்கு 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழ மன்னன் முதலாம் ராஜராஜனின் செப்புக்காசு முன்பு களஆய்வில் கிடைக்கப்பெற்றதால் அதனடிப்படையில் தோராயக் காலக்கணிப்பு செய்யப்பட்டுள்ளது. கரிமப்பகுப்பாய்வு கணக்கீட்டு முறையின் மூலமாக இவ்விடத்தின் சரியான காலத்தினைக் கணிப்பதற்கு மாதிரிகள் சேகரிக்கப்பட்டுள்ளன.

அகழாய்வுக் குழிகளில் வரலாற்றுத் தொடக்ககாலத்தைச் சார்ந்த தொல்லியல் எச்சங்கள் அதிகளவில் கிடைக்கப்பெற்றன. பொதுவாகத் தமிழகத்தில் இதுகாறும் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளுள் வரலாற்றின் தொடக்ககாலத்தினைச் சேர்ந்த செங்கற் கட்டடங்கள் மிகக் குறைந்த இடங்களில் மட்டுமே கண்டறியப்பட்டுள்ளன. அவ்வகையில் கீழடி அகழாய்வில் பெரிய அளவிலான சுட்ட செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்ட பல சதுர மற்றும் செவ்வக வடிவ கட்டடப் பகுதிகள் காணப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. இக்கட்டுமானங்களோடு பெரிய கூரை ஓடுகள், இரும்பிலான ஆணிகள் மற்றும் தூண் நடுகுழிகள் காணப்படுவது இவற்றின் மேற்பகுதி மரத்திலான சட்டங்களைத் தாங்கி இருந்துள்ளதைச் சுட்டுகின்றது. கட்டடங்களின் தரைப்பகுதி செங்கல் கொண்டு பாவப்பட்டிருந்தது.

மேட்டின் நடுப்பகுதியில் (டுடிஉயடவைல 2) இடப்பெற்ற அகழ்வுக் குழிகளில் சுமார் 10 மீட்டர் நீளம் கொண்ட செங்கல்

தளத்துடன் பக்கவாட்டுச் சுவற்றோடு கூடிய கட்டடமொன்று அகழ்ந்தெடுக்கப்பட்டமை குறிப்பிடத்தக்கதாகும். இதனருகில் வட்டவடிவில் 21 உறைகளைக் கொண்ட சுடுமண் கிணறும் சற்று இடைவெளிவிட்டு மற்றுமொரு நீண்ட கட்டடமொன்றும் வெளிப்படுத்தப்பட்டது. நீரை உள்ளே கொண்டுவர அல்லது வெளியேற்றப் பயன்பட்ட செங்கல் வடிகால்களும் அகழாய்வில் கண்டறியப்பட்டன. இதன் அருகே சற்று ஆழத்தில் மேலும் இரண்டு உறை கிணறுகள் வெளிக்கொணரப்பட்டன. இங்கு காணப்பட்ட பெரும்பாலான கட்டடங்கள் வடக்கு - தெற்காக அமைந்திருந்தமை குறிப்பிடத்தக்க அம்சமாகும். கட்டுமானத்திற்குப் பயன்படுத்தப்பட்ட செங்கற்கள் 32 ஒ 21 ஒ 5, 34 ஒ 22 ஒ 6, 36 ஒ 22 ஒ 5 மற்றும் 38 ஒ 24 ஒ 6 செ.மீ. அளவைக் கொண்டிருந்தன.

கீழடி அகழாய்வில் வரலாற்றின் தொடக்ககாலத்து மக்களின் வாழ்க்கை நிலையை எடுத்தியம்பும் வகையில் பல வகையான தொல்பொருட்கள் கிடைத்துள்ளன. இவற்றுள் கண்ணாடி மற்றும் பல்வகையான அரிய கல்மணிகள், முத்து மணிகள், சுடுமண் மணிகள், காதணிகள், சங்கு வளையல்கள், சுடுமண் பொம்மைகள், தந்தத் தாயக்கட்டை, அம்மி, குழவி, தக்களி, இரும்பிலான கத்தி, ஈட்டிமுனை, செப்புப் பொருட்கள், எலும்பிலான அம்பு முனைகள், சுடுமண் வட்டச் சில்லுகள் போன்றவை அடங்கும்.

வெளிநாடுகளுடன் இவ்விடம் வணிகத் தொடர்பு கொண்டிருந்தமைக்கு சான்றளிக்கும் வகையில் வணிகர்களால் கொண்டு வரப்பட்ட ரூலட் வகை மட்பாண்டத் துண்டுகள் மற்றும் உள்ளூரிலேயே தயாரிக்கப்பட்ட தரம் குறைந்த ரூலட்டட் மட்பாண்டத் துண்டுகளும் கிடைத்துள்ளன. வரலாற்று தொடக்க காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு மட்பாண்ட வகை, வெள்ளை வண்ணம் பூசப்பட்ட கருப்பு சிவப்பு மட்பாண்ட வகை, ரசட் கலவை பூசப்பட்ட மட்பாண்ட வகைகளும் அகழாய்வில் கிடைத்துள்ளன. பானையோடுகளின் மீது காணப்பட்ட பல வகையான குறியீடுகளுடன் அம்பு முனை போன்ற குறியிடு அதிகளவில் காணப்படுகிறது. தனி நபர்களின் பெயருடன் தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்பு கொண்ட மட்பாண்ட ஓடுகளும் இங்கு கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதில் குறிப்பாக யியனை, ஆதன், ஸாதன், திஸன், உதிரன், சுரம போன்ற பெயர்களைச் சுட்டிக் காட்டலாம்.

முதலாம் கட்ட ஆய்வு முடிவுகளின் அடிப்படையில் இரண்டாம் கட்ட அகழாய்வினை (2015 - 2016) மேற்கொள்ள அனுமதியளிக்கப்பட்டு நடப்பாண்டிலும் கீழடியில் விரிவான அகழாய்வு மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இவ்வகழாய்வு இந்திய வரலாற்றிக்குக் குறிப்பாகத் தமிழக வரலாற்றிக்குப் புதிய ஆதாரங்களைத் தரும் என்பதில் ஐயமில்லை. மேலும், தென் தமிழகத்தின் தொல்லியல் நிலையையும் மதுரையின் தொன்மைச் சிறப்பையும் கீழடி அகழாய்வு எடுத்துக்காட்டும் வகையில் அமைந்துள்ளது.

# 80. வேதாரணியம் - யாழ்ப்பாணம் பண்பாட்டு உறவுகள்*

(அறக்கட்டளைச் சொற்பொழிவு)

பேராசிரியர் வ.மகேஸ்வரன்
பேராதனை, இலங்கை

**வேதாரணியம் - ஓர் அறிமுகம்**

சோழநாட்டு சைவத் திருத்தலங்களுள் ஒன்றாக விளங்குவது வேதாரணியேசுவரர் (திருமறைக்காடு) கோவில் ஆகும். காவிரியின் தென்கரைத் தலங்களில் 125ஆவது தலமாக இது விளங்குகிறது. இது மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றாலும் பெருமை பெற்ற தலமாக விளங்குகிறது. நான்முகன், திருமால், இந்திரன் ஆகிய தேவர்கள் இத்தலத்தை வழிபட்டனர் எனத் தொன்மக் கதை மரபுகள் குறிப்பிடுகின்றன. மேலாக, இராவண வதம் முடித்த இராமபிரான் பிரமகத்தித் தோசம் நீங்க வழிபட்ட தலமாகவும் இது கருதப்படுகிறது. மேலும் அகத்தியருக்குத் திருமணக் கோலம் காட்டிய தலமெனவும் தொன்மக் கதைகள் உண்டு.

அம்பிகைக்குரிய 64 சக்தி பீடங்களில் (சுந்தரி பீடம்) ஒன்றாகவும் இது கருதப்படுகின்றது. சப்த விடங்கத் தலங்களில் இரண்டாவது தலமாகவும் விளங்குகிறது. இவ்வாலய இறைவனுடைய பெயர் 'வேதாரணியேசுவரர்' ஆகும். தல விருட்சம் வன்னிமரம். ஆலய தீர்த்தம் மணிகர்ணிகை (குளம்) தீர்த்தம், இவற்றைவிட வேதாமிர்தம் என்ற ஏரியும் வேத நதி என்று கருதப்படுகின்ற கடலும் தீர்த்தங்களாக உள்ளன.

தேவார காலத்தில் வேதாரணியம் மிகச் சிறப்புப் பெற்று விளங்கியது. தலயாத்திரை செய்த சம்பந்தரும் நாவுக்கரசரும் இத்திருத்தலத்தில் வந்து வழிபட்டு அற்புதச் சம்பவங்களை நிகழ்த்தினார்கள். சம்பந்தர் நான்கு திருப்பதிகங்களையும் நாவுக்கரசர் ஐந்து திருப்பதிகங்களையும் இத்தலத்தின் மீது பாடியுள்ளனர். சுந்தரரும் ஒரு திருப்பதிகம் பாடியுள்ளார். சம்பந்தர் கோளறு பதிகத்தையும் இத்திருத்தலத்திலேயே பாடினார் என்று பெரியபுராணம் குறிப்பிடுகிறது. வேதங்களால் பூட்டப்பட்ட திருத்தலக் கதவுகளைத் திறக்கவும் மூடவும் அப்பரும் சம்பந்தரும் பதிகங்கள் பாடினர் என்று பெரியபுராணச் செய்திகள் மூலமும்

---

*கோவிலூர் ஆதீனத் தலைவர் தவத்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் நிறுவியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 15ஆவது சொற்பொழிவு, நாள் : 18.07.2015

அவர்களுடைய தேவாரங்களில் காணப்படுகின்ற அகச்சான்றுகள் வழியும் அறியக் கிடக்கிறது.

வேதங்களால் பூட்டப்பட்ட கதவினைத் திறப்பதற்காக அப்பர்,

"பண்ணின் நேர்மொழியாள் உமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணினா லுமைக்காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே"

என்று தொடங்கும் பதிகத்தைப் பாடி, கதவு திறக்கப் பண்ணினார் எனவும் ஞானசம்பந்தர்,

சதுரம்மறை தான் துதி செய்து வணங்கும்
மதுரம்பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தா
இதுநன்கிறை வைத்தருள் செய்க வெனக்குன்
கதவந் திருக் காப்புக் கொள்ளுங் கருத்தாலே

என்று தொடங்கும் பதிகத்தைப் பாடி, கதவு மூடச் செய்தார் என்னும் பெரியபுராணம் குறிப்பிடுகிறது.

இவற்றிக்கும் மேலாக, பரஞ்சோதி முனிவர் இயற்றிய 'வேதாரணிய புராணம்', அகோர தேவரால் அருளிச் செய்யப்பட்ட 'திருமறைக்காட்டுப் புராணம்', யாழ்ப்பாணம் சின்னத்தம்பிப் புலவர் இயற்றிய 'மறைசை அந்தாதி' ஆகியவை இந்தத் தலத்தின்மீது எழுந்த பிரபந்தங்களாகக் காணப்படுகின்றன.

வரலாற்றுக் காலத்தில் வேதாரணியம்

வரலாற்றுக் காலகட்டங்களில் குறிப்பாகச் சோழப் பெருமன்னர் காலத்தில் இவ்வாலயம் அவர்களுடைய கவனத்திற்கு உள்ளாகி இருக்கிறது. ஆரம்ப காலச் சோழர்களின் செல்வாக்கு இத்தலத்தில் அதிகமாக நிலவியதைக் கல்வெட்டுச் சான்றுகளின் வழி அறியலாம். மேலும், சோழ மன்னர்களான மதுரை கொண்ட கோப்பரகேசரி வர்மன் (பராந்தகன்), முதலாம் இராசராசன், மூன்றாம் குலோத்துங்க சோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராஜேந்திர சோழ தேவன், திருபுவனச் சக்கரவர்த்தி இராசராச தேவன் ஆகியோருடைய கல்வெட்டுக்களும் விசயநகர மன்னர்களான வீரப்பிரதாப மகாராஜா, தேவராஜ மகாராஜா ஆகியோருடைய கல்வெட்டுக்களும் மராத்திய

மன்னர்களான பிரதாப சிங் மகாராஜா, துளசா மகாராஜா ஆகியோருடைய கல்வெட்டுக்களும் இத்தலத்தில் காணப்படுகின்றன.

கல்வெட்டுக்களில் கோயிலின் பெயர் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது :

உம்பள நாட்டு பெருந்தேவதானம் திருமறைக்காடுடைய மகாதேவர் - தெ.க.தொகு. 17, இல. 464.

திருமறைக்காடுடைய மகாதேவர்- தெ.க.தொ. 17, இல. 470.

உம்பள நாட்டு குன்றூர் நாட்டு உடையார் திருமறைக்காடுடையார் - தெ.க.தொகு. 17, இல. 445.

தரணி முழுதுடைய வளநாட்டு குன்றூர் நாட்டு உடையார் திருமறைக்காடுடையார் - தெ.க.தொகு. 17, இல.453.

திருமறைக்காடு கோவில் - தெ.க.தொ. 17, இல.431.

அண்மைக் காலத்தில் இந்து அறநிலையத் துறையின் மேற்பார்வையுடன் வரணி ஆதீனத்தின் நிருவாகத்துடனும் இவ்வாலயம் இயங்கி வருகிறது.

வேதாரணியத்தில் இருந்து பத்துக் கிலோ மீட்டர் தொலைவில் உள்ள 'கோடியக்காடு' எனும் தலம் மிகவும் முக்கியத்துவம் உடையதாகக் காணப்படுகிறது. இத்தலத்துடன் தொன்மக் கதை மரபுகளும் புராண, இதிகாசக் கதை மரபுகளும் இணைந்துள்ளன. இந்தக் கோவில் வேதாரணியம் கோவிலுடன் இணைக் கோவிலாக விளங்குகிறது. இவற்றுடன் சுமார் பத்துத் திருத்தலங்கள் இக்கோவிலைச் சுற்றிக் காணப்படுகின்றன. சித்திரை மாதத்தில் திருக்கல்யாணத் திருவிழாவும் மாசி மாதத்தில் மாசிமகப் பெருவிழாவும், ஆடி மாதத்தில் ஆடிப்பூரத் திருவிழாவும் ஆவணி மாதத்தில் விநாயக சதுர்த்தித் திருவிழாவும் ஐப்பசி மாதத்தில் கந்தசஷ்டிப் பெருவிழாவும் மிகச் சிறப்பாக இக்கோவிலில் கொண்டாடப்படுகின்றன.

யாழ்ப்பாணம் - அறிமுகம்

யாழ்ப்பாணக் குடாநாடு தொன்மையான வரலாற்றைக் கொண்டது. மூன்று பக்கத்தாலும் கடலால் சூழப்பட்டு இலங்கையின் தலைப்பகுதியில் அமைந்துள்ள நிலக்குறைவாக இது காணப்படுகிறது. இதனைச் சுற்றி சப்த தீவுகள் என்று சொல்லப்படுகின்ற ஏழு தீவுக் கூட்டங்களும் காணப்படுகின்றன.

இந்தப் பகுதி வடமராட்சி, தென்மராட்சி, தீவகம், வலிகாமம் ஆகிய நான்கு நிருவாகப் பகுதிகளுள் அடங்கியுள்ளது.

இங்கே தமிழ் மக்கள் செறிந்து வாழ்கின்றனர். பெரும்பாலும் சைவ சம்பந்தவர்களாகவே விளங்குகிறார்கள். வரலாற்றுப் புகழ்மிக்க நல்லூர் கந்தசுவாமி கோவில், மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவில், செல்வச் சந்நிதி கந்தசுவாமி கோவில், நைனா தீவு நாகபூசணி அம்மன் கோவில், கீரிமலை நகுலேசுவரர் கோவில் மற்றும் வல்லிபுரம் ஆழ்வார் கோவில், பொன்னாலை வரதராசப் பெருமாள் கோவில், காரைநகர் ஈழத்துச் சிதம்பரம் ஆகியன பிரதானமான வழிபாட்டுத் தலங்களாக விளங்குகின்றன. இவற்றையும்விட ஆயிரத்துக்கும் மேற்பட்ட சிறுகோவில்கள் இங்கு அமைந்துள்ளன. போர்த்துக்கேயருடைய காலத்தின் பின்பு கிறித்தவமும் இங்கு பரவியுள்ளது. சில பகுதிகளில் இசுலாமியருடைய குடியேற்றங்களும் நிகழ்ந்துள்ளன. பௌத்த பண்பாட்டைப் பிரதிபலிக்கும் வரலாற்று எச்சங்களும் இங்கு காணப்படுகின்றன. எனினும், 'யாழ்ப்பாணம்' என்ற சொல் சைவத் தமிழ்ப் பாரம்பரியம் மிக்க ஒரு பிராந்தியத்தை அடையாளப்படுத்துவதாகவே அமையும்.

யாழ் குடாநாட்டில் சனவேற்றம் பற்றிய கருத்து நிலைகள் நீண்ட காலமாக பழமரபுக் கதைகளூடாகவே விளக்கப்பட்டு வந்தன. குறிப்பாக, 'யாழ்ப்பாணன்' என்கிற பாணர் சமூகத்தைச் சேர்ந்த ஒருவனுக்கு அரசனால் வழங்கப்பட்ட மணல் திடல் நிலமே பிற்காலத்தில் யாழ்ப்பாணம் என்று வழங்கியது என்று பழமரபுக்கதை குறிப்பிடுகிறது. ஆயின், அண்மைக்கால ஆய்வுகள் யாழ்ப்பாணத்தில் பெருங்கற்படைக் காலத்திலிருந்து சனவேற்றம் நிகழ்ந்துள்ளமையை ஆதாரத்துடன் நிரூபிக்கின்றன. குறிப்பாக, ஆனைக்கோட்டையில் பேராசிரியர் கா.இந்திரபாலா நிகழ்த்திய அகழாய்வு முடிவுகளும் கலாநிதி ரகுபதி நிகழ்த்திய மேற்பரப்பு ஆய்வு முடிவுகளும் இதனை உறுதி செய்கின்றன. எனவே, நீண்ட காலமாகவே யாழ்ப்பாணக் குடாநாட்டில் சனவேற்றம் நிகழ்ந்துள்ளமையை அறியமுடிகிறது. தொடர்ந்து பதினைந்தாம் நூற்றாண்டில் ஆரியச் சக்கரவர்த்திகள் என்போர் குடாநாட்டை ஆட்சி செய்தனர். இவர்கள் இராமநாதபுரத்தை ஆண்ட சேது மன்னர்களுடன் நட்புறவு கொண்டிருந்தனர். இதனால் யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கும் தமிழகத்துக்கும் இடையேயான உறவு வலுப்பெற்றது.

1505-இன் பின்பு இலங்கையின் கரையோரப் பகுதிகள் போர்த்துக்கேயரின் வசமானபோது யாழ்ப்பாணக் குடாநாடும்

அவர்களது ஆட்சிக்குட்பட்டது. தொடர்ந்து ஒல்லாந்தர், ஆங்கிலேயர் ஆகியோருடைய காலகட்டங்களிலும் அதாவது இலங்கை சுதந்திரம் அடையும் வரை (1948) யாழ்ப்பாணக் குடாநாடும் அந்நியர் ஆட்சிக்குட்பட்டது.

யாழ்ப்பாணத்திற்கும் வேதாரணியத்திற்குமான இடையுறவு

மேற்படி வரலாற்றுத் தகவல்களை அடிப்படையாகக் கொண்டு நோக்குகின்றபோது, தமிழகத்திற்கும் யாழ்ப்பாணத்துக்கும் இடையிலான இடையுறவு நீண்ட காலமாகவே நிலைத்துள்ளமையை அவதானிக்கலாம். இன்றைய காலத்தைப்போல நிர்வாகக் கெடுபிடிகள் எதுவுமற்ற நிலையில் புவியியல் அண்மை, மொழி ரீதியான தொடர்பு, கலாசார உறவுகள் ஆகியவை இந்த இரண்டு பிராந்தியங்களையும் இணைத்தன எனலாம்.

இந்த வகையில் கொள்ளல் - கொடுத்தல் முறைமை இவ்விரு பிராந்தியங்களுக்கிடையில் நிகழ்ந்துள்ளன. குறிப்பாக வேதாரணியம், கோடியக்காடு ஆகிய இரண்டு இடங்களுக்கும் யாழ்ப்பாணத்துக்கும் இடையிலான இடையுறவு அதிகரித்துக் காணப்பட்டது. கோடியக்காட்டிற்கும் யாழ்ப்பாணம் மாதகல்துறைக்கும் (ஜம்புகோளப் பட்டினம்) இடையே மிகக் குறைந்த அளவிலான கடல் தூரமே காணப்பட்டது. அதனால் மரக்கலங்கள் அடிக்கடி வந்துபோயின. கோடியக்கரையில் இருந்து மாதகல் துறையின் ஊடாக யாழ்ப்பாணத்துக்கு உணவுப் பண்டங்களும் பிற அத்தியாவசியப் பொருட்களும் இறக்குமதி செய்யப்பட்டுள்ளன. மாதகல்துறை ஜம்புகோளப் பட்டிணம் என்று வரலாற்று ஆசிரியர்களால அறியப்பட்டுள்ளது. சங்கமித்திரை இத்துறையினூடாகவே வெள்ளரக்கு மரக்கிளையைக் கொண்டுவந்தாள் என்பது பௌத்த மத ஐதீகங்கள் ஆகும். இவைதவிர காரைநகர், ஊர்காவற்றுறை, பருத்தித்துறை, வல்வெட்டித்துறை முதலான துறைகளினூடாக தமிழ்நாட்டின் கோடியக்கரையில் இருந்து தனுசுகோடி வரை மரக்கலங்கள் ஊடாடிய செய்திகளை வரலாற்றின் ஊடாகவும் வாய்மொழிப் பாரம்பரியத்தின் ஊடாகவும் அறிய முடிகிறது.

வேதாரணியத்துக்கும் யாழ்ப்பாணத்துக்கும் இடையிலான தொடர்புகள் சில, செவிவழிச் செய்திகளாக அறியப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு :

நெடுந்தீவிலிருந்து வேதாரணியத்திற்கு அபிசேகத்துக்குப் பால் அனுப்பப்பட்ட செய்தி.

வேதாரணியத்தில் இருந்து மாதகல் துறையினூடாக யாழ்ப்பாணத்துக்கு வண்டிகளுக்கு மாடுகளும் உழவு மாடுகளும் இறக்குமதி செய்யப்பட்டமை.

யாழ்ப்பாண மாவட்டத்தில் ஆட்பெயர்கள் (வேதாவனம், வேதவன முதலி, மறைக்காடர்).

ஊர்ப் பெயர்கள் இடம் பெற்றமை (வேதாரணியம், வேதாரணியம் சதுக்கம்).

யாழ்ப்பாணத்திலிருந்து வேதாரணியத்துக்கு புகையிலைச் செய்கை அறிமுகமானமை.

திருமண உறவுகள்.

வேதாரணியத்தில் யாழ்ப்பாணத்தார் தெரு.

மேற்குறித்த செய்திகளில் திருமண உறவுகள் என்பவை அடிக்கடி நிகழ்ந்துள்ளமையை அறியமுடிகிறது. வேதாரணியத்தைச் சேர்ந்த வீரசைவர்கள் யாழ்ப்பாணத்தில் வரணி, கரணவாய் முதலிய இடங்களில் திருமண உறவுகளைக் கொண்டிருந்தனர் என்பதைக் களப்பணியின் ஊடாக அறியமுடிந்தது. மேலும், வேதாரணியத்தில் 'யாழ்ப்பாணத்தார் தெரு' என்பது இன்றும் ஓர் அடையாளமாகக் காணப்படுகிறது. ஒரு காலத்தில் யாழ்ப்பாணத்தவர்கள் வாழ்ந்த தெருவாகையால் அது இன்றும் யாழ்ப்பாணத்தார் தெரு என்று அறியப்படுகிறது. அந்தத் தெருவில் வாழும் முதியவர்கள் இன்றும் யாழ்ப்பாணம் பற்றிய தமது பழைய நினைவுகளுடன் வாழ்கின்றனர் என்பதையும் அவர்கள் வேதாரணியேசுவரர் கோவிலுக்கு நன்கொடைகள் வழங்கியபோது யாழ்ப்பாணத்துத் தெருவாசிகள் என்ற அடையாளத்துடன் வழங்கியதையும் களப்பணி மூலமாகவும் கோவிலிலுள்ள கல்வெட்டுக்கள் மூலமாகவும் அறியமுடிந்தது.

இலக்கிய வழி உறவு

வேதாரணியத்திற்கும் யாழ்ப்பாணத்திற்கும் இடையே சமய ரீதியான உறவு ஒன்று நிகழ்ந்ததை இலக்கியத்தின் வழி அறியமுடிகின்றது. யாழ்ப்பாணத்தார் தமிழகத்தில் இரண்டு சிவாலயங்கள் மீது மிகுந்த பத்தி கொண்டிருந்தனர். அவற்றில் ஒன்று தில்லையம்பலம், மற்றையது வேதாரணியம். தில்லையம்பலத்திற்கு

யாழ்ப்பாணப் பிராந்தியத்தில் பல நிலங்கள் கொடையாக வழங்கப்பட்ட செய்தியை வாய்மொழி மூலமாக அறியமுடிகிறது. இன்றும் ஆருத்திரா தரிசனம் காண்பதற்காக யாழ்ப்பாணத்தவர்கள் சிதம்பரம் நோக்கிச் செல்வது அவதானிக்கத்தக்க ஒன்று. அதுபோலவே வேதாரணியேசுவரர் மீதும் அவர்கள் பற்றுக்கொண்டிருந்தார்கள். அந்தப் பற்றின் வழி அவர்கள் கோவில் பிரபந்தங்களை யாத்தார்கள். குறிப்பாக, ஒல்லாந்தர் காலத்தில் வாழ்ந்த நல்லூர் வில்லவராய முதலியின் மகன் சின்னத்தம்பிப் புலவர் 'மறைசை அந்தாதி' என்ற பிரபந்தம் ஒன்றைப் பாடியுள்ளார். அதற்கு யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த ஸ்ரீமத் வரதராசகவிராயர் சிறப்புப் பாயிரம் ஒன்று பாடியுள்ளார்.

செந்தாதி யன்மணிப் பூண்புலி யூரற்குச் சேர்ந்தளித்த
சித்தாத்தி யானஞ்செய் வில்லவ ராசன் றிருப்புதல்வன்
நந்தாவ ளந்திகழ் நல்லைச்சின் னத்தம்பி நாவலன்சீர்
அந்தாதி மாலையை வேதாட வீசற் கணிந்தனனே

என்று அந்தப் பாயிரம் குறிப்பிடுகின்றது.

மறைசை அந்தாதியின் காப்புச் செய்யுள்,

அந்தமு மாதியு மில்லா மறைசையி லத்தர் தம்மேற்
செந்தமிழ் நூற்பொரு ளந்தாதி பாடச் சிலம்பிலன்னை
யித்தன வாணுதற் சுந்தரி யம்பிகை யீன்றெடுத்த
சுந்தர வீரகத் திச்சே தகன்றாட் டுணைதுணையே

என்றவாறு அமைகிறது. அதில் இறுதி அடியில் 'சுந்தர வீரகத்திச் சேதகன்' என்ற தொடர் மிகவும் முக்கியம் வாய்ந்ததாகும். அது வேதாரணியேசுவரத்தில் வீற்றிருக்கின்ற வீரகத்தி விநாயகரைக் குறிப்பதாக அமைந்துள்ளது. இராமபிரான் இராவண சம்காரம் செய்ததன் பின் அவரைத் தொடர்ந்த பிரமகத்தித் தோசத்தை இந்த வீரகத்தி விநாயகரே தீர்த்துவைத்தார் என்பது தலவரலாறு. அதனை மனங்கொண்டே வீரகத்தி விநாயகரைச் சின்னத்தம்பிப் புலவர் பாடியுள்ளார் எனலாம். வித்துவச் செழுமையும் கவிதா ஆற்றலும் பக்தியும் கொண்டதாக மறைசை அந்தாதி விளங்குகிறது.

வானப் பிறையையும் வாடைப் புலியையு மையல்செய்யுந்
தேனப் பிறையையுந் தென்றலை யுங்கண்டு சில்லரிக்கண்
மீனப் பிறைக்கு மடமானை மேவிலர் வேடனிடு

மூனப் பிறைச்சிக் குகந்தார் மறைசை யுகந்தவரே

என்ற பாடல் இதற்குச் சிறந்த உதாரணமாகும்.

வேதாரணிய சைவக்குருக்கள்மார் வழித் தொடர்புகள்

வேதாரணியத்துக்கும் யாழ்ப்பாணத்துக்கும் இடையிலான தொடர்பை சைவக்குருக்கள்மார் பாரம்பரியத்தின் ஊடாகவும் உறுதிப்படுத்தலாம். யாழ்ப்பாணம் மாவட்டத்தில் இறந்தவர்களுக்கு அமரக் கிரியைகள் செய்து தகனம் செய்யும் முறைமை பரவலானபோது, அமரக் கிரியைகளை நிகழ்த்துவதற்காக வேதாரணியம் குருக்கள்மார் இலங்கைக்குப் புலம் பெயர்ந்தனர். யாழ்ப்பாணத்தில் இணுவில், புன்னாலைக்கட்டுவன், திருநெல்வேலி, கரணவாய், வரணி முதலிய இடங்களிலும் மட்டக்களப்பு மாவட்டத்தில் குருக்கள்மடம், திருக்கோயில், தம்பட்டை ஆகிய இடங்களிலும் அவர்கள் பரந்து வாழ்கின்றனர். அவர்கள் திருமண உறவுவழி இலங்கையில் நிரந்தரமாகக் குடியேறினர். உதாரணமாக இணுவில் என்ற ஊரில் வேதாரணியத்தைச் சேர்ந்த வீரசைவக் குருக்கள் அமரக் கிரியைகள் நிகழ்த்துவதற்காகக் குடியமர்த்தப்பட்டார். பின்னர் அவர் இலங்கையில் திருமணம் முடித்துக்கொண்டார். இணுவிலையே தனது நிரந்தர வாழிடமாக அமைத்துக்கொண்டார். அவரது வழித்தோன்றல்கள் இன்றும் அமரக்கிரியைகள் நிகழ்த்துவதற்காக இணுவலையும் அதனைச் சார்ந்த ஊர்களிலும் பரந்து வாழ்கிறார்கள். மேலும், வரணி என்ற இடத்தில் காணப்படுகின்ற ‘குருக்கள் குடியிருப்பு’ என்ற பகுதி முற்றுமுழுதாகவே வீரசைவர்களுடைய குடியிருப்பாகவே காணப்படுகிறது. கரணவாய் என்ற இடத்தில் அவர்கள் நிரந்தரமாயும் சகல வளங்களுடனும் வாழ்கின்றனர். அவர்கள் அமைத்த பாடசாலை ‘வேதாரணியம் பாடசாலை’ என்று இன்றும் அழைக்கப்படுகிறது. எனவே, யாழ்ப்பாணத்தில் வேதாரணிய சமூகம் ஒன்று அமைய வேதாரணியத்தில் யாழ்ப்பாணச் சமூகம் ஒன்று அமைந்ததை இத்தொடர்புகளின் வழி அறியமுடிகிறது.

**கல்வெட்டுச் சான்றுகளின் வழி தொடர்புகள்**

இனி, வேதாரணியேசுவரர் கோயிலுக்கும் யாழ்ப்பாண சமூகத்தாருக்கும் இடையேயான தொடர்பைக் கல்வெட்டுச் சான்றுகளின் வழியும் நிறுவமுடிகிறது. ஆய்வாளர் களப்பணி செய்தபோது சுமார் நூற்றுக்கும் மேற்பட்ட யாழ்ப்பாணத்தார் கல்வெட்டுக்களை அவதானித்துள்ளார். அவற்றில் சிலவற்றை

ஆவணம் இதழிலும் பதிவு செய்துள்ளார். அவை கோவிலினுடைய புனருத்தாரணத்திற்கான கொடை கல்வெட்டுக்களாக அமைந்துள்ளன. அவற்றின் உரு மாதிரி பின்வருமாறு :

இடம் : கிழக்குப் புற கட்டைக்கோபுர வாசல்

01. வரணி சொ
ளங்கச செ
னாதார்ய மு
தலியர் பெ
ண் சாதி
கதிரியார்

02. வரணி மாணி
க்கவாசகபண
டாரதின்பிள்
ளை சிவப்பிரகா
ச பண்டாரம்

03. வரணி சொ
ளங்கச் செ
னாதராய மு
தலியார் ம
கன் விரகத்
தியார்

மேற்குறித்த கல்வெட்டுக்களை அடிப்படையாகக் கொண்டு பார்க்கின்றபோது பின்வரும் தகவல்களை அறியமுடிகிறது.

கொடையாளி - சோளங்கச் சேனாதிராய முதலியார் பெண் சாதி கதிரியார் (முதலியார் என்பது பிரித்தானிய அரசின் கீழ் கடமையாற்றும் ஒருவருடைய பதவி நிலைப்பெயர்).

மாணிக்கவாசக பண்டாரத்தின் பிள்ளை (மகன்) சிவப்பிரகாச பண்டாரம் (பண்டாரம் என்ற சொல் யாழ்ப்பாண

மாவட்டத்தில் வீரசைவ மரபினரைக் குறிக்கும்). சோளங்கச் சேனாதிராய முதலியார் மகன் வீரகத்தியார்.

மேலைக்கோபுரம் (வலது பக்கம்)

03. சுழிபுரம் - நடுநாயக முதலியார்.

04. காரைதீவு - சிதம்பரநாத முதலியார்.

05. வரணி - மாணிக்கச் சித்தர் சின்னவன், சேனாதிராய முதலியார் சிதம்பரன், சிதம்பரனார் பெண்சாதி வள்ளி நாச்சி.

06. கைக்குளர் அம்பலவாணர் - கைக்குளர் எனும் சாதிப் பிரிவினர் யாழ்ப்பாணத்தில் வசிக்கின்றனர்.

07. வரணி - மளவராய வல்லியார் - மளவராயர் என்பது இக்காலத்தில் சாதி சார்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறது.

08. சுழிபுரம் - கதிர்காமர் பெண் சாதி வேதநாயகி, முதலியா(ர்) கந்தப்பர்.

09. மளாய் - குணாதன முதலியார் குமரப் பெருமாள், சின்னாத்தை முதலிக்குட்டி.

10. பலாலி - மருதர்.

11. மண்டைவேலி - குளந்தையார் மகள் நளத்தியார்.

12. வரணி - நிர்ச்சிங்க வளதரையர் - வளதரையர் அரசியல் அதிகாரத்துடன் தொடர்புடைய பெயர் ஆயின் 19ஆம் நூற்றாண்டில் இவ்வாறான அதிகாரிகள் இருந்திருக்கவில்லை.

13. வரணி - பொடுங்கர் சித்மபர(ர்), பொடுங்கர் அம்பலவர்.

14. மந்துவில் - சிதம்பர உடையாரும் பெண் சாதியும் (மேலைக் கோபுரம் இடது பக்கம்).

15. சுழிபுரம் - சிதம்பரநாதரும் பெண் சாதியும்.

16. மாதகல் - பெரியய்யனான உடையார் - உடையார் ஆங்கில அரசின் கீழ் கடமை புரிந்த கிராமத் தலைவர்.

17. முகாவில் - தியாகர் சிதம்பர உடையார் பனங்காமன் வன்னியம் குலசேகர பண்ணவன் (பனங்காமம் என்பது வன்னிப் பெருநிலப் பரப்பின் பிரிவு இது யாழ் மாவட்டத்துள் அடங்காதது).

18. திருநெல்வேலி - கைக்குளர் நிலக்குட பூதரும் அவர் பெண்சாதி மயிலாத்தை.

19. வரணி - வரணி இராசிங்க மாபான முதலியார் - சிதம்பரர் பெண் சாதி பொடுங்காத்தை - மாப்பாண முதலி என்பதும் யாழ்ப்பாண இராச்சிய காலத்திலிருந்து வழங்கி வரும் அரசியல் அதிகார வம்சாவழியினரைக் குறிக்கும் பெயர்.

20. கைக்குளர் சித்திராண்டார் மகன் ஆனந்தன்.

21. கரணவாய் - உடையார் மகன் குள நகையர்.

22. உடுப்பட்டி - குள நகையார் மகன் தொ...ன்.

23. கைதடி - சந்திர சேகேர முதலியார் மடந்தை பாகர் பெண்சாதி குள நகையர்.

24. நவிண்டில் - மயில் நிச்சிங்கர்.

25. உடுப்பிட்டி - மு.க.கா. சுந்தர்.

26. துன்னாலை - சிதம்பர உடையார் புத்திரன் அளியாரும் சுந்தர் மகள் சின்னாத்தையும்.

27. இடைக்காடு - வேலாயுதன்.

28. நல்லூர் - செயம் மருதாத்தை மகள் நழவாத்தை.

29. மூளாய் - குன்றன் முதலியா(ர்) வெள்ளையர்.

30. மந்துவில் - மயில்வாகன முதலியார் பெண்சாதி பெருமாத்தை.

31. மந்துவில் - இலங்கை அதிகார முதலியார்.

32. கரணவாய் - மாப்பாணர் அய்யன், பெருமாள் பெண்சாதி நாச்சிப்பிள்ளை.

இம், அம்மன் சந்நிதி பின்புறம்

நல்லூர் - தட்டார் பூதர் பெண்சாதி (தட்டார் என்பது பொற்கொல்லரை மட்டும் குறிப்பிடுகிறது).

வரணி ஆதீனமும் வேதாரணியமும்

வேதாரணியேசுவரர் கோவிலை நீண்டகாலமாக வரணி ஆதீனம் என்ற மடாலயம் நிருவகித்து வருகிறது. போர்த்துக்கேயர் காலத்தில் சைவ நடைமுறைகளுக்கெதிராக கட்டவிழ்த்து விடப்பட்ட

அராஜகத்தால் வரணியைச் சேர்ந்த குருக்கள் குடியிருப்பு என்ற பகுதியில் வாழ்ந்த தில்லைநாதர் என்பவர் கட்டுமரத்தில் பயணம் செய்து கோடியக்கரைத் துறைமுகம் வந்து வேதாரணியத்தில் தங்கினார் என்பர். அவர் வேதாரணியத்துக்கு பொ.ஆ.1621ஆம் ஆண்டு சென்றார் என்று ஒரு சாராரும் 1552இல் சென்றார் என பிறிதொரு சாராரும் கூறுவர். இந்த தில்லைநாத தம்பிரானுடைய கோயில் தொண்டுகள் பற்றி பல்வேறு கர்ண பரம்பரைக் கதைகள் நிலவுகின்றன. தஞ்சாவூரை ஆண்ட முதலாம் சரபோஜி இவரிடம் 49 கிராமங்களையும் 2400 ஏக்கர் விஸ்திரமான உப்பளத்தையும் கோயிலுக்கு நன்கொடையாக வழங்கி, அதனைப் பரிபாலிக்கும் பொறுப்பை இவரிடமே கையளித்தார் என்பர். தில்லைநாதத் தம்பிரான் வரணி என்ற ஊரைச் சேர்ந்தவராகையால் அவருடைய ஆதீனம் 'வரணி ஆதீனம்' என்று அழைக்கப்பட்டது.

இக்காலத்தில் யாழ்ப்பாணத்தவர்கள் வரணி, நாகர்கோவில், கரவெட்டி முதலிய இடங்களில் இருந்து வல்வெட்டித்துறை பருத்தித்துறை ஆகிய துறைமுகங்கள் ஊடாகத் தரிசனம் பெறச் சென்றார்கள். இவர்களுடைய காலத்தில் அபிசேகக் கட்டளை மடம், சோமவார மடம், வெள்ளிக்கிழமை மடம், மாணிக்கவாசகர் மடம், ஆதிரை மடம், பிரதோச மடம், கைலாசநாதர் மடம், குருபூசை மடம், பசு மடம், சங்கீத மடம் ஆகியவை அமைக்கப்பட்டன என்பர். அதுபோலவே 'வரணி மடம்' என்ற ஒரு தனியான மடமும் அமைக்கப்பட்டது. தில்லையில் கூட தில்லைநாத தம்பிரான் 'வரணி மடம்' என்ற பெயரில் மடம் அமைத்ததாகக் குறிப்பிடுவர்.

தில்லைநாத தம்பிரான் சமாதியடைய, அவருக்குப் பின்பு, 19-க்கும் மேற்பட்டோர் இந்த வரணி ஆதீனத்தினுடைய பண்டாரச் சந்நிதிகளாக நியமனம் பெற்றார்கள். இந்த வரணி ஆதீனத்தைச் சேர்ந்தவர்கள் யாழ்ப்பாணத்தில் கரணவாய் என்ற இடத்திலும் வாழ்ந்தார்கள். இதனால் தற்போது இது 'கரணவாய் வரணி ஆதீனம்' என்றும் அழைக்கப்படுகிறது. இந்த ஆதீனத்திற்குரிய ஆதீன கர்த்தாவை யாழ்ப்பாணம் கரணவாயில் உள்ள ஆதீனசபை கூடி, வாக்கெடுப்பு நடாத்தித் தேர்ந்தெடுத்து அவருக்கு நியமன உத்தரவு வழங்கும்படி தஞ்சாவூரிலுள்ள அறநிலையத்துறை ஆணையாளருக்குக் கடிதம் அனுப்புவார்கள். அதனைத் தொடர்ந்து நியமன உத்தரவு பண்டாரச் சந்நிதிக்கு வழங்கப்படும். இந்த மரபின்படி இப்பொழுது வரணி ஆதீனத்தினுடைய ஆதீன கர்த்தாவாக இருப்பவர் செவ்வந்திநாத பண்டார சந்நிதிகள் ஆவார்.

இவர் பல்வேறு நெருக்குதல்களுக்கு இடையில் அந்த ஆதீனத்தை நடத்தி வருவதோடு, கோயில் காரியங்களில் அறங்காவலராகவும் பணியாற்றி வருகிறார்.

1913-இல் வடபாதி மங்கலத்தில் வாழ்ந்த தில்லைநாதத் தம்பிரானின் வழிவந்தோர் வேதாரணியத்தின் உரிமை தொடர்பாக வழக்குத் தொடுத்தனர். இவ்வழக்கில் வரணியைச் சேர்ந்த பண்டாரச் சந்நிதிகளுக்கே வேதாரணியம் உரிமை எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது. மீண்டும் 1919-இல் வடபாதி மங்கலத்தைச் சேர்ந்த திரு.சோமசுந்தர முதலியார், இராசுப்ப முதலியார் என்பவர்கள் வழக்குத் தொடர்ந்தனர். இந்த வழக்கில் ஆதீனத்தார்க்குச் சார்பாக திரு சேர்.பொன். இராமநாதன் வாதாடினார். 1923-இல் வேதாரணியம் வரணி ஆதீனத்தார்க்கே உரித்து எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது. 1949-இல் இந்து அறநிலையச் சட்டம் பிரிவு 65-இன் கீழ் பரம்பரை தர்ம கர்த்தாவின் அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் கட்டுப்படுத்தியது. இதனால் நிருவாக அதிகாரி ஒருவர் அரசினால் நியமிக்கப்பட்டார்.

1953-இல் மீண்டும் பரம்பரைத் தர்மகர்த்தா, உரிமை வரணி ஆதீனத்துக்கே வழங்கப்பட்டது. இந்தியக் குடியுரிமை இல்லாதவர்கள், இந்துமத அறக்கட்டளையில் இருக்கக்கூடாது என்ற திருத்தச் சட்டம் 1994-இல் உருவாக்கப்பட்டது. இதனால் வரணி ஆதீன கர்த்தா அறங்காவலராக இருக்க வேண்டிய தகுதியை இழக்க வேண்டி ஏற்பட்டது. இதனை எதிர்த்து செவ்வந்திநாத பண்டாரச் சந்நிதிகள் 1994-இல் வழக்குத் தொடர்ந்தார். 2005-இல் இந்திய உயர்நீதிமன்ற நீதிபதி கே.பி.சிவசுப்பிரமணியன் இந்தியக் குடியுரிமை அல்லாதவர் இந்துமத அறக்கட்டளையில் உறுப்பினராக இருக்க முடியாது என்று அரசு கொண்டுவந்த திருத்தச் சட்டத்தை இரத்துச் செய்து தீர்ப்புக் கூறினார்.

இதுதவிர வேறு வகைகளிலும் வரணி ஆதீனத்துக்கான நெருக்கடிகள் இருந்துகொண்டே வருகின்றன. எனினும், அந்த ஆலயத்துடன் கொண்ட தொடர்பை நிலைநிறுத்துவதற்காக வரணி ஆதீன கர்த்தா செவ்வந்திநாத பண்டாரச் சந்நிதிகள் போராடி வருகின்றமையை இங்கே குறிப்பிட வேண்டும்.

வரணி ஆதீனத்தை சேர்ந்த சைவக் குருமார்களின் குடும்பத்தில் இருபத்தொரு வயதுக்கு மேற்பட்டவர்கள் ஒன்றுகூடி தங்களுக்குள் ஒருவரை திருக்கோவிலின் அறங்காவலராக தேர்ந்தெடுத்து வேதாரணியம் அனுப்பி வைக்கிறார்கள். அந்த அறங்காவலர்

வேதாரணியத்தில் தங்கியிருந்து திருக்கோவிலைப் பரிபாலனம் செய்வது வழக்கமாக இருந்து வருகிறது. வரணி ஆதீனத்தின் பத்தொன்பதாவது வாரிசாக 1966-ஆம் ஆண்டு வேதாரணியம் கதிர்காம பண்டாரச் சந்நிதி நியமிக்கப்பட்டார். அவர் 1997-இல் மரணமடைய அவரைத் தொடர்ந்து அவரது வாரிசாக செவ்வந்திநாத பண்டாரச் சந்நிதிகள் நியமிக்கப்பட்டார்.

இதே நேரத்தில் குமாரசாமி பண்டாரச் சந்நிதி என்பரையும் வரணி கரணவாய் ஆதீனம் பரிந்துரை செய்தது. இதற்காகவும் செவ்வந்திநாத பண்டாரச் சந்நிதிகள் வழக்காடினார். இறுதியாக 1991-ஆம் ஆண்டு இவ்வழக்கைப் பரிசீலனை செய்த உயர்நீதிமன்ற நீதிபதி எஸ்.இராமலிங்கம் செவ்வந்திநாத பண்டாரச் சந்நிதிகளை மீண்டும் வரணி ஆதீனத்தின் அறங்காவலராக அங்கீகாரம் செய்தது. இன்றுவரை செவ்வந்திநாத பண்டாரச் சந்நிதிகளே வரணி ஆதீனத்தின் ஆதீன கர்த்தாவாகவும் வேதாரணிய ஆலயத்தின் தர்மகர்த்தாவாகவும் செயற்பட்டு வருகிறார்.

**முடிவுரை**

மேற்குறித்த தகவல்களை அடிப்படையாகக் கொண்டு தொகுத்து நோக்குகின்றபோது தமிழ்நாட்டுக்கும் யாழ்ப்பாணத்திற்கும் இடையேயான உறவு பிரதேசம், மொழி, பண்பாடு ஆகிய மூன்று தளங்களில் நிகழ்ந்துள்ளமை தெரியவருகிறது. குறிப்பாக, யாழ்ப்பாணத்திற்கும் வேதாரணியத்திற்கும் இடையேயான உறவு நீண்ட காலமாக நிலைத்திருந்தது என்பதை செவிவழிச் செய்திகள் ஊடாகவும் வரலாற்றுத் தகவல்கள் ஊடாகவும் இலக்கியங்கள் ஊடாகவும் அறியமுடிகிறது. வேதாரணிய பிராந்தியத்திற்கும் யாழ்ப்பாணப் பிராந்தியத்திற்கும் இடையேயான பண்பாட்டுத் தொடர்புகள் இன்றும் தொடர்கின்றன. அவை இரு பிராந்தியத்திற்கு உரிய பண்பாட்டுத் தளங்களில் செல்வாக்குச் செலுத்துவின்றன என்பதையும் அறியமுடிகிறது.

**உசாத்துணை**

கஜேந்திரன் (தொ.ஆ.) 2009, வேதவனம் என்னும் வேதரணியம், அருணா ஆப்செட், வேதாரண்யம்.

நல்லூர் சின்னத்தம்பிப் புலவர், மறைசை அந்நாதி.

சி.கா.கமலநாதன், வரணியின் மரபுரிமைகள்.

*குமுதம் ரிப்போட்டர், இறைபணி செய்ய வந்தேன் இடைஞ்சல் கொடுக்கிறார்கள், 21.01.2006.*

*தினந்தந்தி, வேதாரணியம் கோயில் வழக்கில் ஐகோர்ட்டுத் தீர்ப்பு, 13.09.2005.*

*ஜுனியர் விகடன், யாழ்ப்பாணம் - வேதாரண்யம் - ஓர் ஆன்மீகப் பாலம், 28.09.2005.*

*மாலை மலர், இலங்கை வாலிபரின் உரிமைப் போர், 22.10.1991.*

*மேலும் அச்சிடப்படாத ஆவணங்கள், நீதிமன்ற அறிக்கைகள், களப்பணியில் திரட்டிய தகவல்கள்.*

**நன்றி**

*தென்னிந்தியத் தொல்லியற் கழகம். செவ்வந்திநாத பண்டாரச் சந்நிதிகள் (வரணி ஆதீன கர்த்தா), வேதாரணியம் யாழ்ப்பாணத்துத் தெருவாசிகள், வரணி குருக்கள் குடியிருப்புவாசிகள், பேராசிரியர் ந.அதியமான் (கடல்சார் தொல்லியற்றுறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்), முனைவர் ஆ.துளசேந்திரன் (கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்), திரு.எஸ்.செல்வராஜா (முதுநிலை மைப்படி உதவியாளர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்), திரு. இரா.மகேஸ்வரன் (பதில் நூலகர், பேராதனைப் பல்கலைக்கழகம், இலங்கை), முனைவர் சு.இராசகோபால் (இளைப்பாறிய உப அதிகர், இணுவில்), திரு. எஸ்.சோதிலிங்கம் (இளைப்பாறிய உப அதிபர், இணுவில்), திரு. செ.சுதர்சன் (விரிவுரையாளர், பேராதனைப் பல்கலைக்கழகம், இலங்கை), திரு. எம்.எம்.ஜெயசீலன் (விரிவுரையாளர், பேராதனைப் பல்கலைக்கழகம், இலங்கை), திரு. பா.சுமன் (உதவி விரிவுரையாளர், பேராதனைப் பல்கலைக்கழகம், இலங்கை), செல்வி எம்.வை.எஃப். றிஸ்மியா (உதவி விரிவுரையாளர், பேராதனைப் பல்கலைக்கழகம், இலங்கை).*

# 81. காந்தளூர்ச் சாலையைத் தேடி...

## (அறக்கட்டளைச் சொற்பொழிவு)

எஸ். இராமச்சந்திரன், சென்னை

காந்தளூர்ச் சாலையைத் தேடிச்செல்லும் இந்த ஆய்வுப் பயணம், இரண்டு கேள்விகளின் அடிப்படையில்தான் தொடங்குகிறது. வரலாற்று அறிஞர்கள், கேரள மாநிலத் தலைநகராக உள்ள திருவனந்தபுரத்துக்கு அருகிலுள்ள வலியசாலை என்ற இடத்தையோ, கன்னியாகுமரி மாவட்ட எல்லையில் அமைந்துள்ள களியக்காவிளையையடுத்துக் கேரள மாநிலத்தில் உதியன் பேரூரிலிருந்து பூவாறு செல்லும் சாலையிலுள்ள "காந்தளூர்ச் சாலை மகாதேவர் கோயில்" அமைந்துள்ள இடத்தையோ தான் காந்தளூர்ச் சாலையென அடையாளம் காட்டுகின்றனர். ஆனால் மேற்குறிப்பிட்ட இரு இடங்களுமே கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டுகளில் ஆய்வேள் மன்னர்களின் ஆட்சிப்பகுதியில் இருந்தன. சமகாலச் சோழர் கல்வெட்டுகளில் காந்தளூர்ச் சாலை "சேரலன்சாலை" என்றே குறிப்பிடப்பட்டது. ஆய்வேள் மன்னர்கள் இந்நூற்றாண்டுகளில் சிலகாலம் சுயாட்சி செலுத்தினர்; சிலகாலம் பாண்டிய மன்னர்களின் கீழ்ச் சிற்றரசர்களாக இருந்தனர்; பின்னர் சோழர்களுக்குக் கட்டுப்பட்டு ஆண்டனர். 950 வரை சோழர்கள் சேரர்களுடன் நட்பாக இருந்த கால கட்டத்தைத் தவிர்த்து விட்டுப் பார்த்தால் கூட[1] ஆய்மன்னர்களின் ஆட்சிப் பகுதியிலிருந்த ஒரு கல்விச் சாலை "சேரலன் சாலை" எனச் சோழ மன்னர்களின் கல்வெட்டுகளில் குறிப்பிடப் பட்டிருக்குமா? இது முதல் கேள்வி.

கி.பி. 866- இல் ஆய் மன்னன் கோக்கருந்தடக்கனால் பார்த்திவசேகரபுரம் உருவாக்கப் பட்டது. பார்த்திவ சேகரபுரம், காந்தளூர்ச்சாலை இருந்த இடமாக அறிஞர்கள் அடையாளம் காட்டும் இடத்திலிருந்து 30 கி.மீ தொலைவில் உள்ளது. "காந்தளூர்மர்யாதி"யால் உருவாக்கப் பட்டதாகவே பார்த்திவ சேகரபுரம் சாலை குறிப்பிடப்படுகிறது.[2] ஒரே வம்சத்து மன்னர்களால் 30கி.மீ தொலைவுக்குள் இருகல்விச்சாலைகள் உருவாக்கப் பட்டிருக்குமா? காந்தளூர்ச்சாலை, பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே சேரமன்னர்களால் இப்பகுதியில் உருவாக்கப்பட்டு இயங்கிவந்து கொண்டிருந்ததாக நாம் பொருள் கொண்டாலும், அச்சாலை

---

*பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவியுள்ள தி.நா.சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு, எண் : 17, நாள் 23.01.2016, தஞ்சாவூர்.*

இயங்கிக் கொண்டிருக்கையில் வெகு அருகில் அதே பாணியில் வேறோரு சாலை உருவாக்கப்பட வேண்டிய நிர்பந்தம் என்ன? இதுஅடுத்தகேள்வி.

கே.ஏ. நீலகண்டசாஸ்திரிஅவர்கள், இராஜராஜன் கி.பி.985ஆம் ஆண்டில் ஜுன் மாதம் 25 ஆம்தேதியிலிருந்து 29ஆம் தேதிக்குள் ஆட்சியிலமர்ந்திருக்க வேண்டும் எனக் கணித்துள்ளார்.[3] 15 ஆண்டுகளுக்கு முன்னரே அவன் ஆட்சிக் கட்டில் ஏறுவதற்கான தருணம் வந்து விட்டதென்றாலும் தன் சிற்றப்பனான உத்தமசோழன் ஆட்சி செய்ய விரும்பியதால் க்ஷத்திரிய தர்மத்துக் கிணங்க, எவ்வித மனச்சலனமும் இன்றித் தன் உரிமையை விட்டுக் கொடுத்தான் எனத் திருவாலங்காட்டுச் செப்பேடு (சுலோகம் 69) கூறுகிறது.[4] இராஜராஜனின் பல பட்டங்களுள் க்ஷத்ரிய சிகாமணி என்பதும் ஒன்று. அப்படியிருக்க, அவனது முதன்மையான வீரச்செயலான "காந்தளூர்ச்சாலை கலமறுத்த" நிகழ்வு, அவன் மனதாரப் போற்றியதாகப் பெருமிதத்துடன் கூறிக் கொண்ட க்ஷத்திரிய தர்மத்துக்கு இணக்கமான ஒன்றாக இருந்ததா என்பது, நாம் மேற்கொள்ள இருக்கிற ஆய்வினால் தெளிவாகத் தெரியவரும்.

இராஜராஜன் "திருமகள்போலப் பெருநிலச் செல்வியும்" எனத் தொடங்கும் ஆசிரியப்பா வடிவிலமைந்த மெய்க்கீர்த்தியைத் தன் புகழ் மொழியாகக் கொண்டவன். இம் மெய்க்கீர்த்தி மரபினையே அவன் தான் தொடங்கி வைக்கிறான். இம் மரபினை நடைமுறைக்கு கொணர்வதற்கும் முன்னரே அவன் பயன்படுத்திய முதன்மையான அடைமொழி "காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளிய" என்பதாகும். சேரநாட்டில் நிகழ்ந்த இந்த வீரச்செயல் கி.பி. 988 ஜுலை மாதத்திற்கும் டிசம்பர் மாதத்திற்குமிடையில் நிகந்திருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது.[5]

இந்தக்காந்தளூர்ச் சாலை ஒரு கல்விச் சாலையே என்பதில் இந்நாளைய வரலாற்றறிஞர்கள் அனைவரும் உடன்படுகின்றனர். இக் காந்தளூர்ச் சாலையில் கற்பிக்கப்பட்ட பாடங்கள் என்ன? கற்பித்த ஆசிரியர்கள், கற்றுக்கொண்ட மாணவர்கள் குறித்த விவரங்கள் என்ன? இச் சாலையை முன்மாதிரியாகக் கொண்டு தோற்றுவிக்கப்பட்ட பார்த்திவசேகரபுரம் சாலையின் மீது தன் சீற்றத்தைக் காண்பிக்காத இராஜராஜன் காந்தளூர்ச் சாலையை மட்டும் குறி வைத்துத் தாக்கக் காரணம் என்ன? எந்த வகையில் காந்தளூர்ச்சாலை பிறசாலைகளைவிட வேறுபட்டிருந்த்து? நம் ஆய்வின் முதல் தேடுதல் இதுவே.

பார்த்திவ சேகரபுரம் சாலை, "த்ரை ராஜ்ய வ்யவஹார"த்துக்கான - மூவேந்தர் - ஆட்சிப் பகுதிகளில் சட்டம், நீதி, நிர்வாகம் ஆகியவற்றை நடத்துவதற்கான - பயிற்சிக்கூடமாக இருந்தது.[6] மூவேந்தர் ஆட்சிப்பகுதி என்பது சேரநாட்டையும் உள்ளடக்கியதா? அல்லது இது ஒரு மரபு வழக்கா? அதாவது இன்றைக்கு இந்தியநாடு என்பது ஜம்மு-காஷ்மீர் மாநிலத்தையும் உள்ளடக்கியதே என்றாலும் ஜம்மு-காஷ்மீருக்குச் சட்ட ரீதியான சில விதிவிலக்குகள் சிறப்பு அந்தஸ்துகள் வழங்கப்பட்டிருப்பது போலச் சேரநாட்டுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டிருந்ததா? காந்தளூர்ச் சாலையும் இது போன்ற "த்ரை ராஜ்ய வ்யவஹார"த்துக்கான பயிற்சி நிலையமா? அப்படியிருப்பின் பார்த்திவசேகரபுரம் சாலை காந்தளூர்ச்சாலைக்குப் போட்டி நிறுவனமா? பார்த்திவசேகரபுரம் சாலையில் சேர்வதற்கான அடிப்படைத் தகுதியாக, சமஸ்கிருதவியாகரணம், மீமாம்சம், புரோஹித்யம் ஆகியவை குறித்த அடிப்படை அறிவு பெற்றிருக்கவேண்டும் என நிர்ணயிக்கப்பட்டிருந்தது.[7] மீமாம்சம், புரோஹித்யம் ஆகியன பிராமண வர்ணத்தவர்க்கு உரியவை. எனவே பார்த்திவசேகரபுரம் சாலையில் பயிற்சி பெற்ற மாணவர்கள் பிராமணர்களே என்பதில் ஐயமில்லை. ஆனால் காந்தளூர்ச்சாலை பிராமண மாணவர்களுக்கான சாலையே எனக் கொள்வதற்கு ஆதாரம் இல்லை. தைத்திரியம், தலவாகாரம், பவிழியம் ஆகிய சமூகச் சட்டங்கள் (தர்மசூத்திர நூல்கள்) பார்த்திவசேகரபுரம் சாலையில் கற்பிக்கப்பட்டன.[8]

காந்தளூர்ச்சாலையிலும் இத்தகைய சமூகச் சட்டங்கள் குறித்த கல்வியும் பயிற்சியும் வழங்கப் பட்டிருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. ஆனால் கற்றுக் கொண்டவர்கள் யார் என்பது முதன்மையான கேள்வியாக உள்ளது.

ஆய்வேள் மன்னர்களுக்குப் பல்லவ அரசுடன் வணிக, அரசியல் உறவுகள் இருந்தன. அவர்களின் கல்வெட்டுகளில் அப்பகுதியின் நடைமுறை எழுத்து வடிவமான வட்டெழுத்து பயன்படுத்தப் பட்டிருப்பினும், பார்த்திவசேகரபுரம்சாலை பற்றிய செப்பேடு உட்படச் செப்பேட்டு ஆணவங்களில் பல்லவ கிரந்தச் சாயலில் உருவாக்கப்பட்ட பல்லவத் தமிழ் எழுத்து வடிவமே பயன்படுத்தப் பட்டுள்ளது.[9] இது, அச்சாலையில் பாடம் நடத்திய ஆசிரியர்களுக்கும் பாடம் கற்றமாணவர்களுக்கும் நன்கு பரிச்சயமான, நடைமுறைப் பயன்பாட்டிலிருந்த எழுத்து வடிவமாக இருந்திருக்கவேண்டும்.

எனவே பார்த்திவசேகரபுரம் சாலையின் ஆசிரியர்கள் பல்லவ நாட்டிலிருந்து அழைத்து வரப்பட்ட - காஞ்சிக் கடிகையில் கல்விகற்ற - ஆந்திரப் பிராமணர்களாக இருக்கலாம்.[10]

சங்ககால மூவேந்தர்கள் பிராமணர்களை ஆதரித்தது உண்மையே. ஆனால் "த்ரை ராஜ்ய வ்யவஹாரம்" பிராமணர்களின் கட்டுப்பாட்டில் இருந்ததில்லை. "கறவை முறை செய்த காவலன்" - மனுநீதிச்சோழன் - பற்றிய குறிப்பு சிலப்பதிகாரத்தில் (20: 53-56) இடம்பெற்றுள்ளது. இது கி.மு. 2 ஆம் நூற்றாண்டில் இலங்கையையாண்ட சோழநாட்டுத் தமிழரசன் ஏறாளன் (ஏளாறா) பற்றிய செய்தியாக மகாவம்சத்தில் (21: 13-18) பதிவு பெற்றுள்ளது. கலித்தொகையில் (139: 18-22) "சான்றவர் அவைக் கண் பாம்புபடில் உய்யும்" எனக் கூறப்பட்டுள்ளது. பாம்பு நீதி கேட்டு வந்துள்ளது போலும் எனக் கருதிச் சான்றோர்கள் அதற்கு ஊறு செய்யமாட்டார்கள் என்பது இதன் பொருள். இத்தகைய நீதி நிர்வாகச் சான்றோர்கள் அரச குலத்தவராக இருந்திருக்கவே வாய்ப்புள்ளது. தொல்காப்பியப் பாயிரம் குறிப்பிடுகின்ற "அறங்கரை நாவின் நான் மறை முற்றிய அதங்கோட்டு ஆசா"னை இத்தகைய சான்றோராகவே கருத இயலும்.[11]

களப்பிரர் ஆட்சி என்ற இடையீட்டுக்குப் பின்னர் பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்த நின்றசீர்நெடுமாறனின் (கி.பி. 7 ஆம் நூற்றாண்டு) அதிகாரியாகவும் நீதி செய்பவராகவும் இருந்த குலச்சிறையார், போஜ ராஜா வம்சத்தைச் சேர்ந்த க்ஷத்ரியர் ஆவார்.[12] அதே வேளையில் வடதமிழ்நாட்டில் ஆட்சிசெய்து கொண்டிருந்த பரத்வாஜ கோத்திரத்துப் பிரம்ம க்ஷத்திரியர்களான பல்லவர்களின் கீழ், குறிப்பாக நரசிம்மவர்ம பல்லவனின் கீழ் (கி.பி. 630-650) சிறுத்தொண்டர் என்ற மகாமாத்திர பிராமணர் முதன்மையான படைத் தலைவராக இருந்தார்.[13]

பல்லவர் ஆட்சிப்பகுதிச் சமூகச் சூழலின் தாக்கம் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் விரைவில் தென்படத் தொடங்கிற்று. கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் மகாமாத்திரர் அல்லது அமாத்யர் குலப்பிராமண வர்ணத்தவரான மாணிக்கவாசகர்[14] பாண்டிய மன்னனிடம் பிரம்ம மாராயனாகப் பதவி வகித்ததைக் காண்கிறோம். எனவே கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் ஆய்வேள் நாட்டில் பார்த்திவசேகரபுரத்தில் பிராமணர்களுக்குத் "த்ரை ராஜ்ய வ்யவஹார"க் கல்வி கற்பிக்கிற ஒரு சாலையை உருவாக்குவதற்கான

நிர்பந்தம் என்ன என்பதை இப் பின்னணியிலேயே நாம் நோக்க வேண்டும்.

கி.பி. 4 ஆம் நூற்றாண்டு முதல் 6 ஆம் நூற்றாண்டின் இறுதி வரை நிலவிய களப்பிரர் ஆட்சியின் விளைவாகச் சோழநாட்டிலும் தென்தமிழகத்திலும் சத்திரியர்களின் அதிகாரம் அகற்றப்பட்டது. அதன் பின்னர் மீண்டும் எழுச்சி பெற்றுப் பாண்டியர்களும் அவர்களைப் பின்பற்றிச் சோழர்களும் ஆட்சியைக் கைப்பற்றி விட்டாலும் கூட, மிகவும் சிக்கலான அதிகாரப் பங்கீட்டின் அடிப்படையிலேயே ஒரு பேரரசு நிலை நிற்கமுடியும் என்ற சூழல் உருவாகி விட்டமையால் (கி.பி. 8 - 9 ஆம் நூற்றாண்டளவில்) தர்ம சூத்திரப் பயிற்சியும் நீதிநிர்வாகமும் பிராமணர்களின் ஏக போகம் என்ற நிலை தோன்றுவதற்கு இச்சூழல் வித்திட்டு விடுகிறது. ஆனால் சேரநாட்டின் பெரும்பகுதிகளில் - குறிப்பாக மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கே இருந்த கேரள, மலபார்ப் பிரதேசங்களில் இத்தகைய சூழல் உருவானதாகத் தெரியவில்லை. அதாவது களப்பிரர் ஆட்சியின் விளைவாகச் சத்திரியர்களின் அதிகாரம் அகற்றப்பட்டு ஒரு வெற்றிடம் ஏற்படவில்லை.[15]

களந்தையர் கோன் கூற்றுவ நாயனார் ஆட்சியில் சோழநாடும் பாண்டியநாடும் அடங்கியிருந்தன என்பதற்குப் பூலாங்குறிச்சிக் கல்வெட்டும் பெரியபுராணமும் சான்று வழங்குகின்றன. மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கிலிருந்த மலைநாடு கூற்றுவ நாயனாரின் ஆட்சியில் இல்லை. சோழர்க்குரிய முடியைத் தமக்குச் சூட்டுமாறு கூற்று வநாயனார் விடுத்த கோரிக்கையை அல்லது ஆணையை - ஏற்க மறுத்துத் தில்லை மூவாயிரவர் சோழநாட்டுக்கு நேர் மேற்கே இருந்த - மலைநாட்டுக்குச் சென்றுவிட்டதாகச் சேக்கிழார் கூறுவது கவனிக்கத் தக்கது.[16] அப்பகுதியில் வைதிக சைவ (அல்லது ஊர்த்வசைவ) வழிபாட்டு மரபும் சமண, பௌத்த மரபுகளும் சமமாகப் பேணப்பட்டன[17] என்பதோடு அங்கு ஆட்சியிலிருந்த சத்திரியர்களின் அதிகாரம் தில்லை வாழ் அந்தணர்களுக்கு அடைக்கலம் வழங்கிற்று என்பதையும் நாம் புரிந்து கொள்ளலாம்.

மலபார்ப் பகுதியில் பொன்னாணிக்கு அருகிலுள்ள சுகபுரம் தக்ஷிணாமூர்த்தி கோயிலிற் பொறிக்கப்பட்டுள்ள கி.பி. 9ஆம் நூற்றாண்டு வட்டெழுத்துக் கல்வெட்டு, "சோகிரத்துப் பருடையாரும் நியாய சேகர்ராயின வள்ளுவரும் கூடிச் செய்த கச்சமாவது" எனக் குறிப்பிடுகிறது.[18] சோகிரம் என்பது சுகபுரத்தின் பழம் பெயர்.

அவ்வூரின் பரிடையார் (பரிஷத் சபையார்) கோயிற் பூசகர்களான வைதீகர்களாக இருக்கலாம். "நியாய சேகரராரயின வள்ளுவர்" என்ற குறிப்பு, அப்பகுதியில் வள்ளுவர் குலத்தவரின் நெறிகாட்டுதலில் வடிவமைக்கப்பட்ட நீதி நிர்வாகம் நடைபெற்று வந்ததை உணர்த்தும். அப்பகுதியே "வள்ளுவநாடு" என்று தான் பெயர் பெற்றிருந்தது. அப்பகுதியிலுள்ள "த்ரிதலா" என்ற திருத்தலத்தில் திருவள்ளுவர் பிறப்புப் பற்றிய கதைகள் வழங்குகின்றன. இக்கதைகள் மிகப் பிற்காலத்தவையாகலாம். ஆயினும் வள்ளுவர் மரபு ஆட்சி செலுத்திய ஒரு பகுதி என்ற வரலாற்று உண்மையை இக்கதைகள் நிறுவுகின்றன.

காந்தளூர்ச் சாலையை நோக்கிய இராஜராஜனின் படையெடுப்பு இப்பகுதியில்தான் நிகழ்ந்திருக்க வேண்டும் என நாம் முடிவு செய்வதற்குத் தடையாக இருப்பது திருவாலங்காட்டுச் செப்பேட்டில் இடம் பெற்றுள்ள ஒரு செய்தியே. அச்செப்பேட்டின் சமஸ்கிருத சுலோகங்கள் (76 முதல் 79 வரையிலும்) இராஜராஜனின் முதல் வெற்றி பாண்டி நாட்டின் மீதான வெற்றியே என்றும் அவன் அமரபுயங்களைவென்று விழிஞத்தைக் கைப்பற்றினான் என்றும் கூறுகின்றன. விழிஞத்துக்கு அருகிலுள்ள வலிய சாலையே காந்தளூர்ச் சாலை என முடிவு செய்துவிட்ட அறிஞர்கள், காந்தளூர் வெற்றியை இதனோடு இணைத்துப் புரிந்துக் கொண்டனர். இராஜராஜன் காலத்துக்குப் பிறகும் காந்தளூர்ச் சாலை உயிர்த்தெழுந்து செயல்பட்டுக் கொண்டிருந்தது. இராஜேந்திரசோழன் காலத்திலும் மீண்டும் காந்தளூர் மீது படை நடத்த வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. எனவே, இராஜராஜ சோழன் இறந்த பிறகு 4 ஆண்டுகள் கழிந்த பின்னர் பொறிக்கப்பட்ட திருவாலங்காட்டுச் செப்பேட்டில், இராஜராஜனின் முழுமையான வெற்றி என்பது "செழியரைத் தேசு கொண்ட" வெற்றியே என்ற புரிதலின் அடிப்படையில் திருவாலங்காட்டுச் செப்பேட்டு சுலோகங்களை இயற்றியவர்கள் காந்தளூர்ச் சாலைப் படையெடுப்பைக் குறிப்பிடாமல் பாண்டிய நாட்டுப் படையெடுப்பைக் குறிப்பிட்டுப் பதிவு செய்திருக்கலாம்.

உண்மையில் இராஜராஜனின் காந்தளூர் வெற்றி தற்காலிகமானதே. கி.பி. 1018 முதல் 1054 வரை ஆட்சி செய்த முதல் இராஜாதிராஜனின் மெய்க்கீர்த்தி, அவன் "வேலைகெழு காந்தளூர்ச் சாலை கலமறுத்த"தாகக் கூறுகிறது. இக்குறிப்பின் அடிப்படையில் காந்தளூர் கடற்கரையில் அமைந்திருந்த ஓர் ஊர் என்பது புலனாகிறதே தவிர, விழிஞத்துக்கருகில் அமைந்திருந்தது என்று பொருள்

கொள்வதற்கு எந்த முகாந்தரமுமில்லை. முதற்குலோத்துங்கனின் (கி.பி. 1070-1120) வெற்றிகளைப் பாடும் கலிங்கத்துபரணி (தாழிசை 385) "வேலை கொண்டு விழிஞம் அழித்ததும் சாலை கொண்டதும் தண்டு கொண்டல்லவோ" என அறிவினா எழுப்புவதன் மூலம் சோழர்கள் மீண்டும் மீண்டும் சாலையைத் (காந்தளூர்ச் சாலையை) தாக்க நேர்ந்தது என்ற வரலாற்றை - நூற்றாண்டுப் போரை - வலியுறுத்துகிறதே தவிர விழிஞத்துக்கு அருகில் காந்தளூர் இருந்ததென உணர்த்தவில்லை.

சேர நாட்டின் அரசியல் தனித்தன்மைகள் பற்றி விவாதிக்கும் அறிஞர்கள், கி.பி. 8-9 ஆம் நூற்றாண்டிலிருந்தே பொன்னாணி யாற்றின் வடகரையிலுள்ள திருநாவாய் என்ற திவ்ய தேசத்தில் 12 ஆண்டுகளுக்குகொருமுறை நிகழும் மகாமகத் திருவிழாக் காலத்தில் பல்வேறு போட்டிகள் நிகழும் என்றும், வள்ளுவ நாட்டின் நாடு வாழி அல்லது நாடாள்வான் அப்போட்டிகளுக்கு நடுவராகச் செயல்படுவான் என்றும் போட்டிகளில் வெற்றிப் பெற்றவரே சேரமான் பெருமாளாகத் தேர்வு செய்யப்படுவார் என்று எழுதியுள்ளனர்.[19] கும்பராசியில் சூரியனும் சிம்மராசியில் சந்திரனும் வியாழனும் இருக்கையில் வருகிற மகாமக நாள் இதற்குத் தெரிவு செய்யப்பட்டப் பொருத்தப்பாடு என்னவெனில், சேரமான் பதவி என்பது கௌரவ குருத்துவப் பதவியாகும். இது வியாழனின் (பிருகஸ்பதி அல்லது சுரகுரு) 12 ஆண்டுச் சுழற்சியை மையமாகக் கொண்டது. கணியர் (சோதிடர்) மரபினரான வள்ளுவர் குலத்தவர்களின் நெறிகாட்டுதலின் அடிப்படையில், வள்ளுவ நாடாழ்வான் என்ற சத்திரியனின் நடுவிருக்கைப்படியே இப்போட்டிகளின் வெற்றி தோல்வி குறித்த முடிவுகள் நிர்ணயிக்கப்பட்டன. வள்ளுவர் மரபு, பெருமாக்கோதை மன்னராகத் தேர்வு செய்யப்பட்டவர்களால் எந்த அளவுக்குப் போற்றப்பட்டது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு உள்ளது. கழறிற்றறிவார் என்ற சேரமான் பெருமாள் நாயனார், தாம் இயற்றிய திருகயிலாயஞான உலாவில் 2 திருக்குறட்பாக்களை அப்படியே எடுத்தாண்டுள்ளார்.[20] பௌத்த சமய நூலான மணிமேகலையை அடுத்த வள்ளுவம் அங்கீகாரம் பெற்றது.

இவரிடத்திலேயே. திருநாவாயில் நடைபெற்ற போட்டிகள், இராணுவ நடைமுறைகள் - நீதி நிர்வாகம் தொடர்பானவை யாகவே இருந்திருக்க முடியும். அவ்வாறெனில், அத்தகைய கல்வி கற்ற - பயிற்சி பெற்ற - பட்டதாரிகளை உருவாக்குகிற சாலையாகவே

காந்தளூர்ச் சாலை இருந்திருக்க வேண்டும். கேரளோல்பத்தியில் இப்போட்டிகள் பற்றிச் சிறு வேறுப்பாட்டுடனான குறிப்புகள் உள்ளன.[21] சேக்கிழாரின் பெரியபுராணம், இப்போட்டிகள் குறித்து ஏதும் கூறவில்லை. பெருமாக்கோதை மன்னர்[22] தமது பதவிக் காலம் முடிந்தவுடன் துறவுமேற்கொண்டு சென்று விடுகிறார் என்றும், அமைச்சர்கள் தமக்குள் ஆலோசித்துத் திருவஞ்சைக் களத்தில் கோயிற்பணியில் ஈடுபட்டிருந்த கழறிற்றறிவாரை அழைத்து வந்து பெருமாக்கோதையாக முடி சூட்டுகின்றனர் என்றும் இது "மலை நாட்டுச் செய்தி முறைமை" என்றும் தெரிவிக்கிறார்.[23] எவ்வாறிருப்பினும் வாரிசுரிமைக்கு மாறுபட்ட ஒரு தேர்வு முறை இங்கு நடைமுறையில் இருந்திருக்கிறதெனில், அத்தேர்வில் பங்கேற்கும் தகுதி படைத்தோரை உருவாக்குகிற ஓர் உயர்கல்விச் சாலை இப்பகுதியில் இருந்திருக்க வேண்டியதுஅவசியம்.

கி.பி. 8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சுவரன் மாறனான பெரும்பிடுகு முத்தரையனின் சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலக் கல்வெட்டில், "காந்தளூர் மண் தோற்ற வேந்தர் மனம்" என்ற வரி இடம் பெற்றுள்ளது[24] இது சேரநாட்டுக் காந்தளூரைக் குறிப்பதாகக் கொண்டால், காந்தளூர்ச் சாலை வேந்தர்களுக் கான கல்விச் சாலை என்பதையே இப்பாடல் வரி உணர்த்துவதாகக் கொள்ளலாம். பாண்டிய அரச மரபினைச் சேர்ந்தோர்கூடத் திருநாவாயில் நடைபெற்ற போட்டிகளில் பங்கேற்று வென்று சேரமான் பெருமாளாக முடி சூடி ஆண்டதுண்டென்று கருதப்படுகிறது. அத்தகைய அரசகுலத்தோர் பலர் காந்தளூர்ச் சாலையில் பயிற்சி பெற்றிருக்கலாம்.[25] "காந்தளூர்ச் சாலை கலமறுத்தல்" என்பது போட்டியில் கலந்து கொண்டு பெற்ற வெற்றியைக் குறித்திருக்கலாம் என அறிஞர் தி.நா. சுப்பிரமணியன் அவர்கள் கருதினார்.[26] சுந்தரசோழனின் ஆட்சிக் காலத்தைச் (கி.பி. 980) சேர்ந்த கோவில் தேவராயன்பேட்டைக் கல்வெட்டில் பிராமணர்களிடையே வேதம் ஓதுதல் தொடர்பாக நடைபெற்ற போட்டியைக் குறிக்கும் விதத்தில் "ஜைமினிசாம வேதத்தில் ... துருச்சொல்லிக்கல மறுத்து நல்லாரானார்" என்ற வரி இடம் பெற்றுள்ளது.[27] இராஜராஜனும் இது போன்ற ஒரு போட்டியில் கலந்து கொண்டு வெற்றி பெற்றிருக்கக் கூடுமோ? என்று தயக்கத்துடன் கேட்டுக்கொள்ளும் தி.நா.சு. அவர்கள், இராஜராஜன் போன்ற மாவீரன் இது போன்று சுலோகம் ஒப்பிக்கும் போட்டியில் கலந்து கொண்டு வெற்றி பெற்றிருப்பின் அதிலென்ன பெருமை இருக்க முடியும்? எனவே

அதற்கு வாய்ப்பில்லையென்று முடிவு செய்து விடுகிறார். உண்மையான பொருள் கோடலுக்கு மிக நெருங்கி வந்துவிட்ட நிலையில், காந்தளூர்ச் சாலை பிராமணர்களின் வேதக் கல்விச் சாலையே என்ற தவறான புரிதலின் காரணமாகத் தி.நா.சு. அவர்கள் வழி விலகிச் சென்று விடுகிறார்.

"கலமறுதல்" என்றதொடர், ஆய்மன்னர்கள் ஆட்சிப் பகுதியிலுள்ள திருநந்திக்கரைக் குடைவரையில் பொறிக்கப் பட்டுள்ள கி.பி.8 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்றில் இடம் பெற்றுள்ளது. "திருநந்திக்கரைப் பெருமக்களும் தளி ஆள்வானும் குருந்தம்பாக்கத்துக் கூடி தலைக்குளத்துக் கலமற்றயாண்டு ஸ்ரீநந்திமங்கலம் என்று பேரும் செய்து நம்பி கணபதிக்குக் குடுத்தோம்" என்பது கல்வெட்டு வாசகம்.[28] தலைக்குளம் என்ற ஊரின் ஆட்சி, உடைமை தொடர்பாக நிலவிவந்த வில்லங்கங்கள் எவ்வகையிலோ தீர்த்து வைக்கப்பட்ட நிகழ்வே "தலைக்குளத்துக் கலமற்ற யாண்டு" என இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது.

சரியாகச் சொல்வதானால் கலகம் என்ற சொல்லேகலம், கலன் என்ற பல வடிவங்களில் வழங்கியுள்ளது. புறநானூற்றில் (69:11) "கலாம்" என்ற வடிவம் உள்ளது. பூசல், போர், இடையூறு, வில்லங்கம் என்று இதற்கு பல பொருள்கள் உண்டு. கி.பி. 1220 ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் "இவ்வூருக்கு எப்பேர்ப்பட்ட கலனுமில்லை; கலனுளவாய்த் தோன்றில் நாங்களே கலன் தீர்த்துக் குடுக்கக்கடவோமாகவும்" என்ற வாசகம் இடம் பெற்றுள்ளது.[29] இந்த அடிப்படையில் பார்க்கையில், தெய்விக வாரிசுரிமையின் அடிப்படையில் மும்முடிச் சோழனாக முடிசூட முனைந்த ஒரு பேரரசனுக்கு, அரச பதவிக்கான தேர்வு முறை என்பதே முரண்பாடான ஒன்றாகவும், அத்தேர்வில் கலந்து கொள்ளத் தகுதியானவர்களை உருவாக்குகிற ஒரு உயர்கல்விச் சாலை மிகப் பெரிய வில்லங்கமாகவும் தோற்றமளித்திருப்பின் வியப்பதற்கில்லை. எனவேதான் அக்கல்விச் சாலையைக் குறிவைத்துத் தாக்கி அழிக்க முனைந்திருக்கிறான் எனத் தோன்றுகிறது.

தஞ்சையிலிருந்து நேர்மேற்கே அமைந்துள்ள கொங்கு நாட்டின் வழியாகவே இராஜராஜனின் படையெடுப்பு நிகழ்ந்திருக்க வேண்டும்.[30] விக்கிரம சோழன் உலா (கண்ணி 17) "ஈரொன்பது சுரமும் கொண்டு மலைநாடு கொண்டான்" என்றும் குலோத்துங்கன் சோழன் உலா (கண்ணி 24) "ஏறிப் பகலொன்றில் எச்சுரமும்

போயுதகை நூறித்தன் தூதனை நோக்கினான்" என்றும் இராசராசன் உலா (கண்ணி 21) "மதகயத்தால் ஈரொன்பது சுரமும் அட்டித்து உதகையைத் தீயுய்த்த உரவோன்" என்றும் இராஜராஜனின் சேரநாட்டு வெற்றியைச் சிறப்பிக்கின்றன. "உதகை" என்று இராஜராஜன் உலா குறிப்பிடுவது "மகோதகை" எனப்பட்ட கொடுங்கோளூரே என ஆய்வாளர் செந்தீ. நடராசன் அவர்கள் நிறுவியுள்ளார்.[31] பதினெட்டுக் காடுகளை அழித்துப் பெற்ற வெற்றி என்பது, கொங்கு நாட்டுக்கு மேற்கே அமைந்துள்ள பாலைக்காடு, சாவக்காடு, தட்டைக்காடு, மண்ணறைக்காடு போன்ற அடர்ந்த காட்டுப் பகுதிகளை ஊடுருவிச் சென்றதையே குறிக்கும்.. இத்தகைய அடர்ந்த காடுகள் ஆய்வாளர்கள் இதுவரை உதகையென அடையாளங் காட்டி வந்த குமரி மாவட்ட உதயகிரிப் பகுதியில் இல்லை.

பதினெட்டுக் காடுகளை அழித்துப் பெற்றிருப்பினும் இராஜராஜனின் சேரநாட்டு வெற்றி தற்காலிகமானதே. கி.பி. 978 இல் ஆட்சியிலமர்ந்த பாஸ்கர ரவிவர்மன் திருவடி கி.பி. 1036 வரை ஆட்சிப் புரிந்தாரெனக் கருதப்படுகிறது.[32] அதே வேளையில் முதல் இராஜேந்திரனின் (கி.பி. 1012 - கி.பி. 1044) கல்வெட்டு, வள்ளுவ நாட்டுப் பகுதியிலுள்ள திருமிற்றக் கோட்டில் கண்டறியப்பட்டுள்ளது.[33] முதல் இராஜாதிராஜன் (கி.பி. 1018 - 1054) தனது மெய்க்கீர்த்தியில் காந்தளூர்ச் சாலை கலமறுத்ததாகக் கூறிக் கொள்கிறான் என முன்னரே கண்டோம். வேணாட்டரசைச் சேணாட்டொதுக்கியதாகவும் அவன் மெய்க்கீர்த்தி கூறுகிறது. பாஸ்கர ரவிவர்மன் ஆய்வேள் நாட்டின் நாடு வாழியாக இருந்து சேரமான் பெருமாள் பதவிக்கான போட்டியில் பங்கேற்று வென்று சேரமானாக முடிசூடியவனாக இருக்கலாம். அவ்வாறிருப்பின் இராஜாதிராஜன் காலத்தில் அவன் சோழர்களிடம் தோற்று வயநாட்டுப் பகுதிக்கு அனுப்பப்பட்டிருக்கலாம். வயநாட்டுப் பகுதியிலிருந்து கொண்டு அவன் மீண்டும் சுயாட்சியடைய முயன்றிருக்கலாம்.[34] "வில்லவன் நாடு விட்டோடிக் காடு புக்கொளிப்ப" என்ற வாசகமும் இராஜாதிராஜன் மெய்க்கீர்த்தியில் உள்ளது. இது இராஜசிம்மன் என்ற சேரமன்னனைக் குறிக்கக்கூடும்.[35] கேரள மாநிலத்தின் வடமேற்கு எல்லைப் பகுதியில் "எலிமலை" எனப்படுகிற ஏழிற்குன்றம் உள்ளது. கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அப்பகுதில் "பரசுராமனின் நீர்க் குடத்தால் அபிஷேகம் செய்யப்பட்டுப் பட்டம் சூடியவர்" என்ற பொருளில் ராமகுடமூஷிகர்

என்ற அரச வம்சத்தவர் ஆட்சி செய்தனர். மலபார்ப் பகுதி சிறக்கல் வட்டம் எரமம் என்ற இடத்தில் 11 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியைச் சேர்ந்த இராமகுடமூஷிக அரசன் கண்டன்காரிவர்மனின் கல்வெட்டு கண்டறியப் பட்டுள்ளது. இக்கல்வெட்டு, வளஞ்சியர்க்கும் நானா தேசியர்க்குமிடையிலான சமயசங்கேதம் (ஒப்பந்தம்) ஆகும். "இராஜேந்திர சோழ சமய சேனாபதி" இக்கல்வெட்டில் கையொப்பமிட்டுள்ளான்.[36] இராஜேந்திரசோழன் பரசுராமன் நாட்டின்மீது பெற்ற வெற்றியின் சுவடென இக்கல்வெட்டைக் குறிப்பிடலாம்.

சோழர்களின் மலைநாட்டு வெற்றியைத் தொடர்ந்து மகாமகப் போட்டிகளில் நடுவராக இருந்த வள்ளுவ நாடாழ்வான் ஆய்வேளிரின் ஆட்சிப் பகுதிக்கு மாற்றல் செய்யப்பட்டான் எனத் தோன்றுகிறது. பார்த்திவ சேகரபுரம் திருமால் கோயிலிற் பொறிக்கப்பட்டுள்ள கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதிக்குரிய கல்வெட்டில் "காரித்துறைக்[37] கேரளன் ஆதிச்சவர்மனான இராஜாதிராஜ வள்ளுவ நாடாழ்வான்" இடம் பெறுகிறான்.[38] இக்காலகட்டத்தில் பார்த்திவசேகரபுரம் சாலை எவ்வித இடையூறுமின்றிச் செயல்பட்டு வந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. சோழ அரசனுக்குரிய பெயரைத் தன் பட்டப்பெயருடன் இணைத்துக் கொண்ட நிலையில் வள்ளுவ நாடாழ்வான் தென் கேரள எல்லையில் பிராமணர்களுக்குரிய சாலை அமைந்துள்ள பார்த்திவ சேகரபுரம் பகுதியில் இருந்துள்ளான் என்ற விவரத்தையும், இராமகுடமூஷிக அரசனின் ஆட்சி வடகேரள எல்லைப் பகுதியில் சோழ அரசப் பிரதிநிதியொருவன் பெயரளவிலான கண்காணிப்புடன் தொடர்ந்தது என்ற விவரத்தையும் இணைத்துச் சிந்தித்தால் சோழர்கள் மீண்டும் மீண்டும் காந்தளூர்ச் சாலையைத் தாக்கி அழித்ததற்கான அரசியல் நோக்கம் புலனாகும். சோழர்களுடனான போர்களின் இப்போர் "நூற்றாண்டுப் போர்" எனக் கேரள வரளாற்றாசிரியர்களால் குறிப்பிடப்படுவது வழக்கம்.

கி.பி. 1100 வரை இப்போர் தொடர்ந்தது. விக்கிரமசோழன் உலா (கண்ணி 24) "சேலைத் துரந்து சிலையைத் தழந்திருகால் சாலை கலமறுத்த தண்டினான்" என முதற் குலோத்துங்கனைப் (கி.பி. 1070-1120) புகழ்கிறது. முதற்குலோத்துங்கனின் அரசியல் நட்பாளனான பராந்தக பாண்டியன் "திருவளரச் செயம்வளர" எனத் தொடங்கும் தன்மெய்க்கீர்த்தியில் "சேரலனைச் செருவில்வென்று திறை கொண்டு வாகை சூடிக் கூபகர் கோன் மகட் குடுப்பக் குல விழிஞம்

கைக்கொண்டு கன்னிப்போர் செய்தருளிக் காந்தளூர்ச் சாலை கலமறுத்து” எனக் கூறிக்கொள்கிறான்.[39] காந்தளூர்ச் சாலை கலமறுத்தல் பற்றிய இறுதிக் குறிப்பு இதுவே. இதன் பின்னர் சாலை இல்லாவிட்டாலும் காந்தளூர் இருந்துள்ளது. இராமநாதபுரம் மாவட்டத்தில் சுந்தரபாண்டியன் பட்டனத்திலிருக்கும் ஏகாம்பரேஸ்வரர் கோயிலிற்பொறிக்கப்பட்டுள்ள கி.பி.13ஆம் நூற்றாண்டுக்குரிய பாண்டியர் கல்வெட்டில் “மலை மண்டலத்துக் காந்தளூரான எறிவீரபட்டினம்” குறிப்பிடப்படுகிறது.[40] சோழர் கல்வெட்டுகளில் இடம் பெற்ற “வேலை கெழுகாந்தளூரே” இப்பட்டினம் எனத் தோன்றுகிறது. கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் “மலை மண்டலத்துக் காரித்துறை” என்ற ஊர்ப் பெயரை அடைமொழியாகக் கொண்ட வள்ளுவ நாடாழ்வான் ஒருவன் மூன்றாம் குலோத்துங்கசோழனின் பட்டப் பெயரைத் தன் பட்டப் பெயருடன் இணைத்துக் கொண்டு தென்பாண்டி நாட்டில் இருந்துள்ளான். “இராச்சிங்கன் விக்கிரமனான வீரராஜேந்திர வள்ளுவ நாடாழ்வான்” என்ற இந்த அதிகாரி சோழர்களிடமிருந்து பாண்டிய அரசர்கள் பால் தனது விசுவாசத்தை மாற்றிக் கொண்டு பதவியில் தொடர்ந்துள்ளான்.[41] கி.பி. 1245க்குரிய, திருச்செந்தூருக்கு அருகிலுள்ள மணத்தி இடையாற்றீச்சுரம் கல்வெட்டு மணத்தி என்ற அவ்வூரை “வள்ளுவ நாடாழ்வான் தேசம்” எனக் குறிப்பிடுகிறது. தேசம் என்ற மிகச் சிறிய நிர்வாகப் பிரிவு, சேரநாட்டில் மட்டுமே வழக்கிலிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. இது சேரநாட்டின் முந்தைய நாடு வாழிகளின் சுயாட்சி மரபின் எச்சமாகலாம். மேலும் இக்கல்வெட்டில் “மணத்திக்குக் காரியம் செய்கின்ற மலை மண்டலத்துக் கண்ணனூருடையான் ஸ்ரீகயிலாசமுடையானான வீரமழகிய பாண்டிய தேவன்” என்பவனும் குறிப்பிடப்படுகிறான்.[42] சேரநாட்டுத் தொடர்புகள் வள்ளுவ நாடாழ்வானின் அரசியல் வாழ்வில் தொடர்ந்து நீடித்து வந்து கொண்டிருந்தமைக்கு இவை சான்றுகளாகும்.

வள்ளுவ நாடாழ்வான் பற்றிய ஆய்விலிருந்து சேரமான் பெருமாளின் “கௌரவ”ப் பதவி குறித்த ஆய்வுக்குத் திரும்புவோம். கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சதாசிவப் பிரம்மேந்திரர் “ஜகத்குரு ரத்னமாலாஸ்தவம்” என்ற நூலை இயற்றியுள்ளார். இந்நூல், மாதவாச்சாரியாரின் சம்க்ஷேப சங்கரக்யம், ஆனந்தகிரியின் சங்கர திக்விஜயம் முதலான பழைய நூல்களையும், மரபுவழிச் செய்திகளையும் ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. சதாசிவ

பிரம்மேந்திரரின் சமகாலத்தவரான ஆத்ம போதேந்திரர் இந்நூலுக்கு விளக்கவுரை எழுதியுள்ளார். இவ்விளக்கவுரையில் ஆதிசங்கரரின் சமகாலச் சேர அரசனான இராஜசேகரன் பாலராமாயணம், வித்தசாலபஞ்சிகம், பிரசண்ட பாண்டவம், கர்ப்பூர மஞ்சரி என்ற சமஸ்கிருத நூல்களை இயற்றி ஆதிசங்கரர்க்குச் சமர்ப்பணம் செய்தான் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதிசங்கரர் காலத்துச் சேர அரசன், கி.பி. 8 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த "சென்னித்தலை அடிகள் இராய்சேகரன்" என்ற அரசனே என்பது கல்வெட்டாய்வாளர் டி.ஏ.கோபிநாத்ராவ் அவர்களின் முடிவாகும். மேற்குறித்த நூல்களில் இராயசேகரன் தன்னைப் பற்றிக் குறிப்பிட்டுக் கொள்ளும் செய்திகளின் அடிப்படையில் அவன் சஹமான குலத்தவன் என்றும் உபாத்யாயன் அல்லது ஆசார்யன் என்றும் யாயாவரன் என்றும் தெரியவருகின்றன.[43] "சஹமான" என்பது சௌஹான் எனப்படும் இராஜபுத்திர குலப்பிரிவின் பட்டப்பெயராகும். ஈழவர் குலப் போர் வீரனைக் குறிக்கும் "சோவன்" என்ற சாதிப்பட்டமே என்று கொள்ளப்பட்டு இவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளது எனத் தோன்றுகிறது. உபாத்யாயன் அல்லது ஆசார்யன் என்பது ஆசான் மரபினன் என்பதையும், சேரமான் பதவி என்பதே கௌரவப் (குருத்துவ) பதவி என்பதையும் உணர்த்துவதோடு ஆதிசங்கரர்க்கு இராயசேகரன் களரிப்பயிற்சி கற்பித்திருக்கக்கூடிய சாத்தியக் கூறினையும் புலப்படுத்துகிறது.[44] ஆசார்யன் என்பது இன்றும் குருக்கள் என்ற சாதிப்பட்டமாக பயன்படுத்தப்படுவது கவனத்துக்குரியது. "யாயாவரன்" என்பதற்குத் தர்மசாஸ்திரங்கள் பின்வருமாறு விளக்கமளிக்கின்றன. "இருவகையான யாயாவர்கள் உண்டு. ஒருவகையினர் "சாலை ஒன்றில் ஆசிரியராக இருப்பவர். இவர் "சாலின்" யாயாவர்; மற்றொரு வகையினர் எந்த நிறுவனத்தோடும் அதிகாரத் தொடர்பற்றவர்; தம் குடும்பத்துக்கு ஒரு நாள் உணவுக்குத் தேவையானதைவிடக் கூடுதலாக ஒரு நெல்மணி வைத்துக்கொள்வதற்குக்கூட அவர் அனுமதிக்கப்படமாட்டார்; குருதக்ஷிணையாகக்கூட அவர் எதனையும் ஏற்கக்கூடாது.[45] சேரமான் பெருமாளாகத் தேர்ந்தெடுக்கப்படுபவரின் வாழ்க்கை முறையோடு இவ்விதிகள் பெருமளவு பொருந்திப்போவதை நாம் உணரமுடியும். இத்தகைய கௌரவப் பதவிக்கான போட்டிகளில் கலந்துகொள்ளும் தகுதி பெற்ற க்ஷத்திரிய வர்ண வீரர்களை உருவாக்கும் பயிற்சிக் கூடமாகவே காந்தளூர்ச் சாலை இருந்திருக்க வேண்டும்.

சேரநாட்டில் தெளிவாக அடையாளப்படுத்தப்படத்தக்க க்ஷத்திரியவர்ணம் இருந்ததா என்ற முதன்மையான வினாவிற்கு

விடைக்கூற நாம் கடமைப்பட்டுள்ளோம். கேரளத்தில் 4 கோயிலகங்கள் இருந்தன என்று அறிஞர்கள் பதிவு செய்துள்ளனர். இரிஞ்ஞாலக்குடாவில் பிராமணக் கோயிலகமும் திருமூழிக் களத்தில் க்ஷத்திரியக் கோயிலகமும் பரவூரில் வைசியக் கோயிலகமும் அயிராணிக் களத்தில் சூத்திரக் கோயிலகமும் இருந்தன.[46] இக்கோயிலகங்களை முறையே சிங்கபுரத்தளி, மேல்தளி, நெடியதளி, கீழ்த்தளி என்றும் கூறுவதுண்டு.[47] இவற்றுள் க்ஷத்திரியக் கோயிலகம் அமைந்திருந்த திருமூழிக்களம் முதன்மையான வைணவ திவ்ய தேசமாகும். திருமூழிக்களக் கோயிலகத்தின் கச்சம் (நடைமுறைச்சட்டம்) கேரளநாடு முழுமைக்கும் பொருந்தக் கூடியதாக இருந்ததெனக் கருதப்படுகிறது. இக்கச்சத்தை வடிவமைத்தோர், "மூழிக்களத்து ஒழுக்கவிச் சான்றார்" எனப்பட்ட க்ஷத்ரிய வர்ணப் பிரிவினர் ஆவர். கோயில் நடைமுறைகளோடு தொடர்புடையோர் யாராகிலும் இக்கச்சத்தினை மீறிவிட்டால் அவ்வாறு மீறியவர்களின் வீட்டிற்கு இச்சான்றார்கள் பிச்சையேற்கச் செல்லமாட்டார்கள் "இக்கச்சம் பிழைச்சார் மூழிக்களத்து ஒழுக்கவிச் சான்றாரைப் பிழைச்சாருள் படுவது; இக்கச்சம் பிழைச்சார் இல்லத்துப் பிச்சை புகப்பெறார்" எனக் கல்வெட்டுகள் அறிவிக்கின்றன.[48] இச்சான்றார்கள், யாருடைய இல்லத்துக்குப் "பிக்ஷை" யேற்கச் செல்ல மறுக்கிறார்களோ அந்த இல்லத்துக்குரியோர், சாதிப் பிரஷ்டத்தையொத்த தண்டனையாக அதனைக் கருத நேரிடும். மூழிக்களத்து ஒழுக்கவிச் சான்றார்கள் எத்தகைய உயரிய, மரபு சார்ந்த "யாயாவரர்களாக" இருந்தனர் என்பதை இது உணர்த்தும். காந்தளூர்ச் சாலை என்பதே இத்தகைய யாயாவரர்களால் நிர்வகிக்கப்பட்ட, இத்தகைய யாயாவரர்களை உருவாக்குகிற ஒரு கல்விச் சாலையாகத் தான் இருந்திருக்க வேண்டும்.

இத்தகைய சாலை அமைந்திருக்கக் கூடிய சாத்தியங்கள் உடைய, காந்தளூர் என்ற பெயருடைய ஊர் எங்குள்ளது என்ற தேடுதலை நோக்கி நம் கவனத்தைத் திருப்புவோம். 1830 - 35 ஆம் ஆண்டுகளில் அச்சிடப்பட்ட மலபார் நில அளவைப் பதிவேடுகளில் பொன்னாணிக்கு அருகில் திருநாவாயிலிருந்து 10 மைல் தொலைவில் காந்தளூர் என்ற சிற்றூர் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது[49] இக்கட்டுரை ஆசிரியனாகிய எனது தலைமையில் திரு. த. தங்கவேல், திரு. சௌம்யநாராயணன், திரு. ராஜசந்திரமோகன் ஆகியோர் அடங்கிய குழு இத்தேடுதலில் ஈடுபட முடிவு செய்து களமிறங்கிற்று. மகாமகம் நிகழ்ந்த திருத்தலமான திருநாவாயிலுள்ள மணிக்கிணறு,

மருந்நறா, பழுக்காமண்டபம், தலத்தரா, சங்கம் பள்ளிக்களரி ஆகிய இடங்கள் பார்வையிடப்பட்டன. கி.பி. 12 ஆம் நூற்றாண்டிலேயே சேரமான் பெருமாளைத் தேர்ந்தெடுக்கும் வழக்கம் நின்று போய்விட்டதென்றாலும் கி.பி.18 ஆம் நூற்றாண்டு வரை மகாமக நிகழ்வுகள் தொடர்ந்து நடைபெற்றன. சோழர்களுடனான நூற்றாண்டுப் போர் முடிவுற்ற பின்னர், வள்ளுவக் கோன் திருப்பாதம் (வள்ளுவக் கோனாத்திரி) என்ற மருமக்கள் வழி மரபினர் பெருந்தலமன்றத்தை (பெரிந்தல்மன்னா)த் தலைமையிடமாகக் கொண்டு இப்பகுதியில் அதிகாரம் செலுத்தத் தொடங்கினர்.[50] கோழிக் கோட்டைத் தலைமையிடமாக் கொண்டு செயல்படத் தொடங்கிய "சாமி திருப்பாதம்" (சாமூதிரி) அரசருக்கும் வள்ளுவக் கோனாத்திரிக்கும் மகாமகத் திருவிழா நிகழ்வுகளுக்குத் தலைமை தாங்கி நடத்தி வைக்கும் அதிகாரம் தொடர்பாகப் பூசல்கள் தொடர்ந்து நிகழ்ந்து வந்தன.[51] கி.பி.19ஆம் நூற்றாண்டிலிருந்து மேற்குறித்த வரலாற்றுச் சின்னங்களுள் பெரும்பாலானவை கோழிக்கோடு சாமூதிரி வம்சத்தவரின் பராமரிப்பிலுள்ளன. சங்கம் பள்ளிக் களரி, இஸ்லாமியர்களின் நிர்வாகத்தில்லுள்ளது.

சங்கம் பள்ளிக் களரியை நிர்வகித்து வருபவர் ஜாஃபர் குருக்கள் என்பவராவார். குருக்கள் என்ற பட்டம் குறித்து அவரிடம் விசாரித்தபோது, அவர் தமது முன்னோர் 7 அல்லது 8 நூற்றாண்டுகளுக்கு முன்னர் தஞ்சாவூரிலிருந்து குடியேறியவர்கள் என்று கேள்விப்பட்டிருப்பதாகவும் தற்போது வர்ம சிகிச்சை முதலானவற்றை மேற்கொள்கிற ஹக்கீமாக (மருத்துவராக) இருப்பதாகவும் கூறினார். வர்மக்கலையுடன் இணைந்த அங்கப்போர்ப் பயிற்சி அளித்த ஆசான் மரபினராக இவர்கள் இருந்திருக்கவேண்டும். சேரநாட்டு "சாலின்"களைப் பதவி நீக்கம் செய்துவிட்டுத் தஞ்சைச் சோழர்கள் இவர்களைக் களரிப் பயிற்சி ஆசான்களாக நியமித்திருக்கலாம். இக்களரிப் பயிற்சி நிலைய மண்டபத்தின் வாயில் நிலையில் கஜலக்ஷ்மியின் மரச்சிற்பம்உள்ளது. இச் சிற்பத்தின் காலம் கி.பி.16 ஆம் நூற்றாண்டாகலாம். இது குறித்துத் திரு. ஜாஃபர் குருக்களிடம் விசாரித்தபோது, தாங்கள் மிகவும் பிற்காலத்தில்தான் இஸ்லாமியராக மாறியிருக்க வேண்டுமென்று கருதுவதாகவும், தம் முன்னோர்கள் பின்பற்றிய மரபினைக் கௌரவிக்கும் விதத்திலேயே அச்சிற்பத்தினை மாற்றாமல் வைத்திருப்பதாகவும் தெரிவித்தார். கி.பி. 1788 - 89 ஆம் ஆண்டுகளில் திப்புசுல்தானின் படையெடுப்பினையடுத்து இப்பகுதியில்

பெருமளவில் மதமாற்றங்கள் நிகழ்ந்தமை வரலாற்றில் பதிவாகியுள்ளது. வள்ளுவக் கோனாத்திரி தமது குடும்பத்துடன் பெரிந்தல் மன்னாவை விட்டுத் திருவிதாங்கூர்ப் பகுதிக்குத் தப்பியோடினார். பல ஆண்டுகள் கழிந்த பின்னர் ஆங்கிலேயக் கிழக்கிந்திய கும்பினியாரின் ஆதரவுடன் திரும்பி வந்தார் எனினும் தம்முடைய உடைமைகளை மீட்க அவரால் இயலவில்லை, இறுதியில் திருவிதாங்கூர்ப் பகுதிக்கே திரும்பிச் சென்று கும்பினியார்வசம் ஓய்வூதியம் பெற நேர்ந்தது. 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இப்பிரதேசம் முழுமையும் மாப்பிள்ளைமார் (மாப்ளாமுஸ்லீம்) கலவரம் தொடங்கி 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை தீவிரமாக நடைபெற்றது. இத்தகைய பின்னணியில் பார்க்கும்போது ஜாஃபர் குருக்கள் கூறுவது நம்பத்தகுந்த செய்தியாகவே தெரிகிறது.

மலைப்புரம் மாவட்டம் பொன்னாணி வட்டத்தில் திருநாவாயிலிருந்து 16 கி.மீ. தெற்கே எடப்பால் என்ற ஊரைத் தொட்டடுத்து வட்டன்குளம் என்ற வருவாய்க் கிராமத்தின் பிடாகையாகக் காந்தளூர் என்ற சிற்றூர் அமைந்துள்ளது. "நியாய சேகரராயின வள்ளுவர்" பற்றிய கல்வெட்டு உள்ள சுகபுரம், எடப்பாலின் ஒரு பகுதியாக அமைந்துள்ளது. சுகபுரத்துக்கு மிக அருகில் பொன்னாணிக் காயல் அமைந்துள்ளது. சுகபுரம் (சோகிரம்) என்பது வைதிகப் பரிஷத் சபையாரின் நிர்வாகத்திலிருந்த ஊராகவும், காந்தாளூர், வள்ளுவர்களின் நெறிகாட்டுதலில் வள்ளுவ நாடாழ்வானின் நிர்வாகத்திலமைந்த "சாலை" சார்ந்த ஊராகவும் இருந்திருக்கலாம். "வேலை கெழுகாந்தளூர்" எனச் சோழர் மெய்க்கீர்த்தி கூறுவதற்குப் பொருத்தமான விதத்தில் இவையிரண்டும் இணைந்து ஒரே ஊராக - கடற்கரைப் பட்டினமாக - இருந்திருக்கவும் வாய்ப்புண்டு.

காந்தளூரில் பழமையான, சிறிய சிவன் கோயில் ஒன்று உள்ளது. கல்வெட்டுகள் இல்லை. வேறெந்தச் சுவடுகளும் முதற்பார்வையில் தென்படவில்லை. உள்ளூர் மக்கள் இவ்வூரின் வரலாறு குறித்துச் சொல்வதற்குச் சில சுவையான செவிவழிச் செய்திகளை வைத்திருக்கின்றனர். ஈழவர் சாதியைச் சேர்ந்த பாலன் என்பவரும் நாயர் சாதியைச் சேர்ந்த வேலாயுதன் மாஸ்டரும் தெரிவித்த செய்திகளாவன:

"திருநாவாய் மகாமகம் திருவிழாவிற்கு முகூர்த்தம் குறித்துக் கொடுத்து வந்த ஈழவப் பணிக்கர் குடும்பம் இவ்வூரைச் சேர்ந்தது.

அவ் வம்சத்தார் இன்றும் இவ்வூரில் உள்ளனர்.[52] காந்தளூர் ஒரு காலத்தில் பெரிய ஊராக இருந்தது. எதிரிகள் (யாரென்று தெரியாது) யானைப் படையைக் கொண்டு வந்து இவ்வூரை துவம்சம் செய்து அழித்துவிட்டனர்." இராஜராஜன் உலா, "மதகயத்தால் ஈரொன்பது சுரமும் அட்டித்து" எனக் கூறுவது நம் நினைவுக்கு வராமற் போகாது.

அதிகாரம் தரும் போதைக்கும் வாரிசு அரசியல் என்ற நோய்க்கும் மாற்று மருந்தாக திகழ்ந்த ஒரு "கௌரவமான" கல்விச் சாலை இந்த இடத்தில் தான் இருந்திருக்கவேண்டும். தனது ஏக சக்ராதிபத்யக் கனவை நிறைவேற்றி கொள்வதற்கு இருந்த ஒரே வில்லங்கம் என இராஜராஜன் கருதிய, சத்திரியர்களுக்கான கல்விச் சாலை இங்குதான் இருந்திருக்க வேண்டும். இச்சாலை அழிக்கப்பட்ட பிறகு வேறொரு வகையான அரசுரிமை, கேரளம் முழுமைக்குமான மாற்று ஏற்பாடாக அறிமுகமாயிற்று. நம்பி திருப்பாத (நம்பூதிரிபாத்) பிராமணர்களின் முழுமையான கட்டுப்பாட்டின் கீழ் உருவாக்கப்பட்ட மருமக்கள் வழி அரசுரிமை நடைமுறைக்கு வந்தது. மூஷிக வம்ச அரசாட்சிப் பகுதி மட்டுமன்றிக் கேரளம் முழுமையுமே பரசுராம க்ஷேத்ரமாயிற்று.

சோழப் பேரரசர்கள் தங்களது உன்னத லட்சியமாகப் பறைசாற்றிய க்ஷத்திரிய தர்மத்துக்கே முன்னுதாரணமாக அமைந்த, அக் காரணத்தினாலேயே அவர்களின் அமைதியைக் குலைத்த கல்விச் சாலை அமைந்திருந்த இடம் இக்காந்தளூரே என்பதை இனி வருங்காலங்களில் நிகழ்த்தப்படும் கள ஆய்வுகளும் அகழாய்வுகளும் நிலைநிறுத்தும் என எதிர் பார்ப்போம்.

**அடிக்குறிப்பு:**

1. 8ஆம் நூற்றாண்டில் பாண்டியரிடமிருந்து சேரமான் விழிஞத்தைக் கைப்பற்ற முயன்று தோற்றான். (Travancore Archaeological Series Vol. I, P-232) அதன்பிறகு 9ஆம் நூற்றாண்டில் ஆய்வேளிர் ஆட்சி நடைபெற்றது. மீண்டும் கி.பி. 950 அளவில் பாண்டியர் ஆட்சியின் கீழ் விழிஞம் வந்தது. 960-இல் சுந்தரசோழன் பாண்டியர்களைவென்று மதுராந்தகன் என்று பட்டம் புனைந்தான். எனினும் மீண்டும் பாண்டியர்கள் விழிஞத்தை மீட்டு விட்டனர். இராஜராஜன் கி.பி. 992 ஶி 993 இல் பாண்டியர்களிடமிருந்து விழிஞத்தைக் கைப்பற்றியிருக்க வேண்டும் (பார்க்க: Colas – Ch. IX – K.A.N. Sastry, University of Madras, 1955).

2. ஹுசூர் அலுவலகச் செப்பேடு, முதல் ஏடு, முதல் பக்கம், வரி 6-7; (T.A.S. Vol. I no. II Ed: T.A. Gopinatha Rao).

3. Colas, Ch. IX

4. "ப்ரஜாபி அசக மதன ராஜ்யம் ஸ்வேபித்ருவ்யேஸ்வ தேஸப்ரணயின மனஸா பிக்ஷுத்ரதர் மார்த்த வேதி" - (South Indian Inscription, Vol. V no. 49).

5. Colas, p. 169.

6. ஹூசூர் அலுவலகச் செப்பேடு, 4ஆம் ஏடு, முதல் பக்கம், வரி 5-6 (T.A.S. Vol. I no. II).

7. மேற்படிச் செப்பேட்டு வரிகள் : 5-6.

8. மேற்படிச் செப்பேடு - மேற்படி பக்கம், வரிகள் 2-4. தைத்திரியம் என்பது பௌதாயன தர்ம சூத்திரத்தையும், தலவாகரம் என்பது கௌதம தர்ம சூத்திரத்தையும், பவிழியம் என்பது ஆபஸ்தம்ப தர்ம சூத்திரத்தையும் குறிக்கும் என்று ஆய்வாளர் வெ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் விளக்கியுள்ளார். பார்க்க: "தமிழ்வேதம் - ஓர்ஆய்வு" - "ஆய்வு வட்டக் கட்டுரைகள் - தொகுதி 1" - பதிப்பாசிரியர்: வெ. கிருஷ்ணமூர்த்தி, சென்னை ஆய்வு வட்டம், வடபழனி, சென்னை - 26, ஏப்ரல் 1995.

9. பல்லவர்கள் தமது பூர்விகமான ஆந்திரத்தில் வழக்கிலிருந்த தென்னகப் பிராமியின் பரிணாம வளர்ச்சி வடிவத்தையும் தமிழ் பிராமியின் பரிணாம வளர்ச்சி வடிவமாகத் தமிழகத்தில் ஓலைச்சுவடிகளில் எழுதவும் நடுகற் கல் வெட்டுகளிற் பொறிக்கவும் பயன்படுத்தப்பட்ட வட்டெழுத்தின் கூறுகளையும் கலந்து கி.பி. 5ஆம் நூற்றாண்டில் கிரந்த வரிவடிவத்தை உருவாக்கினர். இந்தப் பல்லவ கிரந்தமே பிராகிருத - சமஸ்கிருத ஆவனங்களை எழுதப் பயன்படுத்தப் பட்டது. பல்லவர்கள் தமிழர்களாகவே மாறிவந்த நிலையில் கி.பி. 7ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிரந்த வரிவடிவத்தின் முதன்மைக் கூறுகளைத் தக்க வைத்துக் கொண்டு வட்டெழுத்து வரிவடிவத்தின் சில கூறுகளைத் தன் மயமாக்கிக் கொண்டு ஒரு கலப்பு வரிவடிவத்தை உருவாக்கித் தமிழ்மொழி ஆவணங்களை எழுதப் பயன்படுத்தத் தொடங்கினர். இத்தமிழ் எழுத்து வடிவம் வட்டெழுத்தை வழக்கொழியச் செய்தது. பல்லவர்களிடமிருந்து கி.பி. 10ஆம் நூற்றாண்டில் ஆட்சியைக் கைப்பற்றிய சோழர்கள் தமிழ் எழுத்து வடிவத்தையே பின்பற்றினர். கி.பி. 11ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டைக் கைப்பற்றியபோது அங்கும் தமிழ் எழுத்து வடிவத்தை நடைமுறைப்படுத்தினர். வட்டெழுத்து அதன் பின்னர் சேரநாட்டில் மட்டுமே வழக்கிலிருந்தது.

10. “கண்டேற்று” போன்ற, கேரள நம்பூதிரி பிராமணர்களின் குடிப்பெயர்கள் பல, ஆந்திர - தெலங்காணா தொடர்பைக் காட்டும்.

11. தொல்காப்பியப் பாயிரத்தில் இடம் பெற்றுள்ள இவ்வரிக்கு விளக்கமளிக்கிற நச்சினார்க்கினியர், “நான்மறை” என்பது இருக்கும் யசுவும் சாமும் அதர்வணமும் ஆகியவற்றுக்கும் முற்பட்ட தைத்திரியம், தலவாகாரம், பவிழியம், சாமவேதம் என்பனவே என்கிறார். பார்த்திவசேகரபுரம் செப்பேட்டைப் பதிப்பித்த டி.ஏ. கோபிநாதராவ் அவர்கள் மேற்குறித்த உரையை மேற்கோள் காட்டியுள்ளார்; வேறுவிளக்கம் எதையும் கூறவில்லை. “அறங்கரை நாவின் நான்மறை” என்பது ஸ்மிருதி நூல்களுள் முற்பட்ட தர்மசூத்திர நூல்கள் என்று பொருள்படும். அதங்கோட்டு ஆசான், தர்மசூத்திரப் பயிற்சியில் தேர்ந்தவர் என்பதால் தான் வாழ்வியல் இலக்கணங்களோடு தொடர்புடைய தொல்காப்பியப் பொருளதிகாரத்தை அவருடைய ஒப்புதலோடு அரங்கேற்ற நேர்ந்தது போலும்.

12. “தக்கயாகப் பரணி” - தாழிசை 179-க்கான உரை, ப. 120, “தக்கயாகப் பரணி மூலமும் உரையும்” - உ. வே. சா. நூலகப் பதிப்பு, சென்னை - 90, 1992.

13. பெரியபுராணம், வார்கொண்ட வனமுலையாள் சருக்கம், பா. 26 - 27.

14. வேம்பத்தூரார் இயற்றிய திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், ஞானோபதேசம் செய்த திருவிளையாடல், பா. 6; நரி குதிரையான திருவிளையாடல், பா - 8.

15. கடம்ப அரசன் விஷ்ணு வர்மனின் சமஸ்கிருதக் கல்வெட்டு (கி.பி. 5ஆம் நூற்றாண்டு) எடக்கல் பகுதியில் கண்டறியப்பட்டுள்ளது. “பல் புலி தாத்தகாரி” (பல புலிகளை வசப்படுத்திய மூதாதையான ஐயனார்) என்ற வாசகம் பொறிக்கப்பட்டுள்ள, கி.பி. 5ஆம் நூற்றாண்டுக்குரிய வட்டெழுத்து - பிராமிக் கல்வெட்டும் குறிப்பிடதக்கது. (சபரிமலை) தர்ம சாஸ்தாவழி பாட்டு மரபோடு இக்கல்வெட்டு வாசகம் தொடர்புடையதாகத் தோன்றுகிறது. சேரநாட்டுச் சமூகச் சூழல் பற்றி ஆய்வதற்கான தரவுகள் விரிவாகவும் ஆழமாகவும் தேடப்படவேண்டும்.

16. பெரியபுராணம் வார்கொண்ட வனமுலையாள் சருக்கம், பா. 308.

*17.* இத்தகைய தேர்வு முறைகள் பௌத்தத் தொடர்பில் உருவானவையாகலாம். பௌத்த நூல்களில் அரசன் "மகாசம்மத" எனப்படுவான். அரசன் மக்கள் பிரதிநிதிகளின் - பௌத்த சங்கத்தாரின் சம்மதத்தைப் பெற்றே அரசுரிமையை அடைகிறான் என்பது இதன் பொருள். பௌத்த சங்கத்தின் அரசியல் செல்வாக்கினை அரசர்கள் வெறுத்தனர் எனத் தெரிகிறது. கி.பி. 7ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த மகேந்திர பல்லவன் தனது மத்தவிலாசப் பிரகசனத்தில், நாட்டின் நீதி நிர்வாகத்தில் பௌத்த சங்கம் ஆதிக்கம் செலுத்தி வந்தது குறித்த தனது எதிர்ப்புக் குரலைப் பதிவு செய்துள்ளான். ஆய்வேள் அரசர்கள் (கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டுகள்) பௌத்தத்தையும் ஆதரித்தனர் என்பது உண்மையே, இருப்பினும், மத்தவிலாசப் பிரகசத்தின் ஒரே பிரதி ஆய்வேளிரின் ஆட்சிப் பகுதியில்தான் பாதுகாக்கப்பட்டு வந்தது என்பது தற்செயலானதன்று.

*18.* S.I.I. Vol V no.775.

*19.* Survey of Kerala history - K. Sridhara Menon.

*20.* சேரமான் பெருமாள் நாயனாரின் திருகயிலாய ஞானஉலாவில் "இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு" என்ற குறளும் (பொருள் செயல்வகை, பா.2) 'கண்டு கேட்டுண்டு யிர்த்துற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணேயுள' என்ற குறளும் (புணர்ச்சி மகிழ்தல், பா.1) முறையே 136, 173 ஆம் கண்ணிகளாக உள்ளன. "கண்டுகேட்டு..." எனும் குறள் "பண்டையோர் கட்டுரை" எனப்படுகிறது. சேரமான் பெருமாள் பௌத்த மரபுகளை சுவீகரித்து வளர்ந்தவராக இருக்கவேண்டும். அது அவர் இஸ்லாமியராக மாறிவிட்டார் என்ற கதைக்கு அடிப்படையாக இருந்திருக்கலாம் கேரளத்தில் இஸ்லாமியரை பௌத்தர் என்றே குறிப்பிடுவதுண்டு.

*21.* கேரளோல்ப்பத்தி, கேரளம் முழுமையும் பரசுராம க்ஷேத்ரமாக மாறிய பிறகு கி.பி.15 ஆம் நூற்றாண்டுக்குப் பின் எழுதப்பட்டதாதலால், 32 பிராமண ஊர்களில் சபையார் கூடிச் சேரமான் பெருமாள் பதவிக்குரியவரைத் தேர்ந்தெடுத்தனர் எனக் கூறுகிறது. இறுதிப் பெருமாள் அரசர், மாமாங்கம் நடத்தும் உரிமையை வள்ளுவக் கோனாத்திரிவசம் வழங்கினாரென்று கேரளோல்ப் பத்திகூறுகிறது. (*பார்க்க:* The special features of Cera inscriptions by M.G.S.Narayanan in the Journal of the Epigraphical society of India Vol. XXIV, Mysore – 670012-1998).

22. பெருமான் + கோதை என்பது நன்குடி என்பது நற்குடி என்றும் கூறப்படுவதன் ஒப்புமையாக்கமாகப் பெருமாற்கோதை என்றாகி, நற்கீரன் என்பது நக்கீரன் ஆனதுபோலப் "பெருமாக்கோதை" ஆயிற்று. பின்னர் "பெருமாள்" எனச் சுருங்கிற்று. "பெருமாள்" என்று அரசனைக் குறிப்பிடும் மரபு தமிழ்க் கல்வெட்டுகளில் பரவலாகக் காணப்படுவது இந்த அடிப்படையிலேயே.

23. பெரியபுராணம், வார்கொண்ட வனமுலையாள் சருக்கம், பா. 117-124. எம்.ஜி.எஸ். நாராயணன் அவர்கள், சேரமான் பெருமாள் அரசர்கள் திருவஞ்சைக்களம் கோயிலில் கோவிலதிகாரியாகப் பணிபுரிந்தனர் என்ற வரலாற்றைப் பதிவு செய்துள்ளார். (அடிக்குறிப்பு - 21- இல் குறிப்பிட்டுள்ள கட்டுரை காண்க.) பெரியபுராணத்தில் மகாமகத் தேர்வு மரபு குறிப்பிடப்படவில்லை. கி.பி. 1140 அளவில் பெரியபுராணம் இயற்றப்பட்டபோது இத்தேர்வு முறை நின்றுபோய்விட்டது இதற்குக் காரணமாகலாம்.

24. Epigraphia Indica, Vol. XIII, p. 145.

25. எம்.ஜி.எஸ். நாரயணன் அவர்கள், காந்தளூர்ச் சாலை பிராமணர்களின் கல்விச் சாலையே எனக் கருதுகிறார். பெருமாள் மன்னர்களே பிராமணக் கலப்பு உள்ள மன்னர்கள் தாம் என டி.ஏ. கோபிநாதராவ் உட்படப் பெரும்பாலன அறிஞர்கள் கருதியதாலேயே இத்தகைய முடிவுக்கு வந்தனர். (பார்க்க: "Kandalur Salai – new light on the history of Aryan expansion in South India" – M.G.S. Narayanan, Proceedings of the Indian History Congress, 32nd Session, Jabalpur, 1970).

26. தென்னிந்தியக் கோயில் சாசனங்கள், தொகுதி 3, பகுதி 2, பக். 1-15, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை - 5, 1957.

27. S.I.I. Vol. XIII, no. 250.

28. T.A.S. Vol. III, no. 54.

29. S.I.I. Vol. VII, no. 430. நில விற்பனை செய்வோர், இவ்வாறு "நானே கலன்தீர்த்துக் கொடுப்பேனாகவும்" என்று ஒப்புதல் தெரிவிக்கும் மரபு, 19ஆம் நூற்றாண்டைய ஆவணங்கள் வரை தொடர்ந்துள்ளது.

30. இராசகேசரி பெருவழிக் கல்வெட்டு, இராஜராஜனின் காந்தளூர் "வெற்றி"யின் சின்னமாக இருக்கலாம்.

31. "இராஜராஜன் ஒள்ளெரிகொளுவிய உதகை எது?" செந்தீ. நடராசன் பழங்காசு - காலாண்டிதழ், இதழ் 5, பக். - 49, பதிப்பு:

சுசீலாதேவி சீனிவாசன், தெற்குக் காட்டூர், திருச்சிராப்பள்ளி - 620019, 2002.

32. T.A.S. Vol. II pp. 32-34.

33. Annual Report on Epigraphy 62 / 1944 – 45 B. எம்.ஜி.எஸ். நாராயணன் அவர்கள் "ஆராய்ச்சி" இதழில் இக்கல்வெட்டு வாசகங்களை வாசித்து வெளியிட்டுள்ளார்.

34. "வேனாட்டரசைச் சேணாட்டொதுக்கிக்

கூவகத் தரசைச் சேவகந் தொலைத்து

மேலுபுகழி ராமகுட மூவர்மடிக் கொண்டுதன்

நாடு விட்டடிக்காடு புக்கொளிப்ப

வஞ்சியம் புதுமலர் மிலைந்தாங் கெஞ்சலில்

வேலைகெழு காந்தளூர்ச் சாலை கலமறுத்து"

என்பன மெய்க்கீர்த்தி வரிகள். வயநாட்டு திருநெல்லியில் பாஸ்கர ரவிவர்மன் திருவடியின் செப்பேடு கண்டறியப் பட்டுள்ளது. இது அவன் மீண்டும் சுயாட்சியடைய முயன்று பெற்ற வெற்றியின்போது பொறிக்கப்பட்டதாகலாம்.

35. கி.பி. 1036 இல், தென்பாண்டி நாட்டில் சேரமான் பெருமாள் அரசர் குலசேகர ஆழ்வார் முக்தியடைந்த திருத்தலமாகக் கருதப்படுகிற மன்னார் கோயிலில் சேரமான் இராஜசிம்மன் இராஜேந்திர சோழனின் பெயரில் இராஜேந்திர விண்ணகர் கட்டுவிக்கிற பணியில் ஈடுபட்டிருந்தான். (பார்க்க: Mannarkovil inscription of Rajendra Chola – in collected papers – Studies in South Indian Epigraphy and History by R. Tirumalai, Tamil Nadu State Dept. of Archaeology, Chennai, 1994).

36. A.R.E. 523 / 1929 - 30. இராஜேந்திர சோழனின் மெய்க்கீர்த்தி "எறிபடைக் கேரளன் முறைமையிற் சூடும் குலதனமாகிய பலர் புகழ் முடியும்" எனச் சேரமான் சூடும் முடியையும், "செருவிற் சினவி இருபத்தொருகால் அரசுகளை கட்ட பரசுராமன் மேவருஞ்சாந்தி மத்தீவரண் கருதி இருத்திய செம்பொன் திருத்தகுமுடியும்" எனப் பரசுராமனால் முடிசூட்டப்பட்ட இராமகுட மூஷிக அரசரின் முடியையும் வேறுபடுத்திக் காட்டுகிறது. அவனது திருவாலங்காட்டுச் செப்பேடும் (சுலோகம் 92 - 97) சேரநாட்டின் பல அரசர்களைக் (நாடு வாழிகளை) குறிப்பிட்டுவிட்டுப் பார்க்கவன் (பரசுராமன்) நாட்டைக் குறிப்பிடுகிறது.

*37.* காரித்துறை என்பது மணிமேகலையில் (19:126) பேசப்படுகிற காரியாற்றின் கரையிலிருந்த ஊராகலாம். இது கொங்குநாடு - கேரளப் பகுதியில் ஓடிய ஆறாகும். இன்றும் கேரள நாட்டில் காரியாற்று (காரியாத்) என்ற குடிப்பெயர் வழக்கிலுள்ளது.

*38.* T.A.S. Vol III no. 16 – 11ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியைச் சேர்ந்த இக்கல்வெட்டு இராஜாதிராஜ சோழனின் பெயரைக் குறிப்பிடாமல் பார்த்திவசேகரபுரம் பெருமக்களின் ஆணையாகவே பொறிக்கப்பட்டுள்ளது. இப்பகுதியை ஒட்டி வள்ளுவநாடு என்ற மிகச் சிறிய நிலவியல் நிர்வாகப் பகுதி இருந்தது உண்மையே. இராஜராஜனின் ஆட்சிக் காலத்தில் இவ்வள்ளுவ நாடு இராஜராஜத் தென்னாடு என்ற நாட்டுப் பிரிவுக்குள் அடக்கப்பட்டது. மட்டுமின்றி, இவ்வள்ளுவ நாட்டின் நாடு வாழியென்று யாரும் இருந்ததில்லை.

*39.* T.A.S. Vol. I p. 52.

*40.* "மலை மண்டலத்துக் காந்தளூரான எறிவீரபட்டினத்து ராமன் திரிவிக்கிரமனான தேவேந்திர வல்லப்ப பதினென் பூமிச் சமயச் சக்கரவர்த்திகள்" என்பது கல்வெட்டு வாசகம் (பார்க்க: "முத்தூற்றுக் கூற்றம் கள ஆய்வு" - எஸ்.இராமச்சந்திரன், ஆய்வு வட்டக் கட்டுரைகள் - தொகுதி 1 - பதிப்பாசிரியர்: வெ. கிருஷ்ணமூர்த்தி, சென்னை).

*41.* A.R.E. 556, 559, 560, 561/ 1916 – பத்தமடைக் கல்வெட்டுகள்.

*42.* மணத்தி இடையாற்றீச்சுரம் கல்வெட்டுகள். எஸ்.இராமச்சந்திரன், "வரலாறு" இதழ் 6 - இராசமாணிக்கனார் வரலாற்று ஆய்வு மையம், திருச்சிராப்பள்ளி - 17.

*43.* இராயசேகரன் வரலாறு பற்றி டி.ஏ. கோபிநாதராவ் அவர்கள் விரிவாக விவாதித்துள்ளார். சமஸ்கிருத நூல்கள் எழுதிய இராஜசேகரன் கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவன் என்பது அவரது முடிபு. பார்க்க: T.A.S. Vol II no. 9 – 10. ஆதிசங்கரர் காலத்து இராயசேகரன் ஈழவர் குல வீரனாக இருந்து "சான்றான்" பட்டம் பெற்று க்ஷத்திரயவர்ண அந்தஸ்து பெற்றவனாக இருக்கலாம். ஈழச்சான்றான் என்பது போன்றே கள்ளச் சான்றான், பள்ளிச் சான்றான், இடைச் சான்றான் என்ற பிரிவுகளும் இருந்துள்ளன. இது குறித்த விவாதத்துக்குப் பார்க்க: "வலங்கை மாலையும் சான்றோர் சமூகச்செப் பேடுகளும்" சீ.இராமச்சந்திரன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 113, 2004.

*44.* நாமக்கல் மாவட்டம் திருச்செங்கோட்டையடுத்த கருமாபுரம் சான்றோர் (நாடார்) மடத்தின் தலைவரான சிவப்பிராமணர் வசம் உள்ள கி.பி.17 ஆம் நூற்றாண்டுச் செப்பேட்டில் "மன்னர்க்கு மன்னனாம் சங்கராச் சாரியார்க்கு தயவுடன் உபதேசம் தானருளிச் செய்தவன்" எனச் சான்றோர் குல மூதாதையொருவன் குறிப்பிடப்படுகிறான். (கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள், ப.231, பதிப்பாசிரியர்: செ. இராசு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991.) உபாத்யாயர் என்பதன் திரிபான "வாத்தியார்" என்பது அண்மைக் காலம்வரை சென்னைத் தமிழில் சண்டைப் பயிற்சி ஆசானையே குறித்தது.

*45.* History of Dharmasastra – P.V. Kane, Vol. II, Part I, pp.641 – 642, Bhandarkar Oriental Research Institute, Pune, 410041, 1997.

*46.* Travancore State Manual, Chapter 6, p.231, Editor: R. Nagamayya, Trivandrum, 1906. Kerala State Gazetteer, Vol. II Part I, pp. 266, 274-5, 371 Editor: Adoor K. Ramachandran Nair, Govt. of Kerala.

47. T.A.S. Vol. V p.43.

48. T.A.S. Vol. II Part I, no. 49. மூழிக்களக்கச்சம். T.A.S. Vol. II no.s. 4A, 4B, Vol. III, no. 41 – போன்ற பல கல்வெட்டுகளிலும் சுட்டப்படுகிறது.

49. Description Memoir of Malabar – Lieutenants Ward and Conner, 1830 – 35. Republished by Kerala Gazetteer, Kerala, 1995).

*50.* வள்ளுவ நாடாழ்வானின் வாரிசுகளாக இருந்து நாயர்குலப் பெண்டிருடன் மணஉறவு கொண்டு "வள்ளோடி" என்ற குடிப்பெயர் பெற்ற சாமந்தர் சாதியினரும் கேரளத்தில் உள்ளனர். ஏறாள நாட்டு நாடு வாழியின் வாரிசாக இருந்து இத்தகைய மணஉறவை ஏற்ற "ஏறாடி", நெடுங்கல நாட்டு நாடு வாழியின் வாரிசாக இருந்து இத்தகைய மணஉறவை ஏற்ற "நெடுங்காடி" போன்றோரும் சாமந்தர் சாதியினராகவே அறியப்படுகின்றனர்.

*51.* Nayars of Malabar, pp.284-5, Faweet, Madras Govt. Museum Bulletin, Vol. III no.3 Govt. Press, Madras, 1901.

*52.* கணியன், பாணன் ஆகிய சாதிகள் ஈழவர் என்ற இனத்தின் (race) பிரிவுகள் என்று Memoir of the survey of Travancore and Cochin State, Vol. I, p.145 –இல் கூறப்பட்டுள்ளது. (Prepared by Lieutenant Ward and Conner, 1827.) வள்ளுவர்களுள் ஒரு பிரிவினர் கணியன்களிலும் மற்றொரு பிரிவினர் சாக்கைக் கூத்தர் (சாக்கியார்)களிலும் கலந்திருக்கலாம்.

## 82. கொல்லிரும்புறைக்காசு - ஒரு மறுபார்வை
### (கருத்துப்பரிமாற்றம்)

எ. சுப்பராயலு, கோயம்புத்தூர்

1987ல் கரூரில் அமராவதி ஆற்றில் கிடைத்த ஒரு காசில் எழுத்துக்கள் இருந்ததைக் கண்ட தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை இயக்குநர் திரு.இரா.நாகசாமி 15.11.1987 தினமணியில் சங்கச்சேரலன் ஈந்த கவின்மிகு காசு என்ற கட்டுரையில் கொல்லிப்புறைக் காசு பற்றி விளக்கினார். அதைத் தொடர்ந்து பி.எல். குப்தா வாழ்த்து மலரில் இக்காசு பற்றி ஒரு நீண்ட ஆங்கிலக் கட்டுரையெழுதினார். இறுதியாக 1995ல் வெளியிட்ட தம் Roman Karur என்ற நூலில் கொல்லிப்புறைக் காசுடன் திரு.அளக்குடி ஆறுமுக சீதாராமன் 1989இல் கண்டெடுத்த கொல்லிரும்புறைக் காசு பற்றியும் சுருக்கமாகச் சொல்லியுள்ளார். முதல் காசில் கொ-ல்-இ-ப்-பு-றை என்று படித்து அதைக் கொல்லிப்புறை என்று திருத்திப் படித்தார். இரண்டாம் காசில் உள்ள எழுத்துக்களை கொ-லி-இ-ரு-ம்-பு-றை-ய-ன் என்று படித்து அதைக் கொல்லி + இரும்புறையன் என்று பிரித்துப் படிக்கலாம் என்றார்.

கொல்லிமலையின் தலைவன் என்ற முறையிலும் கொல்லிமலையை அதனை ஆண்டு வந்த ஓரியிடமிருந்து வென்று கைப்பற்றியதைக் கொண்டாடும் வகையிலும் இக்காசுகளைப் பெருஞ்சேரலிரும்பொறை என்ற சேர அரசன் வெளியிட்டிருக்க வேண்டும் என்பது நாகசாமி அவர்கள் கருத்து. கொல்-ஈ என்ற சொல்லின் அடிப்படையில் கொல்லுகின்ற பெரிய அச்சுறுத்தும் ஈக்களைக் கொண்டிருந்ததனால் கொல்லிமலை அப்பெயர் பெற்றிருக்க வேண்டும் என ஒரு சுவையான விளக்கமும் கொடுத்தார். இந்தக் காசுகளில் உள்ள பாடத்தைப் பொறுத்தவரை மேற்குறிப்பிட்ட பாடமே சரியானதென்று கொண்டு திரும்பத் திரும்ப சொல்லப்பட்டு வருகிறது. இந்த இரு காசுகளையும் மேலும் கிடைக்கப்பெற்ற காசுகளையும் கூர்ந்து பார்த்தால் நாகசாமி அவர்கள் பாடம் தவறாகப்படும்.[1]

தம் துறையினர் பெற்ற முதற்காசு மிகத் துருப்பிடித்திருந்ததால் எழுத்துக்கள் சரியாகத் தெரியாமல் படிப்பதில் தவறு ஏற்பட வாய்ப்புண்டு. ஆனால் அளக்குடி ஆறுமுக சீதாராமன் வெளியிட்ட காசில் ஸகீழே எண் 1-ல் அப்படி நேரவாய்ப்பில்லை. முதலெழுத்து 'கொ' என்று இல்லை, 'கெ' என்றே உள்ளது. இதுவரை

கிடைத்துள்ள ஒன்பது காசுகளில் ஒன்று [எண் 4] தவிர மற்ற யாவற்றிலும் 'கெ' என்றே உள்ளது. இந்த ஒன்பது காசுகளாவன :[2]

1. ஆறுமுக சீதாராமன், சங்ககாலக் காசுகள், தஞ்சாவூர்: தனலட்சுமி பதிப்பகம், 2008, பக்கம் 14: காசு 1.
2. Nagaswamy, R., Roman Karur, Madras: BrahadPrakashan, 1995, p. 171.
3. ஆறுமுகசீதாராமன், சங்ககாலக்காசுகள், பக்கம் 14: காசு 3.
4. Krishnamurthy, R., Sangam Age Tamil Coins, Madras: Garnet Publications, 1997: Coin No. 173.
5. Krishnamurthy, R., Sangam Age Tamil Coins: Coin No. 174.

6,7,8. ஆறுமுகசீதாராமன் - வெளியிடப்படாதவை.

9. ஆறுமுகசீதாராமன், சங்ககாலக்காசுகள் :பக்கம் 14: காசு 2.

இவற்றில் முன்பக்கத்தில் உள்ள எழுத்துக்களை வைத்து இருவகையாகப் பிரிக்கலாம்:

**கெல் இரும்புறைய்** - 1, 5, 6, 7, 8, 9. ஸ9-ல் 'கெல்' மிகத்தேய்ந்துள்ளது௵

**கெல்இப்புறை** - 2, 3, 4. ஸ4-ல்முதல்எழுத்துதெளிவில்லை௵.

முன்பக்கத்தில் படம் ஏறக்குறைய எல்லாவற்றிலும் ஒன்றாகவே உள்ளது. இரு தூண்கள் கொண்ட முகப்பு அல்லது வாயிலின் முன் ஓர் ஆள் வலது கையில் ஒரு நீண்டவாளுடன் இடக்கை இடுப்பில் ஊன்றியவாறு நின்ற நிலையில் காணப்படுகிறான். இந்த உருவம் அரசன் என்று கருதப்படுகிறது. முகப்பின் இடப்பக்கம் கீழிருந்து மேலாக எழுத்துக்களும் வலப்பக்கம் ஒரு மரமும் காணப்படுகின்றன. எழுத்துக்கள் அரைவட்டமாக மரத்தின் தலைப்பக்கம் வரை செல்கின்றன.

பின்பக்கத்தில் உள்ள படங்களை வைத்து இருவகையாகப் பிரிக்கலாம்:

முதல்வகை - 1, 5, 6, 7.

இரண்டாம் வகை - 2, 3, 4, 8, 9.

முதல் வகையில் மேலே பார்த்தபடி வில்லம்பு, அதன்மேல் கடல் அல்லது ஆற்று நீரில் மூன்று ஆமைகள் மற்றும் இரண்டு சோடி

மீன்கள். வில்லம்புக்கு இடப்பக்கம் ஆறு முகடு கொண்ட மலை ஸமேருமலை என்பார் நாகசாமி ௵, வலப்பக்கம் ஒரு தொட்டியில் இரு மீன்கள்.

இரண்டாம் வகையில் மேல்நோக்கிய வில்லம்பு, இடப்பக்கத்தில் மேலிருந்து ஓடும் ஆற்றில் மூன்று ஆமைகள், இடப்பக்கம் மலை, அதன் கீழே ஒரு தொட்டியில் இரு மீன்கள் மற்றும் கொம்புடன் மாட்டுத்தலை.

இந்தக் காசுகள் எதிலும் 'கொல்' தொடக்கம் இல்லாததால் கொல்லி என்ற திருத்தமும் அதைப் பற்றிய விளக்கமும் அந்த மலைக்குரிய சேரன் யார் என்ற விவாதமும் பொருளற்றதாகி விடுகின்றன. ஆறு காசுகளில் கெல்இரும்புறை என வருவதால் அதை அந்த வடிவத்திலேயே கொண்டு அந்தப் பெயர் யாரைக் குறிக்கும் என்று பார்க்கவேண்டும். அதைச் செல் இரும்புறையின் இன்னொரு வடிவம் என்று கொள்ளமுடியும். பழந்தமிழில் சொல் முதலில் வரும் க/சபரி மாற்றத்துக்கு இடமுண்டு. காட்டாக சேரலர் = கேரளர். கெல்/செல் இன்னோர் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

வகை இரண்டில் உள்ள கெல் இப்புறை என்ற பாடம் கெல் இரும்புறை என்ற வடிவத்தின் சுருக்கம் அல்லது தவறான பாடம் என்றும் ஊகிக்க வேண்டியுள்ளது.

இறுதியாக இக்காசை வெளியிட்ட சேர அரசன் புகழூர்க் கல்வெட்டுகளில் குறிக்கப்பெறும் செல்லிரும்புறை அல்லது செல்லிரும்பொறையே எனத் துணிவது தவறாகாது. ஒரு கல்வெட்டில் செல்லிரும்பொறை [61] என்றிருக்க இன்னொன்றில் செல்லிரும்புறை [62] என்றே உள்ளதைக் குறிப்பிடலாம்.[3]

இக்காசுகளின் காலம் பற்றி திரு.ரா. கிருஷ்ணமூர்த்தி வெளியிட்ட கருத்து இங்கு நினைவு கூரத்தக்கது. இந்தக் காசுகளில் முன்பக்கத்தில் உள்ள ஆளுருவத்துடன் கூடிய முகப்பை ரோமானியக் காசுகளில் உள்ள காட்சியை ஒத்துள்ளதாகக் காட்டுவார். அகஸ்டஸ் முதல் ஹாட்ரியன் ஈறாக [கிமு 27 முதல்கிபி 128 வரை] வெளியிட்ட காசுகளில் இரு அல்லது நான்கு தூண் கொண்ட கோயில் முகப்பின் முன் அரசன் அல்லது ஏதாவது ஒரு தெய்வத்தின் உருவம் பொறிக்கப் பட்டுள்ளது. இவற்றுடன் ஒப்பிட்டால், சேரர் காசு ரோமானிய காசுகளைப் பின்பற்றி வெளியிட்டிருப்பது உறுதி. ஆகவே, இக்காசுகள் கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்று கிருஷ்ணமூர்த்தி அவர்கள் கணித்திருப்பது சரியாகவே படுகிறது.

[1] காசுகள் 1–4க்கு மட்டும் வரை படங்கள் கொடுக்கப் பட்டுள்ளன. இவற்றை நேர்த்தியாக வரைந்துதவிய இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறைக் கல்வெட்டியல் பிரிவு கல்வெட்டு உதவியாளர் திரு.பாலமுருகனுக்கு நன்றி.

[2] எண் *1, 3, 6, 7,* மற்றும் 8-ல் சுட்டப்பட்ட காசுகளின் படங்களைக் கொடுத்துதவிய திரு.அளக்குடி ஆறுமுக சீதாராமன் அவர்களுக்கு நன்றி. மற்ற படங்கள் குறிப்பிட்ட நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை.

[3] IravathamMahadevan, Early Tamil Epigraphy, Cre-A (Chennai) & Harvard University, 2003, pp. 405, 407.

1



2



3

4



5



1





2



3



4



## 82. புள்ளிமான்கோம்பை என்பதே சரியானது

தமிழ்ப் பல்கலைக்கழகம் கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை 2006-ஆம் ஆண்டில் (ஆவணம் 17, 2006, பக்.1-8), தேனி மாவட்டம், ஆண்டிப்பட்டி வட்டத்தில் வைகை ஆற்றின் தென்கரையில் மூன்று சங்ககால நடுகற் கல்வெட்டுகளைக் கண்டுபிடித்தது. தொல்காப்பியச் சொல்லாட்சியான 'ஆ கோள்' (ஆநிரை கவர்தல்) கல்வெட்டுகளில் ஒன்றில் காணப்படுவது தமிழின் தொன்மைச் சிறப்பினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளதோடு இக்கண்டுபிடிப்பு தமிழ்சார் வரலாற்றாய்வுலகில் புதிய மைல் கல்லாக நின்று பல ஆய்வாளர்கள் முள் பார்வைக்கு உள்ளாக்கியுள்ளது. இக்கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்ட இடம் 'புலிமான்கோம்பை' என்று ஆய்வாளர்களால் இதுவரை பதிவு செய்யப்பட்டு வருகிறது. ஆனால் இவ்வூரைப் 'புள்ளிமான் கோம்பை' என்று அழைப்பதே பொறுத்தமானதாகும். சாலை ஓர ஊர்ப் பெயர்க் கல்லில் அவ்விதமே எழுதப்பட்டுள்ளது. ஆய்வாளர்கள் இதனைக் கருத்தில் கொள்ளலாம்.

பா.ஜெயக்குமார், தஞ்சாவூர்

## 83. புதிய வெளியீடுகள்

***பராந்தக சோழனின் உதயேந்திரம் மற்றும் வேலஞ்சேரி செப்பேடுகள், ஆசிரியர் ச.கிருஷ்ணமூர்த்தி, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2014, பக்.112, விலை.உரூ.50.00.***

பராந்தக சோழனால் வெளியிடப்பட்டு ஏற்கனவே அச்சில் வெளிவந்துள்ள உதயேந்திரம் மற்றும் வேலஞ்சேரி செப்பேடுகள் மீண்டும் ஆய்வு செய்யப்பெற்று விளக்க உரையுடன் இந்நூல் அமைந்துள்ளது. பராந்தகன் காலத்தில் பிரமதேய அமைப்பு குறித்த செய்திகளை உள்ளடக்கிய இச்செப்பேடுகள் வடமொழியிலும் தமிழ் கிரந்தத்திலும் எழுதப்பட்டுள்ளமையைத் தமிழ்ப் படுத்திச் செப்பேட்டுப் பாடங்களையும் அதிலுள்ள சொற்களின் விவரங்களையும் விரிவாக ஆசிரியர் அளித்துள்ளார். இரு செப்பேடுகளில் குறிக்கப்படும் சங்ககாலச் சோழர்கள் குறித்த செய்திகளையும் ஆசிரியர் ஒப்பாய்வு செய்து அளித்துள்ளார். உதயேந்திரம் செப்பேடு திருத்தணி பற்றிக் குறிப்பிடுவதால் திருத்தணிக்குத் தொடர்பான கல்வெட்டுச் சான்றுகளையும் இந்நூலில் ஒப்பாய்விற்காக விளக்கமாக அளித்துள்ளார். செப்பேட்டில் காணப்படும் பல சொற்களுக்கு விளக்கங்களையும் அளித்துள்ளார். இறுதியில் செப்பேட்டின் நிழற்படங்களும் அளிக்கப்பெற்றுள்ளன. தொடக்க கால பிரமதேய அமைப்பு குறித்த ஆய்வு மேற்கொள்ளும் ஆய்வாளர்களுக்கு இந்நூல் மிகவும் பயனுடையதாக இருக்கும்.

- ந.அதியமான், தஞ்சாவூர்

**Early Writing System, A Journey from Graffiti to Brahmi, K.Rajan, Pandya Nadu Centre for Historical Research, Madurai, 2015, p.439, Rs.2,500/-.**

தமிழக எழுத்து வளர்ச்சி முறை குறித்த ஆய்வுகள் பழந்தமிழ் எழுத்தான தமிழ் பிராமியிலிருந்து தொடங்கிப் பின்னர் எழுத்துகளில் ஏற்பட்ட மாற்றங்கள் குறித்த ஆய்வுகளே இதுவரை நிகழ்ந்து வந்தது. ஆனால் தமிழ் பிராமி எழுத்துகளுக்கும் முன்னர் தென்னிந்தியாவில் பயன்படுத்தப்பட்ட பானைக் குறியீடுகளைத் தொடக்கமாக முன்வைத்து அதன் பின்னர் உருவான தமிழ் பிராமி எழுத்துகள் குறித்த ஆய்வு முடிவுகளை முதன் முதலாக ஆசிரியர் இந்நூலில் ஒருங்கிணைத்துத் தந்துள்ளார். தென்னிந்தியாவில் பெரும்பாலும் ஈமச்சின்னங்களில் கண்டெடுக்கப்பட்ட பானைக் குறியீடுகளுக்கும் சிந்து சமவெளி முத்திரைகளில் காணப்படும் உருவங்களுக்குமான

தொடர்புகளை ஏற்கனவே பி.பி.லால் வெளியிட்டுள்ளார். தமிழ் பிராமி எழுத்துகள் குறித்த கூராய்வு ஐராவதம் மகாதேவன் அவர்களால் மேற்கொள்ளப்பட்டது. இந்நூலில் முதலில் இவ்வெழுத்தின் தோற்றகாலச் சமூகம் குறித்துத் தமிழகத்தில் இதுவரை கிடைத்துள்ளத் தொல்லியல் சான்றுகளை ஒருங்கிணைத்து குறிப்பாக கொடுமணல் அகழாய்வில் கிடைத்த தொல்பொருள்கள் குறித்தும் இந்நூலின் மையக்கருத்திற்குத் தேவையான இலங்கை உள்ளிட்ட பிற இடங்களில் கண்டறியப்பட்ட தொல்லியல் சான்றுகள் குறித்தும் தரப்பட்டுள்ளன. பானைக் குறியீடுகள் குறித்து இதுவரை மேற்கொண்ட ஆய்வுகள் குறித்தும் விரிவாகத் தந்து இதுவரை தமிழகத்தில் கிடைத்துள்ள பானைக் குறியீடுகளை அட்டவணை செய்து குறியீடுகளை நேர்த்தியாக படங்களுடன் ஆசிரியர் விளக்கியுள்ளார். பின்னர்த் தமிழகத்தில் அகழாய்விலும் கள ஆய்விலும் கிடைத்த, குறிப்பாக பேரா.எ.சுப்பராயலு அவர்கள் தலைமையில் 1990-களில் கொடுமணலில் நிகழ்த்தப்பெற்ற அகழாய்வில் கிடைத்த பானை ஓடுகளில் காணப்பெறும் தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்புகள் மற்றும் ஆசிரியர் கடந்த இரண்டாண்டுகள் கொடுமணலில் நிகழ்த்திய அகழாய்வுகளில் கிடைத்த தமிழ் பிராமி எழுத்துகளைத் தொகுத்து ஒட்டு மொத்தமாக 795 தமிழ் பிராமி பானைப் பொறிப்புகளையும் அட்டவணைப்படுத்திப் படங்களுடன் விவாதித்துள்ளார். எழுத்தமைதி குறித்த ஆய்வும் தமிழகத்தில் ஒவ்வொரு வட்டாரங்களிலும் கிடைத்த தமிழ் பிராமி எழுத்துகளுடன் கூடிய பானையோடுகளின் எண்ணிக்கை குறித்தும் எழுத்துகளின் காலவரையரை குறித்தும் அறிவியல் முறை, மண்ணடுக்கு முறையிலும் தமது முடிவுகளை அளித்துள்ளார். வண்ணங்களில் அச்சிடப்பட்ட நிழற்படங்கள் மற்றும் நில வரைபடங்கள் படிப்போருக்கு எளிதில் புரியும் வண்ணம் இந்நூலில் அமைந்துள்ளது. இந்நூல் தமிழ் எழுத்து வளர்ச்சி குறித்த ஆய்வுகளை மேற்கொள்ளும் ஆய்வாளர்களுக்கு மிகவும் உறுதுணையாக இருக்கும்.

ந.அதியமான், தஞ்சாவூர்

**தொல்லியல் நோக்கில் குறுமன்ஸ் பழங்குடி ஆசிரியர் தி.சுப்பிரமணியன் அதியமான் சமூக வரலாற்று ஆய்வு மையம், தருமபுரி, செப்டம்பர் 2015, பக். ஏஐ+ 170, விலை ரூ.150.00.**

'குறும்பர்' எனும் தொல்குடி மக்கள் தமிழகத்தின் வட மாவட்டங்களில் தொடக்க காலத்தில் வாழ்ந்தவர்கள். இவர்கள் கால்நடை மேய்ப்புத் தொழிலை முதன்மையாகக் கொண்டவர்கள் எனலாம். பல்லவர்கள் தொண்டை நாட்டில் கால்கொண்டபோது

அங்கிருந்த குறும்பர்களை வென்று அவர்களுடைய மேய்ச்சல் நிலங்களைக் (கோஷ்டங்கள்) கைப்பற்றிக் கொண்டதாக வரலாற்றறிஞர்கள் குறிப்பிடுவர். அகநானூறு, பெரும்பாணாற்றுப் படை போன்ற சங்க இலக்கியங்களில் குறும்பர்களின் வாழ்விடங்கள் பற்றிய செய்திகள் பேசப்படுகின்றன. இத்தகைய தொல்குடிகள் இன்று தமிழகத்தில் வடமாவட்டங்களில் மிகுதியாகவும், நடு மாவட்டங்களில் குறைந்த எண்ணிக்கையிலும் வாழ்கின்றனர். இவர்கள் கன்னடம் பேசுபவர்களாக இருப்பது இவர்களது மொழி பெயர் தேயத் தொடர்பினை உறுதிப்படுத்துகிறது.

இற்றை நாளில் சிறுபான்மை இனத்தவராகத் திகழும் குறும்பர்களுடைய வரலாற்றை எளிய தமிழில் இனிய நடையில் இந்நூலாசிரியர் எழுதியுள்ளார். பெரிதும் கள ஆய்வை மையமாகக் கொண்டு குறும்பர்களின் வாழ்வியல் இந்நூலில் விவரிக்கப் பட்டுள்ளது. தாய்த் தெய்வத்தையும், மூதாதையர் வழிபாட்டையும் அடிப்படையாகக் கொண்டு வாழும் குறும்பர் குலமக்கள் நடுகல் வழிபாட்டைத் தொடர்ந்து பின்பற்றி வருகின்றனர். இந்நூலில் சங்ககாலம் தொடங்கி குறும்பர்களின் வரலாறு ஆராயப்படுகிறது. கால்நடை மேய்ப்பும், அது தொடர்பான கம்பளி நெசவும் அவர்களின் முக்கியத் தொழிலாக விளங்குகிறது. குலமுறை அமைப்பு, திருமணம், வழிபாட்டு மரபுகள், முடி களையும் சடங்குகள், மரணம் தொடர்பான சடங்குகளின் எச்சங்கள் என அனைத்துச் செய்திகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இம்மக்கள் வழிபடும் நடுகற்கள் பலவற்றைப் பற்றிய செய்திகள் ஒளிப்படங்களுடன் தரப்பட்டுள்ளன. இம்மக்களின் வழக்கிலிருக்கும் பழம் பாடல்களும் இந்நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இத்தகைய சமூகவியல் நுண் ஆய்வுகள் வெளிவரவேண்டியது இன்றைய தேவைகளுள் ஒன்றாகும்.

சொ.சாந்தலிங்கம், மதுரை

**“சோழர் வரலாற்றில் கண்டராதித்த சோழரும் செம்பியன் மாதேவியும்”, ஆசிரியர் இல.தியாகராஜன் வெளியீடு கண்டராதித்த சோழர் செம்பியன் மாதேவி சிலை அமைப்புக்குழு, ஏப்ரல் 2016, விலை.ரூ.120.00.**

அரசகுடியில் தோன்றி சைவசமய ஈடுபாட்டால் 64 நாயன்மார்கள் வரிசையில் இடம் பெற்ற இணையருள் கண்டராதித்த சோழரும், செம்பியன் மாதேவியும் குறிப்பிடத்தக்கவர்கள். முதலாம் பராந்தக சோழனின் புதல்வர்களுன் இரண்டாவது மகனான கண்டராதித்தர், சிவஞானச் செல்வராகத் திகழ்ந்தவர். பொ.கா.950 -

957 ஆண்டுகளில் சோழர் அரியணையை அலங்கரித்தவர். மேற்கெழுந்தருளின தேவர் என்ற சிறப்புப் பெயரும் இவருக்கு உண்டு. கோனேரி ராஜபுரத்தில் இவரது திருஉருவச் சிலை இடம் பெற்றுள்ளது. இவர் பாடிய திருவிசைப்பா ஒன்பதாம் திருமுறையில் தொகுக்கப்பட்டுள்ளது. இவர் கட்டிய கோயில்கள், இவரது பெயரால் வழங்கும் ஊர்கள், மனைவியர், மக்கள் என அனைத்து தரவுகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

நூலில் இரண்டாம் பகுதியாக செம்பியன் மாதேவியாரின் வரலாறு இடம் பெறுகிறது. சோழர் வழியில் வந்த பெண்ணரசிகளில் மிக முக்கியமானவரார்கத் திகழ்பவர் செம்பியன் மாதேவியர். 'உத்தமசோழரைத் திருவயிறு வாய்த்த மழவரையர் மகளார் பராந்தகன் மாதேவடிகளாரான செம்பியன் மாதேவி யார்' எனக் கல்வெட்டுகளில் இடம்பெறும் இம்மாதரசி சோழமண்ணில் கட்டிய கோயில்கள் பல 'செம்பியன் மாதேவி வகை' எனச் சொல்லத்தக்க அளவில் கோயில்களில் அதிக எண்ணிக்கையிலான தேவகோட்டங் களை அமைத்து அதில் வல விதமான இறைத்திருமேனிகளை எழுந்தருளச் செய்தவர். அவரது கொடைகள், அவர் பெயரால் அமைநந்த ஏரிகள், வாய்க்கால்கள் என அனைத்துச் செய்திகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இந்நூலாசிரியர் தனக்கே உரிய நடையில் வேண்டிய ஒளிப்படங்களையும், கல்வெட்டுப் படங்களையும் இணைத்து இந்நூலை ஆக்கியுள்ளார்.

சொ.சாந்தலிங்கம், மதுரை

**திருக்கோவிலூர் கீழூர் விரட்டானேசுவரர் திருக்கோயில், கவிஞர் கூ.பிச்சைப்பிள்ளை, விஜயா பதிப்பகம், உளுந்தூர்ப்பேட்டை, பக்.144, 2016, உரூ.120.**

அட்டவீரட்டானங்களுள் ஒன்றான திருக்கோயிலூர் வீரட்டானேசுவரர் கோயிலில் காணப்படும் வரலாற்றுச் சான்று களான அனைத்துக் கல்வெட்டுகளையும் தொகுத்து ஒரே நூலில் ஆசிரியர் அளித்துள்ளார். இதுபோன்றே தமிழகத்திலுள்ள ஒவ்வொரு கோயிலிலும் உள்ள வரலாற்றுச் சான்றுகள் நூல்களாக வெளியிடப்பபெறவேண்டும். இந்நூலில் அனைத்துக் கல்வெட்டு களின் படங்கள் மட்டுமன்றி முன்னுரையாக ஒவ்வொரு அரசர் காலத்திலும் வெட்டப்பட்ட கல்வெட்டுகள் அவை தரும் கோயில் கொடை, நிருவாகம் குறித்த செய்திகளைச் சிறப்பாக அளித்துள்ளார். மேலும் கல்வெட்டுகள் மட்டுமன்றி சங்ககால இலக்கியத்தில் உள்ள

இவ்வூர் மற்றும் திருமுடிக்காரி பற்றிய குறிப்புகள் இவ்வூர் கோயில் குறித்த இலக்கியப் படைப்புகள், நாயன்மார்களின் இக்கோயில் பற்றிய பாடல்கள் போன்றவற்றையும் தொகுத்தளித்துள்ளது சிறப்புக்குரியது. ஒவ்வொரு மன்னர்காலக் கல்வெட்டுகள் பற்றிய குறிப்புகளில் காலவரிசையில் சில மன்னர் குறிப்புகள் அமையவில்லை. மேலும் பக்.16-18-களில் ஒரே செய்தி மீண்டும் அச்சாகியுள்ளது. கல்வெட்டுகளின் மூல பாடங்களைக் கால நிரலில் அளித்திருந்தால் இதை மூலச் சான்றாகப் பயன்படுத்துவோருக்கு எளிமையாக இருந்திருக்கும். இந்நூல் தமிழக வரலாற்றுக்கு மேலும் ஒரு முக்கிய பங்களிப்பு எனலாம்.

சு. இராசவேலு, தஞ்சாவூர்

**தண்டியலங்கார மூலமும் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் 14ஆவது பட்டம் சுப்பிரமணிய தேசிகர் உரையும்", பதிப்பாசிரியர் ச.கிருஷ்ணமூர்த்தி வெளியீடு, மெய்யப்பன் பதிப்பகம், 53 புதுத் தெரு, சிதம்பரம் 608 001, 480 பக்கம், விலை ரூ.300.**

தமிழில் அணியிலக்கணம் கூறும் நூல்கள் மணிவாசகர் இயற்றிய குவலயானந்தம், திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இயற்றிய மாறனலங்காரம், தண்டி இயற்றிய தண்டியலங்காரம் என்பன.

பன்னூல் பதிப்பாளர் ச.கிருஷ்ணமூர்த்தி பல சுவடிகள், அச்சு நூல்களை விரிவாக ஆய்வு செய்து குறிப்பு என்னும் தலைப்பில் அருஞ்சொற்களுக்குப் பொருள் எழுதி, பிற நூல் மேற்கோள் காட்டி, பல இடங்களில் அணியோடு மேற்கோள் பாடல்களைப் பொருத்திக் காட்டியதுடன் தன் பட்டறிவு தோன்றக் கல்வெட்டு, மெய்க்கீர்த்தி, செப்பேடு, இலக்கிய மேற்கோள் காட்டி மிக விரிவாக எழுதியுள்ளார். விரிவான ஆராயச்சியுரையும் எழுதியுள்ளார். பதிப்பாசிரியர் கடின உழைப்பில் நூலை உருவாக்கியுள்ளார்.

சில ஏடுகளில் மட்டும் உள்ள சிறப்புப் பாயிரத்தில் தண்டியாசிரியரின் தந்தை அம்பிகாபதி என்று குறிக்கப்பெறுவதால் தண்டியைக் கம்பரின் பேரன், ஒட்டக்கூத்தரின் மாணாக்கர் என்ற ச.கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார். இதற்கு இன்னும் வலுவான சான்று தேவை.

1857 ஆண்டுப் பதிப்பில் உரையாசிரியர் "சுப்பிரமணிய தேசிகர்" என்ற பெயர் மட்டும் உள்ளது. முன்னிலை வகித்த தாண்டவராய சுவாமிகளைத் திருவாவடுதுறை ஆதீன வித்துவான் என்ற குறிக்கும் அப்பதிப்பில் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் என்ற குறிப்பு இல்லை.

"பல உரைச் சுவடிகள் எதிலும் சுப்பிரமணிய தேசிகர் பெயர் இல்லை. இன்று திருவாவடுதுறை ஆதீனத்தில் தண்டியலங்கார உரை ஓலைச் சுவடியோ, தாள் சுவடியோ எதுவும் இல்லை" என்று ச.கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார். தேசிகர் காலம் 1790 - 1875. இக்காலத்தில் அச்சுத் தடைச் சட்டம் நீக்கப்பட்டுச் சென்னையில் 10-க்கும் மேற்பட்ட அச்சகங்கள் தோன்றிவிட்டன. எனவே, தேசிகர் உரை எழுதியிருந்தால் பல ஓலைச் சுவடிகள் தொடர்ந்து தோன்ற வாய்ப்பில்லை. தண்டியலங்கார உரை ஓலைச் சுவடிகள் அனைத்தும் தேசிகர்க்கு முற்பட்டவை என்பது தெளிவு. தேசிகர்க்கு முற்பட்ட ஓலைச்சுவடியில் "அம்பலவாணர்", "ஞான தேசிகன்" என்ற இரு சொற்கள் வருவதைக் கொண்டு ஆதீனகர்த்தர் சுப்பிரமணிய தேசிகர் உரை எழுதினார் என்று ச.கிருஷ்ணமூர்த்தி கூறுவது பொருத்த முடையதாகத் தெரியவில்லை.

பதிப்புத் துறையின் மிகச் சிறந்த ஆளுமை பெற்ற மு.அருணாசலம், உ.வே.சாமிநாதய்யர் ஆகியோர் இது தேசிகர் உரை அல்ல. அவருக்கும் முற்பட்ட உரை என்று கூறியுள்ளனர்.

பதிப்பாசிரியர் தம் குறிப்பில் வஞ்சியைக் கருவூர் என்று முதலில் கூறியவர் தேசிகரே என்று கூறியுள்ளார். சிலப்பதிகார அரும்பத உரையாசிரியரே பூவாவஞ்சி என்பதற்குக் கருவூர் என்று கூறியுள்ளார்.

பாடல்களைச் சந்தி பிரித்துப் பதிப்பித்திருக்கலாம்.

(துகடீர் - துகள்தீர், கழறொடி - கழல் - தொடி)

கரூரின் ஒரு பகுதி வஞ்சி, கருவூருக்கு அருகே வஞ்சி இருந்தது போன்ற சில செய்திகள் பொருத்தம் இல்லாமல் உள்ளது. பாடபேதங்களில் சிறந்ததைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பிப்பது பதிப்பாசிரியர் கடமை. மலைமலைவு ஆற்று மலைவுக்கு பொதிகை, காவிரி என்று பாடபேதம் இருக்க இமயம், கங்கை என்ற பாடத்தை ச.கிருஷ்ணமூர்த்தி தேர்ந்துள்ளார்.

பொதுவாக பதிப்பாசிரியர் ச.கிருஷ்ணமூர்த்தி பல அரிய குறிப்புக்களுடன் விரிவாக நூலைப் பதிப்பித்துள்ளார்.

புலவர் செ.இராசு, ஈரோடு

**புலவர் செ.இராசு, கொங்கு வேளாளர் செப்பேடு பட்டயங்கள், 2016, கொங்கு ஆய்வு மையம், ஈரோடு, பக்கங்கள் 288, விலை ரூ.200**

தமிழக வரலாற்றில் கொங்கு நாட்டின் வரலாறு தனித்துவம் பெற்ற வரலாறாகும். தமிழகத்தின் பிற பகுதிகளைக் குறித்த வரலாற்று

நூல்கள் மிகக் குறைந்த அளவில் தான் எழுதப்பட்டுள்ளன. ஆனால் கொங்கு நாட்டின் வரலாற்றைக் குறித்த பல நூல்கள் இதுவரை பல அறிஞர்களால் எழுதப்பட்டுள்ளன. இப்பகுதியின் வரலாற்றையும் சமூக அமைப்பையும் எழுதுவதற்கு மிகுந்த அளவில் தரவுகள் கொங்குப் பகுதியில் கிடைத்துள்ளன. அத்தகைய தரவுகளை வெளியிட்டுத் தமது வாழ்நாள் முழுவதும் தேடி சமூகத்திற்கும் தமிழ வரலாற்றிற்கும் பெருமை சேர்த்து வருகின்ற புலவர் இராசு அவர்களால் பதிப்பிக்கப்பட்ட கொங்கு வேளாளர் செப்பேடு பட்டயங்கள் கொங்குப் பகுதியில் பெருவாரியாக வசித்து வருகின்ற வேளாளர் வரலாற்றையும் சமூக அமைப்பையும் அறிவதற்கான ஆதார நூல்.

இந்நூலில் கொங்கு வேளாளர் தொடர்புடைய செப்பேடுகள் 35-உம் ஓலை ஆவணங்கள் 45-உம் உரிய விளக்கங்களுடன் பதிப்பிக்கப் பட்டுள்ளன. இந்திய நில அளவையர் மெக்கன்சி அவர்களால் 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தொகுக்கப்பட்ட பாளையப்பாட்டு வம்சாவளிகளும் சில ஆவணங்களின் கைப்பிரதிகளும் இந்நூலில் இடம் பெற்றிருப்பது சிறப்புக்குரியது. கொங்குப் பகுதியில் வேளாளர் குறித்த கல்வெட்டுகள் 12-ஆம் நூற்றாண்டிற்குப்பின் மிகுந்த அளவில் கிடைக்கப்பெற்றுள்ளது. செப்பேடுகள் 16-ஆம் நூற்றாண்டு முதல் தான் கிடைக்கின்றன. இவ்வாவணங்களில் கொங்கு வேளாளர்கள் கொங்கு நாட்டில் குடியேறிய செய்தி மிகுந்த அளவில் குறிக்கப் பட்டுள்ளது. அவ்வாறு குடியேறி அவர்கள் காணியாகப் பெற்ற ஊர்களும் புதியதாகப் பெற்ற காணியூர்களின் விவரங்களும் இவ்வாவணங்களில் விரவிக் கிடக்கின்றன. கொங்கு வேளாளர்கள் தமிழுக்கும் புலவர்களுக்கும் மதிப்பளித்தனர். அவ்வகையில் பல புலவர்கள் அவர்களால் ஆதரிக்கப்பட்டமையை இவ்வாவணங்கள் குறிப்பதுடன், சைவ சமயத்திற்கான திருமடங்களுக்குப் பேராதரவு வழங்கியமையையும் பிற சமூகத்தினருடன், ஒற்றுமையுடன் வாழ்ந்தமையையும் ஆவணங்கள் குறிக்கின்றன. இப்பகுதியில் வாழ்ந்த பிற இனத்தவர்களைப் பற்றி அறிவதற்கும் நாட்டுப் பிரிவுகள் எல்லைகள் சமூக வழக்கங்கள், வழக்குகள் அவற்றின் தீர்ப்புகள் ஆகியவை குறித்து அறிவதற்கும் இந்நூல் பெரிதும் ஆதார நூலாக அமையும்.

சு.ராசவேலு, தஞ்சாவூர்

**புலவர் செ.இராசு, பழனி வரலாற்று ஆவணங்கள், 2015, கொங்கு ஆய்வு மையம், ஈரோடு, பக்கங்கள் 200, விலை ரூ.200**

தமிழ்நாட்டில் முருகக்கடவுளின் அறுபடை வீடுகளில் ஒன்றாக விளங்கும் திருவாவினன்குடி எனப்படும் பழனியில் கிடைத்துள்ள

கல்வெட்டுகள், இந்நகரிலுள்ள மாடாலயங்களில் பாதுகாக்கப்பட்டு வரும் செப்புப் பட்டயங்கள் ஆகியவற்றை தொகுத்தளிக்கும் நூலாக இந்நூல் அமைந்துள்ளது. 17-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பட்டயங்கள் இவ்வூர் மடாலயங்களிலிருந்து பெறப்பட்டு பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவற்றில் பல்வேறு பட்டயங்கள் சாதிகள் உறவின் முறையினரால் ஏற்படுத்திய மடங்களைக் குறிப்பிடுகின்றன. இம்மடங்கள் தங்கள் சமூகத்தைச் சார்ந்தவர் கோயிலுக்கு யாத்திரிகர்களாக வரும்பொழுது அவர்கள் தங்குவதற்கும் இலவச உணவு வழங்குவதற்கும் பயன்படுத்தப்பட்டமையை ஆவணங்கள் குறிக்கின்றன. அவற்றுடன் நாட்டுப் பிரிவுகள், ஊர்களின் பெயர்கள் ஆகியவை குறித்து அறிவதற்கும் இந்நூல் பயனுள்ளதாக அமையும்.

பழனியில் இருக்கின்ற கோயில்களின் கல்வெட்டுகளில் பெரும்பாலும் கோயிலுக்குக் கொடைகள் குறித்த செய்திகள் உள்ளன. பழனி முருகன் கல்வெட்டுகளில் வேலாயுதப் பெருமாள், சுப்பிரமணிய பிள்ளையார், இளைய நயினார், தேவ சேனாபதி என பலவாறாக வழங்கப்பட்ட செய்தியை ஆசிரியர் குறித்துள்ளார். இப்பகுதியிலுள்ள ஆறுகள், குளங்கள் நில வகைகள், ஊர்கள், கொங்கு நாட்டின் தலைநகரமாக விளங்கிய தாராபுரம் போன்றவை இவ்வாவணங்களில் குறிக்கப்பட்டுள்ளன. பிற்சேர்க்கையாக பழனியைச் சார்ந்த இலக்கியங்கள், பதிகங்கள், ஓவியங்கள் குறித்த செய்திகள், ஆவினன்குடியிலிருந்த தொன்மையான ஊர்கள், கொங்கு நாட்டின் நாடுகள் பட்டியல், கொங்கு மண்டல சதகத்தில் பழனி, திருப்பணிகள் ஆகியவைப் பட்டியலிடப்பட்டுள்ளன. பழனி திருத்தலத்தின் வரலாற்றையும் இங்கு அமைந்துள்ள மடங்கள் அவற்றுடன் தொடர்புடைய சமூக அமைப்புகளை அறிவதற்கு இந்நூல் சிறந்த சான்றாதார நூலாக அமையும்.

சு.ராசவேலு, தஞ்சாவூர்

**ஆறுமுக சீதாராமன், சங்கரன்ராமன், 'தமிழக முத்திரைகள் மோதிரங்கள்', 2016, தனலட்சுமி பதிப்பகம், தஞ்சாவூர், 9894578440, பக்கங்கள் 14 + 276, விலை ரூ.600**

மனித நாகரிகப் படிநிலைகளில் படங்களும் எழுத்துக்களும் சேர்ந்ததின் பிறகு மனித உரிமை மற்றும் ஆளுமையை வெளிப்படுத்தும் அடையாளங்களாக முத்திரைகள் பயன்பாட்டிற்கு வரத்தொடங்கின. அடுத்த நிலையில் அழகு கூட்டப்பட்ட பொருள்களாகக் கணையாழிகள் வழக்கிற்கு வந்தன. வணிகர்களும்,

அரசுகளும் இவற்றை வெகுவாகப் பயன்படுத்தியதை சிந்துவெளி முதற்கொண்டு பல நாகரீக அகழாய்வுகளிலும் நாம் அறிகின்றோம். சீதைக்கு இராமர், கோவலனுக்கு மாதவி அனுப்பிய செய்திகளில் கணையாழியும், முத்திரையும் நமக்கு இலக்கியமாக அறியக் கிடைக்கின்றன. இவ்வகையில் தமிழக வரலாற்றில் வரலாற்றுத் தொடக்ககாலம் முதல் அண்மைக் காலம் வரை இவை பயன்பாட்டில் இருந்தமையை இந்நூல் நல்ல பல படங்களுடன் எடுத்துக் காட்டுகின்றது.

முதல் பகுதி முத்திரைகள் பற்றியது. சங்கம், சேர, சோழ, பாண்டியர், நவாப்பு, மராட்டியர், கோயில், தனிநபர் என்றும் ஸ்ரீவஸ்தம், சங்கு, சக்கரம், யானை, சிங்கம், நந்தி, குதிரை, பறவை, அம்மன், கணபதி, நண்டு, தேள், கண்ட பேருண்ட பறவை என்றும் சுடுமண், உலோகம், மரம் என்றும் இயன்ற அளவு வகைப்படுத்தப் பட்டுத் தனித்தனித் தலைப்புகளில் 132 பக்கங்களில் 167 முத்திரைகளின் 414 படங்களுடன் இந்நூலில் விளக்கம் தரப்பட்டுள்ளது. இரண்டாம் பகுதியில் மோதிரங்கள், குறியீட்டு மோதிரங்கள் அரச இலச்சினை பொறித்த மோதிரங்கள், சங்கம், சோழர், பிற்காலச் சோழர், பாண்டியர், மராட்டியர், நவாப்பு, தெலுங்கு என்றும் நந்தி, சிங்கம், மயில், சங்கு, குதிரை அனுமன், வராகம், லிங்கம் என்றும் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு 140 பக்கங்களில் 214 மோதிரங்களின் 453 படங்களுடன் இந்நூலில் விளக்கம் தரப்பட்டுள்ளது.

இவை அனைத்தும் நூலாசிரியர் இருவரும் சேகரித்தவை என்பதால் இவற்றின் முன், பின், மேல், கீழ், பக்கவாட்டுத் தோற்றங்கள் இயன்ற அளவு படமெடுத்து அச்சிடப்பட்டுள்ளன. கிடைத்த இடம், எடை, நீள, அகல, விட்ட அளவுகள், உலோகம், கல், சுடுமண் முதலிய விவரங்களும் உள்ளன. ஒரு முத்திரை அல்லது மோதிரத்தின் வேறுபட்ட / மாறுபட்ட அமைப்புகளும் தரப் பட்டுள்ளன. நூலாசிரியர்கள் பல நூல்களைத் தாங்களே வாங்கியும் பார்த்தும் இந்நூலை எழுதியமை அவர்கள் தரும் துணை நூல் பட்டியல் மூலம் தெளிவாகிறது. தமிழ் - பிராமி, தமிழ், மராட்டி, தெலுங்கு, நாகரி, ஆங்கிலம் முதலிய எழுத்துப் பொறிப்புகளும் படித்துத் தரப்பட்டுள்ளன. பிற்காலத் தனியார் முத்திரை எழுத்துக்களை வாசகர்களே படித்தறியும் வகையில் தெளிவான படங்கள் உள்ளன. எனினும் இவை முத்திரைகள் என்பதால் தலைகீழாகவும், இடம் வலமாகவும் உள்ளவை. சிலவற்றைக் கணினி மூலம் திருப்பி அச்சிட்டோ, மையிட்டுத் தாளில் பதித்தோ

படங்களை வெளியிட்டிருந்தால் அவற்றின் உண்மைத்தன்மையும் நூலாசிரியர்களின் படித்தறிந்த கடின உழைப்பும் எளிதாக வெளிப்பட்டிருக்கும். இந்நூல் மேலாய்வுகளுக்கு நல்ல அடித்தளம் அமைத்துத் தந்துள்ளது என்று சொல்லலாம். நன்கு ஆவணப்படுத்தப் பட்டு ஒரு சேர அமைந்த முதல் நூலும்கூட. தமிழ்மொழியில் நூல்கள் இவ்விதம் வருவது வரவேற்கத்தக்கது.

சு.இராசகோபால், சென்னை

**D.Dayalan, 'Cave temples in the region of the Pandya, Mutharaiya, Atiyaman and Ay dynasties in Tamil Nadu and Kerala', 2014, Archaeological Survey of India, 3 part's 1364 + 58 pages, 313 plates, 172 figures, Rs.2150.**

இந்திய தொல்லியல் பரப்பாய்வுத் துறையின் கீழமைந்த கோயில்கள் ஆய்வுத் திட்டத் தென்னகப் பிரிவில் பல்லவர் குடைவரைகள் குறித்த கூ.ரா.சீனிவாசன் அவர்களின் நூல் பல்லாண்டுகளுக்கு முன் 1964-இல் வெளிவந்ததின் பிறகு நீண்ட இடைவெளிக்குப் பிறகு தமிழகத்தில் உள்ள பிற குடைவரைகள் பற்றிய முழுநூலாக இந்நூல் வெளிவந்துள்ளது சிறப்பாகும்.

மௌரியர் காலத்தில் பீகார் மாநிலப் பகுதியில் முதல் நிலைக் குடைவரைகள் நல்ல உறுதியான பாறைக் குன்றுகளில் அமைக்கப்பட்டன. அடுத்து வந்த நூற்றாண்டுகளில் கடம்பர், சாளுக்கியர், பல்லவர் அரசுகள் செங்கல் மரத்தால் ஆகிய கோயில்களுக்கு மாற்றாகக் குடவரைக்கோயில்களை எடுத்தன. மகாராஷ்டிரத்தில் அவை எளிய மணற்கல் குன்றுகளில் எடுக்கப்பட்ட நிலையில் தமிழகத்தில் கடினமான உறுதியான கற்குன்றுகளிலேயே அவை அமைந்துள்ளன. தமிழகத்தின் வடபகுதியில் அமைந்த குடவரைகளைவிட (36) பாண்டிய நாடு மற்றும் தென்பகுதியில் அமைந்ததவை எண்ணிக்கையில் அதிகம் (73). இந்நூலில் திருச்சிராப்பள்ளி தொடங்கி திருச்செந்தூர் மற்றும் கேரளம், கேரளம் சார்ந்த பகுதிவரை உள்ள திருநந்திக்கரை, விழிஞம், கொட்டுகல் வரை ஒவ்வொரு குடவரையும் நன்கு விளக்கமாக அளவுகளுடன் ஆவணப்படுத்தப்பட்டுள்ளன. சிற்பங்கள், அவற்றின் அமைப்பு, கட்டடக் கூறுகள், அவற்றின் விவரம், தனித்தன்மை அனைத்தும் சொல்லப்பட்டுள்ளது. ஜி.பி.எஸ். கருவிகளின் துணையோடு இக்குடைவரைகளின் அமைவிடம் சுட்டப்படுவதால் கூகுள் நிலப்பட சொடுக்கு வாயிலாக நாம் இவ்விடங்களைப் பறவைப் பார்வையில் பார்க்கவும் சுற்றுச்சூழல், சாலை அமைப்பு, நில அமைப்பு முதலியவற்றைப் பார்க்கவும் முடியும்.

அமைவிடத்தின் தொல்லியல், கல்வெட்டுச் செய்திகள், வரலாறு, இலக்கியம், தொன்மக் கதைகள், வழக்காறுகள் என அனைத்தும் இயன்ற அளவில் தரப்பட்டுள்ளன. முன்னதாக இக்குடவரைகளை ஆய்வு செய்தோரின் கருத்துக்களும் நடுநிலையோடு மெருகேற்றாமல் தரப்பட்டுள்ளன. மலையடிக்குறிச்சி, திருப்பரங்குன்றம் உமையாண்டார் குடவரைகள் தொடக்கத்தில் சமணக் குடவரைகள் பின்னாளில் சைவமத குடவரைகளாக மாற்றப்பட்டன என்று பிறர் உறுதியாகச் சொல்லும் செய்திகளையும் இந்நூலாசிரியர் நடுநிலையாகச் சொல்வது குறிப்பிடத்தக்கது.

திருச்செந்தூரில் முருகர் கருவறை, பஞ்சலிங்கேஸ்வரர் கருவறை, விஷ்ணு கோயில், வள்ளி குகை அனைத்தும் ஒரு மணற்கல் குன்றில் அமைந்த குடவரைகள் என்றும் பின்னாளில் ஏற்படுத்தப்பட்ட கட்டுமானப் பகுதிகளால் வள்ளி குகை தவிர ஏனையவை மறைந்துள்ளன என்றும் எடுத்துக்காட்டுவது சிறப்பாக உள்ளது. முடிக்கப்படாத குடவரைகளான, சித்தன்னவாசல் அருகில் மாங்குடி, மாங்குளம் அருகில் பாறைமலையான் அம்மன்பட்டி ஆகியவற்றைப் பற்றி விளக்கிக் கூறுவதும் சிறப்பாக அமைகிறது.

முதல் இரண்டு பகுதிகளில் குடவரைகளின் விளக்கங்கள் உள்ளன. மூன்றாம் பகுதியில் படங்களும் வரைபடங்களும் மட்டுமே 490-க்கு மேற்பட்ட பக்கங்களில் உள்ளன. நீண்ட வரைபடங்கள் மடித்து வைக்கப்பட்டுள்ளன. இம்மூன்றாம் பகுதியில் படங்களைப் பார்க்கும்போதே முன் பகுதிகளில் சொல்லப்பட்ட விவரங்களை அறியவும் முதல் இரு பகுதிகளைப் படிக்கும்போது மூன்றாம் பகுதியில் உள்ள படங்களைப் பார்க்கவும் ஒரு வகை ஆவல் தோன்றுகிறது. ஒவ்வொரு தலைப்பிலும் குடவரைகளின் குறிப்பிடத்தக்க செய்திகளின் தொகுப்பு இறுதியில் தரப்பட்டுள்ளது.

பின்னிணைப்பாக குடவரைகளின் பட்டியல்கள், இந்த ஆய்வுத் திட்டத்திற்குப் பயன்படுத்தப்பட்ட தரவுச் சீட்டுகள், 50-க்கு மேற்பட்ட பக்கங்களில் கல்வெட்டுகளின் வாசகங்கள், கட்டட - சிற்பக் கலைச்சொல் பட்டியல் துணைநூற் பட்டியல் ஆகியவை சேர்க்கப்பட்டுள்ளன.

பல வருடங்கள் இந்திய பரப்பின் பல்வேறு பகுதிகளிலும் பணியாற்றிக் கிடைத்த பட்டறிவைப் பயன்படுத்தி பணி நிறைவுக்குச் சில ஆண்டுகள் முன்னதாக இந்நூல் எழுதப்பட்டதால் நூலாசிரியர் முனைவர் து.தயாளனின் இந்நூல் தொல்லியலின் எல்லாப்

பரிமாணங்களையும் பெற்று விளங்குகிறது. ஆய்வாளர் கள், ஆர்வலர்களின் தனிப்பட்ட முறையில் தங்கள் நூலகங்களிலும், கல்லூரி மற்றும் பொதுத்துறை நூலகங்களிலும் இடம் பெறவேண்டிய நூலாக இது அமைந்துள்ளது.

அடுத்த நிலையில்,பரந்து பரவிக் கிடக்கும் பல்லவர், பாண்டியர், சோழர் கற்றளிகளுக்கும் இதுபோல் ஒரு நூல் அமைந்தால் கோயிலாய்வும், தொல்லியலை அறிந்து பேணும் போக்கும் கூடும் என்பதில் ஐயமில்லை.

சு.இராசகோபால், சென்னை

***டி.விஸ்வநாதன் (எ) நந்தர், 'கொங்குப் பெருமகன் வல்வில் ஓரி', 2015, நந்தர் பதிப்பகம், 92455 66545, விலை ரூ.250, பக்கம் 168.***

சங்ககால வள்ளல், கொல்லிமலைத் தலைவன் வல்வில் ஓரியை 'வெள்ளாளன்' என்று காட்டமுனையும் நூல். கொல்லிமலையை வெகுவாகப் பல ஆய்வாளர்களுடன் கள ஆய்வு செய்து கொல்லிமலை பற்றிய பல செய்திகளும், குவளை மலர் பற்றிய செய்திகளும் இந்நூலில் திரட்டித் தரப்பட்டுள்ளன. ஓரி மற்றும் கொல்லிமலை பற்றிய பல சங்கப் பாடல்களும் சேர்த்துத் தரப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் காணப்படும் ஆதன், அந்தை என்ற பெயர்களை இன்றைய கொங்கு வெள்ளாளர் குலங்களான ஆதிகுலம் அந்தை குலம் ஆகியவற்றுடன் தொடர்புபடுத்த இந்நூல் முனைந்துள்ளது. இக்குல குருக்களின் இடங்களுக்குச் சென்று ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. கோவை, திருப்பூர், ஈரோடு மாவட்டக் கல்வெட்டுத் தொகுதிகளில் காணப்படும் இடைக்காலப் பெயர்களில் 70-க்கு மேற்பட்ட வெள்ளாளர் பெயர்கள் திரட்டப்பட்டு இந்நூலில் தரப்பட்டுள்ளன. காணிப் பாடல்கள், பாளையப்பட்டு வம்சாவளி முதலிய தரவுகளும் துணைக்குச் சேர்க்க முயற்சிக்கப்பட்டுள்ளது. பெரும் உழைப்பில் உருவாக்கப்பட்டுள்ள இந்நூல் ஆய்வாளர்களின் மேலாய்வுக்கு உரிய நூல்.

சு.இராசகோபால், சென்னை

***'பழனி தேசிகர் குடும்பத்தாற்கு நகரத்தாரின் தர்மசாசன அறப் பட்டயங்கள்' 2015, கோவிலூர் ஆதீனம். விலை குறிக்கப்படவில்லை. பக்கம் 64, சுவடி. படங்கள் 9 பக்கங்கள்.***

பழனி வழிபாட்டுக் கால்நடைப் பயணம், காவடிப் பயணம் தமிழகத்தின் வரலாறு தெரிய 500 ஆண்டுகளாக நிகழ்ந்து வரும்

பண்பாட்டு மரபாகும். பல்வேறு சமூகத்தினரும் இதனைத் தொடர்ந்து கடைப்பிடிப்பதால் பல சமூகத்தினரிடமும் பட்டயங்களும் பழனியில் அவர்களுக்கென்றே மடங்களும் உள்ளன. நத்தம் பகுதியில் தொந்திலிங்க நாயக்கர் மற்றும் பிற நாயக்கர்கள் அமைத்த கல் மண்டபங்களும் கல்வெட்டுகளுடன் உள்ளன. கால்நடையாக வழிபாட்டுப் பயணம் செய்பவர்களுக்கு இம்மடங்கள் இளைப்பாறவும் தங்கவும் உதவியுள்ளன.

இவ்வகையில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் பழனி பகுதிக்கு உப்பு வணிகம் மேற்கொண்டு வணிக இலாபத்தில் ஒரு பங்கு முருகனுக்கு ஒதுக்கி அதன் பெருக்கத்தில் பழனியில் அன்னதான மடம் ஏற்படுத்தி அம்மடத்தில் தெய்வசிகாமணி பண்டாரம் அவர் மனைவி பார்வதியம்மாளுக்கு உரிமைகள் வழங்கி, வழிபட்டு வந்துள்ளனர். இது தொடப்பான அறப்பட்டையங்கள் ஏற்கனவே 'நகரத்தார் அறப்பட்டயங்கள்' என்ற பெயரில் இரண்டு பதிப்புகள் வெளிவந்துள்ளன.

கோவிலூர் ஆதீனம் அதனை மீள் பதிப்பு செய்ததோடு கூடுதலாக தெய்வ சிகாமணி பண்டாரம் குடும்பத்தாரிடம் உள்ள பிற சுவடிப் பட்டயங்களைப் பெற்று முனைவர் பெருமாள், பேராசிரியை வள்ளி ஆகியோர் உதவியுடன் சுவடிகளின் படங்களோடு வாசகங்களையும் பதிப்பித்துள்ளது.

சகம் 1703 பொ.ஆ. 1781-ல் எழுதப்பட்ட இப்பட்டய ஓலைகள் அக்கால எழுத்து நடையிலேயே உள்ளன. தேசிகர்களுக்குத் தரப்படும் விருது, மரியாதை வாசகங்கள் அக்கால நடையில் பொதுவாகப் பல பட்டயங்களிலும் வருபவை. நாணயமாற்று வராகனில் குறிக்கப்படுகிறது. துறவிகள் பெட்டகக் கோயில்களில் வழிபடும் தெய்வங்களை எடுத்துச் செல்தல், நகரத்தாரின் கோயில்கள், உட்பிரிவுகள், நடைபயணத்தில் குன்றக்குடி ஆதீனத்தின் பங்கு, வேல் படியால் கால்ப்படி பஞ்சாமிர்தம் என்ற பல சமூகச் செய்திகள் இவற்றில் உள்ளன. மாதிரிக்காக வெளியிடப்பட்டுள்ள ஓலைகளின் படங்கள் தெளிவாக உள்ளமை படித்துப் பழக உதவுவதாக உள்ளது.

சு.இராசகோபால், சென்னை

**கோ.எழில் ஆதிரை, செம்பியன் மாதேவி கலைக் கோயில்கள், தொகுதி 1 கோனேரிராசபுரம், விலை ரூ. 400, இயல், ரோகிணி நூலகம், 6. பெருமாள் வடக்குத் தெரு, வெளிப்பாளையம், நாகப்பட்டினம், 2015**

தமிழக வரலாற்றில் சோழர்களின் ஆட்சியும் மாட்சியும் மிகச் சிறந்த நிலையில் அமைந்திருந்ததற்கான காரணங்களில் மிகத்

தலையானதாக விளங்கியது அவர்கள் கலைவளர்ச்சிக்கு ஆற்றிய பெரும்பங்காகும். கோயில்களை அமைத்ததுடன் அவற்றை கலைகளின் பெட்டகங்களாகவும் மாற்றினர். சோழர் கலைக்கும் கட்டிடக்கலைக்கும் அரச மகளிர்கள் பெரும்பங்கை ஆற்றினர். சோழப் பேரரசில் உயர் நிலையிலிருந்த அரச மகளிர்களில் பெரும் பெயர் பெற்ற செம்பியன் மாதேவியார் அவர்களின் பங்களிப்பு மகத்தானது. செம்பியன் மாதேவியாரின் கணவர் கண்டராதித்தர் சைவத்தில் சிறந்த பற்று மிக்கவராக விளங்கி சைவ சமயக் குரவர்களில் ஒருவராகப் போற்றப்படுவதற்கும் அவருக்குத் துணையாக நின்ற செம்பியன் மாதேவியாரும் காரணமாக விளங்கினார்.

தமிழகத்தில் தொன்மையான செங்கல் தளிகளை கற்றளியாக மாற்றிய பெருமை இந்த அம்மையாருக்கு உண்டு. புணரமைப்பின் பொழுது அக்கோயிலின் பழமை மாறாமல் அழகு மிகு சிற்பங்களையும் இடம் பெறச் செய்து சிறப்பு செய்தவர் செம்பியன் மாதேவியார். இவ்வம்மையார் கட்டிய கோயில்களை தனித்தனியாக ஆய்வு செய்து செவ்விய முறையில் வரலாற்றைப் படைத்துள்ளார் நூலாசிரியர். செம்பியன் மாதேவியார் கட்டிய கோயில்களின் முதல் வரிசையில் நூலாசிரியர் படைத்துள்ள முதல் தொகுதியில் கோனேரிராசபுரம் வரலாறும் இவ்வூரின் கோயில் வரலாறும் திறம்பட ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இந்நூல் எட்டு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. வரலாற்றுப் பின்னணி, இலக்கியம், வரலாறு, கோயில் கலை போன்றவை தக்க சான்றுகளுடனும் கள ஆய்வுத் தரவுகளுடனும் எழுதப்பட்டுள்ளன. நீண்ட துணை நூற்பட்டியல் வரைபடங்கள், ஒளிப்படங்கள் போன்றவை இந்நூலின் பின்னிணைப்பில் இடம் பெற்றுள்ளன. இவை மேற்கொண்டு ஆய்வு மேற்கொள்பவர்களுக்கு உதவியாக அமையும். எளிய நடை, சிற்பங்களை வகைப்படுத்தி இறை உருவங்களை விளக்கியுள்ளமை, நூல் கட்டமைப்பு, தரமான தாள்கள், அச்சுக்கோப்பு ஒளிப்பட அமைப்பு போன்றவை இந்நூலை மேலும் மெருகூட்டுகின்றன. செம்பியன் மாதேவியின் கோயில் கலைப் பணிகளை அறிய இந்நூல் மிகப் பயனுள்ளதாக அமையும்.

சு. இராசவேலு, தஞ்சாவூர்

**கோ. எழில் ஆதிரை, செம்பியன் மாதேவி கலைக்கோயில், திருவாரூர், விலை ரூ. 70, ரோகினி நூலகம், 6. பெருமாள் வடக்குத் தெரு, வெளிப்பாளையம், நாகப்பட்டினம், 2015**

செம்பியன் மாதேவியின் கலைப்படைப்புகளில் திருவாரூர் தியாகராஜ ஆலயத்தின் இராண்டாம் திருச்சுற்று மாளிகையின் தென்

கிழக்கு மூலையில் செம்பியன் மாதேவியால் கட்டப்பட்ட அழகுக் கோயில் அரநெறீஸ்வரம் எனப்பட்ட அசலேசுவர ஆலயம். இவ்வாலயத்தின் வரலாற்றையும் கோயில் கலை அமைப்பையும் சிற்பக்கலைக் கூறுகளையும் கல்வெட்டு மற்றும் கள ஆய்வுகளின் வழி சிறப்பாக ஆய்வு செய்து எழுதப்பட்டுள்ளது இந்நூல். இந்நூல் எட்டு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வரலாற்றுப் பின்னணியுடன் முதல் இயல் தொடங்குகிறது. இரண்டாவது இயலில் கோயிலின் அமைப்பும் அடுத்தடுத்த இயல்களில் தலபுராணச் செய்திகள் கல்வெட்டுத் தரவுகள், கட்டடக்கலை அமைப்பு, சிற்பக் கூறுகள், ஓவியச் செய்திகள் போன்றவை இடம் பெற்றுள்ளன. கட்டடக்கலை அமைப்பில் விமானத்தின் அமைப்பு கருவறை மண்டபங்கள் தூண்களின் கலை நயம் போன்றவை எடுத்தியம்பப்பட்டிருக்கின்றன. இவ்வாலயத்தில் உள்ள விமான தெய்வங்கள் முதல் அனைத்து வகை சிற்பங்களின் சிற்பக்கலை நுணுக்கங்கள் விரிவாக விளக்கப் பட்டுள்ளன. இக்கோயிலில் இடம் பெற்றுள்ள மாராட்டியர் கால ஓவியங்களை ஆய்வு செய்து தனி இயலாக ஆசிரியர் இடம் பெறச் செய்துள்ளமை சிறப்புக்குரியது. சிற்பக்கலை அமைப்பையும் கோயில் கலை வரலாற்றையும் அறிய விரும்பும் ஆர்வலர்களுக்கும் ஆய்வாளர் களுக்கும் இந்நூல் பயனுள்ளதாக அமையும். அழகான அச்சுப்பதிப்பு நேர்த்தியான கட்டுமானத்துடன் இந்நூல் இந்நூலாசிரியரால் படைக்கப்பட்டுள்ளது. வரலாற்றுப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற பின்னும் கல்வெட்டு கோயில் கலை ஆகியவற்றைத் தேடித்திரிந்து தக்க ஆய்வு நூல்களை எழுதி வரும் இந்நூலாசிரியர் பாராட்டுக்குரியவர். சோழர் வரலாற்றில் மகத்துவம் பெற்ற செம்பியன் மாதேவிக்கு வைக்கப்பட்ட மணிமகுடமாக இந் நூலாசிரியரின் ஆய்வுகளும் இடம் பெற்றுள்ளமை பாராட்டுக்கு உரியதாகும்.

சு. இராசவேலு, தஞ்சாவூர்

## அஞ்சலி

### முனைவர் பெரியகருப்பன் (எ) தமிழண்ணல்

*தோற்றம் : 12.08.1928* *மறைவு : 29.12.2015.*



இன்றைய சிவகங்கை மாவட்டம் நெற்குப்பை கிராமத்தில் பிறந்த இவர் பள்ளி ஆசிரியராக வாழ்க்கையைத் தொடங்கி தொடர்ந்து தமிழைக் கற்று மதுரை தியாகராசர் கலைக்கல்லூரியில் விரிவுரையாளராக விளங்கினார். பின்னர் முனைவர் பட்டம் பெற்று மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவராக மிளிர்ந்தார். இவரது வழிகாட்டலில் பல நூறு மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டம் பெற்று மேல்நிலை எய்தியுள்ளனர். ஒப்பியல் இலக்கியம் என்னும் புதிய துறையைத் தமிழ் உலகிற்கு அறிமுகம் செய்த முன்னோடிகளில் இவரும் ஒருவர். இவரது புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு மாணவர் களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றது. சிறந்த கவிஞரான இவர் பொற்கிழி விருது பெற்றவர். தனித்தமிழில் ஆர்வம் கொண்டு தினமணி நாளிதழில் பல அரிய கட்டுரைகளை எழுதினார். தமிழ் மொழியைச் சிறுமைப்படுத்த முனையும் எவரையும் எதிர்கொண்டு போராடி வெற்றி பெறுபவர்.

தொல்லியலின் பால் ஈடுபாடு கொண்டு தாமாகவே தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினராக இணைந்தவர். இரண்டாவது ஆவணம் வெளியீட்டு விழாவை மதுரையில் நடத்துவதற்குத் துணை நின்றவர். புதுக்கோட்டையில் நிகழ்ந்த தொல்லியல் கழக மாநாட்டிலும் கலந்து கொண்டவர். ஏராளமான தமிழ் நூல்களை எழுதியுள்ள முனைவர் தமிழண்ணலின் மறைவுக்குத் தமிழகத் தொல்லியல் கழகம் தன் ஆழ்ந்த இரங்கலைப் பதிவு செய்கிறது.

### முனைவர் வைரவேல்

மதுரை மாவட்டம் மேலூர் அரசினர் கல்லூரி வரலாற்றுத் துறையில் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற முனைவர் வைரவேலு அவர்கள் தமிழகத் தொல்லியல் கழகத்தின் தொடக்ககால உறுப்பினர். மதுரையில் இரண்டாம் ஆவணம் இதழ் வெளியீட்டு விழாக் கருத்தரங்கு சிறக்க பல வழிகளிலும் துணி புரிந்தவர்.

பாண்டிய நாட்டுப் பகுதிகளில் கள ஆய்வில் தீவிரமாக ஈடுபட்டவர். பல காலம் உடல் நலிவுற்று அண்மையில் இயற்கை எய்திய வைரவேல் அவர்களுக்கு தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறது.

### முனைவர் வீ.மாணிக்கம்

தேனி வட்டாரத்தில் பிறந்த வீ.மாணிக்கம் அவர்கள் கல்லூரியில் கால் வைக்காமலேயே படித்துக் கல்லூரிகளில் வரலாற்றுத் துறைப் பேராசிரியராகப் பணியாற்றி நிறைவு பெற்றவர். புதுக்கோட்டை மாமன்னர் கல்லூரியில் பணி புரிந்தபோது அமரர் கோ.கேசவனின் தொடர்பால் தனது ஆய்வுகளில் மார்க்சீய அணுகுமுறையின் பால் செலுத்தியவர். அவரது நூல்களான கொங்கு நாடு, தமிழர் வாழ்வியல், புதுக்கோட்டை வரலாறு, டீசூ ழஜளுகூடீசுலு ஹசூனு ழஜளுகூடீசுஜடீழுசுஹஞழலு போன்றவை அவரது நுண்மாண் நுழைபுலத்தை வெளிப்படுத்தும். அகவை முதிர்வு காரணமாக அண்மையில் காலமான முனைவர் வீ.மாணிக்கம் தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினரும் ஆவார். அன்னாரின் மறைவு குறித்துத் தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறது.

### பேராசிரியர் நொபோரு கராஷிமா

தோற்றம் : *24.04.1933* மறைவு : *26.11.2015*

பேராசிரியர் நொபோரு கராஷிமாவின் இயற்பெயர் (இட்ட பெயர்) நொபோரு. குடும்பப் பெயர் கராஷிமா. தந்தை பெயரை முன்னொட்டாகச் சேர்த்துக்கொள்வது வழக்கமில்லை. பொதுவாகக் குடும்பப் பெயரிலேயே அவரைக் குறிப்பிடுவது வழக்கம். *1967*-ல் கல்விப் பணியை தோக்கியோ அயல் மொழிகள் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகத் தொடங்கினார். பின்பு *1974*-ல் தோக்கியோ பல்கலைக்கழகத்தில் சேர்ந்து ஆசிய வரலாற்று இணைப் பேராசிரியராகவும், *1984-94*-ல் பேராசிரியராகவும் பணியாற்றினார். இக்காலத்தில் தென்னிந்திய வரலாற்றுக்கு முதலிடம் கொடுத்து பல நல்ல மாணவர்களை உருவாக்கினார். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாள மொழிகளைக் கற்க ஊக்கப்படுத்தி அவ்வப் பகுதி வரலாற்றில் ஆராய்ச்சி மேற்கொள்ளச் செய்தார். இந்த முயற்சியின் நல்ல



விளைவை சென்ற ஆண்டு அவர் பதிப்பித்து வெளியான சுருக்கமான 'தென்னிந்திய வரலாறு; பிரச்சினைகளும் விளக்கங் களும்' என்ற நூலில் காணலாம். 1994 - 2004ல் தோக்கியோவில் உள்ள தைஷோ பல்கலைக்கழகத்தில் இந்தியவியல் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றார்.

கல்வெட்டாய்வில் புள்ளியல் முறைகளைக் கையாண்டு புதுவகையான ஆராய்ச்சிக்கு வித்திட்ட பெருமை அவருக்குண்டு.

ஜப்பான் புத்தமதம் சார்ந்த நாடு என்ற வகையில் சமஸ்கிருதக் கல்விக்கே செல்வாக்கு இருந்தது. அதற்கு மாறாக தமிழ் மொழிச் சான்றுகளை வைத்து வரலாறு எழுதலாம் என்று முனைந்தது அவர் செய்த ஒரு புரட்சிகரமான மாற்றமாகும். அப்போது தொடங்கி தன் வாழ்நாள் முழுக்க தமிழ்க் கல்வெட்டுக்களையே தன் ஆராய்ச்சிப் பணிக்கு அடிப்படையாகக் கொண்டார். 10 - 11ஆம் நூற்றாண்டு வரை பெரும்பாலும் சோழர் பகுதியில் நிலம் கூட்டுடமையாக இருந்தது. அதன் பின் சிறுகச் சிறுக தனி உடைமை வளர்ந்து 13ஆம் நூற்றாண்டளவில் அது முழுமையடைந்தது. அந்த நிலையில் வளமான பகுதிகளில் பெரும் நிலக்கிழார்கள் தலை தூக்கும் நிலை ஏற்பட்டது என்பது கராஷிமாவின் முக்கிய ஆய்வு முடிவுகளில் ஒன்று. இதைத் தொடர்ந்து விஜயநகர அரசு கால வரலாற்றில் ஈடுபட்டார். இதிலும் தமிழக கல்வெட்டுகளை மையமாக வைத்து அக்கால நாயக்க முறை ஆட்சி பற்றி விரிவாக ஆராய்ந்தார் நாயக்கன் / நாயக்கர் என்ற சொல் பின்னால் சில ஜாதிகளைக் குறிக்கும் பெயராக மாறினாலும் 15 - 16ஆம் நூற்றாண்டுகளில் அச்சொல் முதலில் படைத் தலைவர்களையும் தொடர்ந்து குறுநில அரசுத் தலைவர்களையும் குறிக்கவே பயன்பட்டது. இந்த நாயக்கத் தலைவர்கள் முதலில் விஜயநகர அரசு அலுவலர்களாகத் தொடங்கி நாளடைவில் தன்னாட்சி செய்யும் வட்டாரத் தலைவர்களாக மாறினார்கள் என்பது கராஷிமாவின் முக்கிய கருத்து.

சோழர், பாண்டியர், விஜயநகர அரசு கால வருவாய்த துறைச் சொற்களைப் பற்றிய புள்ளியியல் முறை ஆய்வுகள், சோழர்கால ஆட்பெயர்களும் பதவிகளும் பற்றிய ஆய்வு, தென்னிந்திய வணிகக் குழுக்கள் பற்றிய ஆய்வு ஆகியன இவரும் வேறு சில இந்திய ஆய்வாளர்களும் இணைந்து செய்தவை. தென்னிந்தியா - தென்கிழக்கு ஆசிய நாடுகள் இடையே நிகழ்ந்த வணிகப் பண்பாடு பரிமாற்றங்கள் பற்றிய ஒரு பெரிய ஆய்வுத் திட்டத்திலும்,

தென்னிந்தியாவில் கடற்கறைப் பட்டினங்களில் காணப்படும் சீன வணிகப் பீங்கான்கள் பற்றிய ஆய்வுத் திட்டத்திலும் பல இந்திய ஜப்பானிய ஆய்வாளர்கள் இணைந்து பங்கேற்றார்கள். கல் வெட்டாய்வுக்காகத் தமிழ் கற்ற கராஷிமா அதைத் தன் மாணவர்களுக்கும் அறிமுகப்படுத்தினார். அந்த வகையில் ஜப்பானில் முதலில் தமிழை அறிமுகப்படுத்தியவர் அவர். 1966-ல் முதல் உலகத் தமிழ் மாநாட்டில் சோழர்கால ஊரமைப்பு பற்றிய கட்டுரை படித்த அவர் தொடர்ந்து நடந்த ஏழு மாநாடுகளில் ஒன்று தவிர எல்லாவற்றிலும் கலந்துகொண்டார். இவர் எழுதிய, பதிப்பித்த நூல்கள் வாயிலாக ஜப்பானில் தென்னிந்தியா பற்றி பரவலாகத் தெரிய வாய்ப்பேற்பட்டது.

'எங்கள் இந்தியா' என்ற பெயரில் அவரும் அவர் மனைவியும் சேர்ந்து எழுதிய நூல் பலராலும் விரும்பிப் படிக்கப்பட்ட ஒன்று. இந்தியா ஜப்பான் பண்பாட்டு உறவுகளை வளம்பெறச் செய்தமைக்காக இந்திய அரசு 2013-ல் பத்மஸ்ரீ பட்டம் கொடுத்தும் பெருமைப்படுத்தியது. ஆயினும் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே தென்னிந்திய வரலாற்றுக்கு அவர் செய்த பணியைப் பாராட்டி ஜப்பானிய அரசரிடமிருந்து இதுபோன்ற பட்டத்தைப் பெற்றார் என்பதையும் குறிப்பிட வேண்டும். கராஷிமா இறப்பதற்கு ஒரு மாதம் முன்புவரை தன் ஆய்வு வேலையைத் தொடர்ந்து செய்து வந்தார். கடைசிக் கட்டுரையைத் திருத்தி ஒரு சிறப்பு மலருக்கு அனுப்பிவிட்டு மருத்துவமனைக்குச் சென்றவர், வீடு திரும்பவில்லை. இரத்தப் புற்றுநோய் காரணமாக மருத்துவமனையிலயே நவம்பர் 26-ல் காலமானர். அப்போது அவர் வயது 82. மனைவி, மூன்று மக்கள், நான்கு பேரக்குழந்தைகள் உள்ளார்கள்.

தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர். ஆவணத்தில் அவர் பதிவுகள் உண்டு. கோயம்பத்தூரில் நிகழ்ந்த கருத்தரங்கில் நேரில் கலந்து கொண்டார் என்பதும் குறிப்பிடத்தக்கது. அவர் விட்டுச் சென்ற ஆராய்ச்சிப் பணியைப் புரிந்துகொண்டு அதை மேலெடுத்துச் செல்வதே அவருக்குச் செய்யும் பெரிய அஞ்சலியாக இருக்கும்.

'பழனி தேசியர் குடும்பத்தாற்கு நகரத்தாரின் தர்மசாசன அறப்பட்டங்கள்' 2015, கோவிலூர் ஆதீனம். விலை குறிக்கப்பட வில்லை. பக்கம் 64, சுவடி. படங்கள் 9 பக்கங்கள்.

பழனி வழிபாட்டுக் கால்நடைப் பயணம், காவடிப் பயணம் தமிழகத்தின் வரலாறு தெரிய 500 ஆண்டுகளாக நிகழ்ந்து வரும் பண்பாட்டு மரபாகும். பல்வேறு சமூகத்தினரும் இதனைத் தொடர்ந்து கடைப்பிடிப்பதால் பல சமூகத்தினரிடமும் பட்டயங்களும் பழனியில் அவர்களுக்கென்றே மடங்களும் உள்ளன. நத்தம் பகுதியில் தொந்திலிங்க நாயக்கர் மற்றும் பிற நாயக்கர்கள் அமைத்த கல் மண்டபங்களும் கல்வெட்டுகளுடன் உள்ளன. கால் நடையாக வழிபாட்டுப் பயணம் செய்பவர்களுக்கு இம்மடங்கள் இளைப்பாறவும் தங்கவும் உதவியுள்ளன.

இவ்வகையில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் பழனி பகுதிக்கு உப்பு வணிகம் மேற்கொண்டு வணிக இலாபத்தில் ஒரு பங்கு முருகனுக்கு ஒதுக்கி அதன் பெருக்கத்தில் பழனியில் அன்னதான மடம் ஏற்படுத்தி அம்மடத்தில் தெய்வசிகாமணி பண்டாரம் அவர் மனைவி பார்வதியம்மாளுக்கு உரிமைகள் வழங்கி, வழிபட்டு வந்துள்ளனர். இது தொடர்பான அறப்பட்டையங்கள் ஏற்கனவே 'நகரத்தார் அறப்பட்டயங்கள்' என்ற பெயரில் இரண்டு பதிப்புகள் வெளிவந்துள்ளன.

கோவிலூர் ஆதீனம் அதனை மீள் பதிப்பு செய்ததோடு கூடுதலாக தெய்வ சிகாமணி பண்டாரம் குடும்பத்தாரிடம் உள்ள பிற சுவடிப் பட்டயங்களைப் பெற்று முனைவர் பெருமாள், பேராசிரியை வள்ளி ஆகியோர் உதவியுடன் சுவடிகளின் படங்களோடு வாசகங்களையும் பதிப்பித்துள்ளது.

சகம் 1703 பொ.ஆ. 1781-ல் எழுதப்பட்ட இப்பட்டய ஓலைகள் அக்கால எழுத்து நடையிலேயே உள்ளன. தேசிகர்களுக்குத் தரப்படும் விருது, மரியாதை வாசகங்கள் அக்கால நடையில் பொதுவாகப் பல பட்டயங்களிலும் வருபவை. நாணயமாற்று வராகனில் குறிக்கப் படுகிறது. துறவிகள் பெட்டகக் கோயில்களில் வழிபடும் தெய்வங் களை எடுத்துச் செல்தல், நகரத்தாரின் கோயில்கள், உட்பிரிவுகள், நடைபயணத்தில் குன்றக்குடி ஆதீனத்தின் பங்கு, வேல் படியால் கால்ப்படி பஞ்சாமிர்தம் என்ற பல சமூகச் செய்திகள் இவற்றில் உள்ளன. மாதிரிக்காக வெளியிடப்பட்டுள்ள ஓலைகளின் படங்கள் தெளிவாக உள்ளமை படித்துப் பழக உதவுவதாக உள்ளது.

## டாக்டர் க.இராஜமோகன்

*தோற்றம் : 18.04.1973 மறைவு : 26.03.2016*



தமிழ்நாடு தொல்லியல் கழக ஆயுள்கால உறுப்பினரும், இராமநாதபுரம் மாவட்ட தலைமை அரசு மருத்துவமனையின் குழந்தைகள் பிரிவு தலைமை மருத்துவருமான டாக்டர் க.இராஜ மோகன் அவர்கள் 26.03.2016 அன்று சிவகங்கை மாவட்டம் மானாமதுரை அருகே நடந்த சாலை விபத்தில் காலமானார். இவர் 1997இல் தனது மருத்துவப் பணியை அழகன்குளம் அரசு ஆரம்ப சுகாதார நிலையத்தில் தொடங்கினார். அச்சமயம் அங்கு நடந்த அகழாய்வை பலமுறை நேரில் பார்த்து தொல்லியலில் தனக்கு இருந்த ஆர்வத்தை அதிகமாக்கிக் கொண்டார். இந்தியா முழுவதும் உள்ள வரலாற்றுத் தலங்கள் பலவற்றைத் தனது குடும்பத்தாருடன் நேரில் கண்டு வந்தவர். 2015இல் அழகன்குளத்தில் நடந்த அகழாய்வையும் தன் மகனுடன் நேரில் கண்டு அங்கு கிடைத்த தொல்பொருள்கள் பற்றி அறிந்துகொண்டார். அவருடைய மனைவியும் ஒரு மருத்துவர்தான். மதுரையில் மருத்துவத்தில் மேற்படிப்பு படித்துவரும் அவருடைய மனைவியை பார்க்க வாரம்தோறும் மதுரை செல்லும் போதெல்லாம் கீழடியில் நடைபெற்று வரும் அகழாய்வை காண்பதற்கு செல்வது அவர் வழக்கம். 26.03.2016 அன்றும் காலை 8 மணிக்கு இராமநாதபுரத்தில் இருந்து கீழடிக்கு சென்றுவிட்டு மனைவி மகனுடன் இராமநாதபுரம் திரும்பியபோது இரு கார்கள் நேருக்கு நேர் மோதியதில் சம்பவ இடத்திலேயே பலியானார். அவர் இறந்த நாள் அன்று தனது கடைசி நிமிடங்களை கீழடியில் நடந்துவரும் அகழாய்வை தெரிந்துகொள்வதில் தான் கழித்துள்ளார். 18.04.1973 அன்று உலக மரபு நாள் அன்று பிறந்ததாலோ என்னவோ இயற்கையாகவே அவருக்கு மரபு சார்ந்த விசயங்களில் மிகுந்த ஆர்வம் இருந்தது. அனைவரிடமும் எளிமையாகப் பழகக் கூடியவர். இராமநாதபுரம் மாவட்ட தொல்லியல் மற்றும் வரலாற்று மையம் தொடங்கியதில் முக்கியப் பங்கு வகித்தவர். இராமநாதபுரம் மாவட்டம் முழுவதும் உள்ள தொல்லியல் தடயங்களை வெளிக் கொணர மிகுந்த முனைப்புடன் செயல்பட்டவர். உத்தரகோசமங்கை அருகே கீழச்சீத்தையில் திருப்புல்லாணி பள்ளி ஆசிரியர் இராஜகுரு மற்றும் மாணவர்களுடன் இணைந்து தொடர்ந்து இரு நாட்கள் களமேற்பரப்பாய்வு நடத்தி ரோமானிய, சீன பானை ஓடுகள் மற்றும் பழம்பொருள்கள் ஆகியவற்றை கண்டெடுத்து சங்ககாலம் முதல் அவ்வூர் வெளிநாடுகளுடன் கொண்டிருந்த வணிகத் தொடர்பை வெளிக்கொண்டு வந்தார். அன்னாரின் மறைவுக்குத் தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

## தமிழகத் தொல்லியல் கழக
## 25-ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் - செயலர் அறிக்கை

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 25-ஆம் ஆண்டுக் கருத்தரங்கமும் ஆவணம் 26-ஆம் இதழ் வெளியீட்டு விழாவும், விருதுநகர் மாவட்டம், இராசபாளையம் நகரில் 18, 19.07.2015 ஆகிய நாட்களில் வணிகர் சங்கக் கட்டடத்தில் சிறப்பாக நடை பெற்றன. இந் நிகழ்வை பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையம் பொறுப்பேற்று நடத்தியது. தொடக்க விழா நிகழ்ச்சியில் தொல்லியல் கழகத்தின் தலைவர் முனைவர் அர.பூங்குன்றன் தலைமையேற்றார். அவர் தனது உரையில் இராசபாளையம் நகரில் இவ்விழா நடைபெறுவது இம்மண்ணின் மைந்தர் பன்மொழிப் புலவர் மு.கு.ஜெகநாதராஜா அவர்களின் பணிக்கும், புகழுக்கும் நாம் அளிக்கும் மரியாதை என்பதை நினைவு கூர்ந்தார். பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையத்தின் செயலாளர் முனைவர் சொ.சாந்தலிங்கம் வருகைதந்த பேராளர்களையும், சிறப்பு விருந்தினர்களையும் வரவேற்றுப் பேசினார். சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்ட திருச்சுழி சட்டமன்ற உறுப்பினரும், முன்னாள் பள்ளிக்கல்வி மற்றும் தொல்லியல் துறை அமைச்சரும், பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையத்தின் புரவலருமான திரு.தங்கம் தென்னரசு அவர்கள் தொல்லியல் கழகத்தின் கால் நூற்றாண்டு காலப் பணிகளைத் தான் அறிந்து வியந்ததையும், அதன் காரணமாகத் தன்னையும் இக்கழகத்தின் வாழ்நாள் உறுப்பினராக இணைத்துக் கொண்டதையும் நினைவு கூர்ந்து பேசினார். இந்நிகழ்வில் கலந்து கொண்ட கோவிலூர் ஆதீனத் தலைவர் சீர்வளர் சீர் மெய்யப்ப சுவாமிகள் விழாவை யொட்டி அமைக்கப்பட்டிருந்த வரலாற்றுக் கண்காட்சியைத் திறந்து வைத்துச் சிறப்புரை ஆற்றினார். நிறைவாக கழகத்தின் செயலர் முனைவர் இல.தியாகராசன் நன்றிகூற தொடக்க விழா இனிதே நிறைவுற்றது.

அதன்பின் கருத்தரங்க அமர்வுகள் தொடங்கின. கருத்தரங்கு கட்டுரையாளர்கள் மற்றும் கட்டுரைகள்

*அமர்வு : 1 அமர்வுத் தலைவர் : திரு. கி.ஸ்ரீதரன்*

| | | |
|---|---|---|
| 1 | த.ரமேஷ் | அனந்தமங்கலம் அச்சரப்பாக்கம் பாறைச் சிற்பங்கள் |
| 2 | சோ.திருநாவுக்கரசு | பக்தி இலக்கியங்களும் வரலாற்று ஆவணமே |
| 3 | கே.அமர்நாத் ராமகிருஷ்ணன் | திருப்பரங்குன்றம் தாலுக்கா – கீழடி அகழாய்வு (Archaeological Excavation at Keeladi) |
| 4 | கி. ஸ்ரீதரன் | A Trip to Jaffers Petrogliph |
| 5 | தமிழாதன் | கற்குறியீடுகளில் ஆமை ஓவியம் |

*அமர்வு : 2 அமர்வுத் தலைவர் : திரு.பொ.ராஜேந்திரன்*

| | | |
|---|---|---|
| 1. | ஆர்.மகேசுவரன் | பிரித்தானியருக்கும் சிங்கள பிரித்தானியருக்கும் இடையிலான கண்டி ஒப்பந்தத்தின் தமிழ் கையெழுத்துக்களை ஆவணப்படுத்துதல் |
| 2. | சி.ஆர்.காயத்ரி | Recent Archaeological findings in Thiruvarur Region |
| 3. | சி.எம்.ஜெசீரா | Megalithic landscape : recent exploration in Periyar valley - Kerala |
| 4. | ச.மா. இரத்னவேல் | இருப்பைக் குடிகிழவன் – 9–ஆம் நூற்றாண்டு பொறியாளர் |
| 5. | தி.லே.சுபாஷ் சந்திரபோஸ் | ஆசிரியம் |

**அமர்வு : 3 கோயிலூர் ஆதீனம் அறக்கட்டளைச் சொற்பொழிவு அமர்வுத் தலைவர் : சு.இராஜகோபால்**

| | | |
|---|---|---|
| 1. | வல்லிபுரம் மகேசுவரன் | வேதாரண்யம் யாழ்பாணத்திற்கிடையிலான பண்பாட்டு உறவுகள் |

19.7.2015 ஞாயிற்றுக்கிழமை

**அமர்வு : 4 அமர்வுத் தலைவர் : முனைவர் வள்ளியம்மாள்**

| | | |
|---|---|---|
| 1. | வி.பி.யதீஷ்குமார் | திருச்செங்கோடு வட்டாரத் தொல்லியல் |
| 2. | G. பால்துரை | வெள்ளாற்றுப் பள்ளத்தாக்கில் புதியத் தொல்லியல் கண்டுபிடிப்புகள் |

| | | |
|---|---|---|
| 3. | ச.ரவி | தென் கொங்கு மற்றும் மேல் கொங்கு பகுதியில் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள் – குறியீடுகளும் தொல்தமிழ் (பிராமி) எழுத்துக்களும் |
| 4. | சா.பாலகிருஷ்ணன் | ஆளுருட்டி மலைப்பாறை ஓவியங்கள் |
| 5. | கீரைத்தமிழன் | உலக எழுத்துருவாக்கத்தில் தமிழின் பங்கு |

**அமர்வு : 5 அமர்வுத் தலைவர் : திரு.பாலச்சந்திரன்**

| | | |
|---|---|---|
| 1. | சா.கிருஷ்ணமூர்த்தி | திருகடவூர் கட்டனச் செட்டிச் செப்பேடு |
| 2. | P. Ramesh | Communication and thoughts in Rock paintings - Discussion of Rock Paintings in Dindugul district. |
| 3. | கே.பன்னீர்செல்வம் | தறியாளர்களின் தறிகெட்ட நிலை |
| 4. | மணிகண்டன் | கீழ்க்கரந்தையில் கண்டறியப்பட்ட சமணர் சிலை |
| 5. | வீரராகவன் | விழுப்புரம் மாவட்டத் தொல்லியல் சான்றுகள் |
| 6. | வீரராகவன் (திருமதி மங்கையற்கரசி வீரராகவனுக்கு பதிலாக) | தென்னலூர்க் கல்வெட்டுகள் |

பேராளர்கள் திருவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயிலைப் பார்வையிட ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆய்வாளர்கள் பலரும் கலந்துகொண்டு அங்குள்ள கல்வெட்டுகளை நேரில் வாசித்துப் பழகினர். வழியில் உள்ள பராங்குசப் பேரேரியில் அமைந்துள்ள ஏழு கண்மடையையும், இராசராசசோழனின் கல்வெட்டையும் கண்டு வியந்தனர்.

கருத்தரங்கிற்கு முன்னதாக ஜூலை 15, 16, 17 - 2015 தேதிகளில் இராசபாளையம் இராஜூக்கள் கல்லூரி வரலாற்றுத் துறை மாணவர்கள் 40 பேர்களுக்குக் கல்வெட்டுப் பயிற்சி நிகழ்த்தப் பட்டது. இதில் முனைவர் எ.சுப்பராயலு, அர.பூங்குன்றன், சு.இராசகோபால், சொ.சாந்தலிங்கம் ஆகியோர் கலந்து கொண்டு பயிற்சி அளித்தனர். 17.7.2015 அன்று பிற்பகலில் பயிற்சி பெற்ற மாணவர்களை அருகிலுள்ள சோழபுரம் கோயிலுக்கு அழைத்துச் சென்று களப்பயிற்சி அளிக்கப்பட்டது. இப்பயிற்சிக்கான முழு ஒத்துழைப்பையும் கல்லூரி நிருவாகத்தினர் செய்து, வாகன வசதியும் அளித்தனர். கருத்தரங்கின் முதல் நாளில் கல்லூரி மாணவ,

மாணவிகளுக்கான கல்வெட்டு படித்தல் போட்டி நடத்தப்பட்டது. 25-க்கும் மேற்பட்ட மாணவ, மாணவிகள் ஆர்வத்துடன் கலந்து கொண்டு படித்துப் பரிசுகளும், சான்றிதழ்களும் பெற்றனர்.

18.7.2015 அன்று இரவு 7.00 மணி அளவில் கழகச் செயற்குழுக் கூட்டம் கூடி அடுத்த மூன்று ஆண்டுகளுக்கான புதிய நிருவாகிகளைத் தேர்வு செய்தது. 19.7.2015 மாலை 4.00 மணியளவில் பொதுக்குழு கூட்டமும் நிறைவு விழாவும் நடைபெற்றன. முனைவர் எ.சுப்பராயலு அவர்களும், புதிதாகத் தேர்வு செய்யப்பட்ட நிருவாகிகளும் தலைமையேற்றனர். பரிசும், பயிற்சியும் பெற்ற மாணவர்களுக்குச் சான்றிதழ்களும், பரிசுகளும் வழங்கப்பட்டன. இரண்டு நாள் கருத்தரங்கையும் சிறப்பாக ஏற்பாடு செய்த பாண்டிய நாட்டு வரலாற்று மையத்தின் புரவலர், தலைவர், செயலர் உள்ளிட்ட அனைவருக்கும் பாராட்டும், நன்றியும் தெரிவிக்கப்பட்டது. கழகத்தின் செயலர் முனைவர் இல.தியாகராசனின் நன்றியுரையுடன் கருத்தரங்கம் இனிதே நிறைவுற்றது.

நாள் : 10.07.2016

இல.தியாகராசன்,
செயலர்

## ABSTRACTS OF THE ARTICLES

**C. Santhalingam**, Madurai.

Prof. G. Vijaya Venugopal

1. Perunagar. Virapandyan Regnal year 5. CCE 13. Refers to the establishment of six lamps by one Kalikakkunayakan Irumpaikilan, a resident of perunagar to the portrait kakku Nayakan which was installed by himself. The Sivabrahmans of this temple got 60 panams for the maintenane of these lamps.

2. Same temple. Rajaraja Chola II. Regnal year 25. CE 1171 Endowment of Four gold coins with the Sivabrahmanas by one Perungan Devapperumal, a resident of Maharal pathi for lighting 4 perpetual lamps.

3. Same temple. Sundarapandya Date lost. Registers a land donation to the temple by one Sekandi Andi alias Vanavatharaiyan.

4. Same temple. Sambuvaraya period. May be 13 CCE. It seems to be a royal order of one Sambavaraya which enables the sthanikas of the temple to collect certain taxes from the handloom weavers and to conduct pankuni festival and other temple activities.

5. Same temple. May belong 18 CCE. Records the one fifth amount of tax remission to the Kaikkolas of Perunagar madavilakam by the temple authorities, when Srinivasa Iyyer was incharge of the administration.

6. Same temle. King Nanthivarma pallava. Alakiya Pallavan an official of Nanthivarman built the garbhagraha and the mantapa.

7. Same temle. Sambuvarayar. (Vijayakanta gopala period). It is a royal order of Sambuvarya, Refers to the celebration of Vaikasi Visaka festival with the previous donations and its interast due.

8. Same temple. kali age 5012. CE 1911. Donation of land by one Thangavelu son of Pachchaiyappa Muthali for the pujas and offerings on Karthikai days for the Murugan shrine.

9. Same temple. Vijayanagara. Bukka Sakam 1320. CE1398. Registers an accord with presence of Thipparasar (chief) by the Alaththur and Thandarai villagers regarding a irrigation dispute.

10. Same temple. Kulothunga III. Regnal year 25. CE 1203. Records the donation of gold by one Sirramur Udaiyan Garuta vahanan, a resident of Perunagar for lighting a perpetual lamp.

11. Same temple. Later Pallava Ko - Perunchingan Regnal year 19. Donation of one hundred and forty kasus by one Nangaiyandal wife of Emankilan for the construction of one cornice in northern side of the temple.

12. Same temple. Vijaya Nakara King Vira - Ariyanna Udaiyar Regnal year 5. Records the partisons of lands between ukkal Nattar and Four Bhattas and their sales.

13. Same temple. Vijaya Nakara King Achchutha Deva Maharaja - Sakam 1456. CE 1534. Some portions of the parasasthi is left. Subject matter is lost.

14. Same temple. Name lost. Donation of perpetual lamps by one Kalingarayar, a kaikola of Perunagar who also installed the Theeravinai Theertha Pillaiyar Ekampara Devar.

15. Same temple. Vijaya Nagara Achchutha Devar. saka 1462 CE 1540. Sthanikas of Pitchadanar temple collected 50 Panams from certain people and installed day light lamps.

16. Same temple. Vijaya Nagara Ariyanna Udaiyar Records the sale deed of certain lands to one Devapperumal, a resident of Karumuparru in Pennaikkarai Nadu at Naduvil mandalam by the sabha of Vikiramaparanachaturvedhi mangalam.

17. Same temple. Vijaya Nagara Sathasivrayar. Sakam 1485 CE 1563. Registers an accord to cultivate certain lands of Perunagar sthanikas to the kaikolas of Thirumadaivilakam.

18. Same temple. Vijayanagara Krishna Devaraya Saka 1446. CE 1524. Prasasthi portion alone exists purpose of the record lost.

19. Same temple. Vijaya Nagara. Ariyanna Udaiyar Saka 1304. CE 1382. Records the sale of land to certain Brahmanas and one Kumaran Sathan Sanapathi Pillai by the Sabha of Ukkal alias Vikiramaparana chatur vedhi mangalam.

20. Same temple. Rajaraja II. Regnal year 25. CE 1171 Records the sale deed of certain lands to one Boyan Perunga Devaperumal of ukkal by the Sabha of same chaturvedhi mangalam.

21. Same temple. Vijayanagara Achuthappa Devar. Sakam 1456. CE 1534. Establishment of an endowment for the offerings of food kasi and firewood by one Thimmarasar a resident of Arungan Padi, a devadhana of Brahmisvara temple.

P.Velayutharaja, Thiruppathur Inscription. CE17C. Records the land donation by venkala Nayaka for lighting a lamp at Arumuga Pillaiyar temple which was built at car street by Arumuga Mudhali and Nagathapandaram servants of Thiruthalinatha temple.

a. K. Uththiradam & P.Boopalan. Rayanallur Inscription. 18 CCE. Records an endowment for the sacred bath of the God in memory of Makam merumuniyammal.

b. Same village. 18CCE. Seems to be a memorial stone planted on the burial of a saiva ascetic and written as Thillai Muthur Adiya Thiruvadi (Nataraja).

K.Uththiradam & P.Boopalan, Kilpasar Inscription. 17CCE. Endowment for lighting a day light lamp to Kariyamanicka Perumal and Kamalavalli Nacchiyar at Adalampakkam temple.

K.Uththiradam Vandivash. Digambara Jain choultry inscription. saka 1888. CE1917. (year does not corresponds) Donation of a storied choultry building by one T.P. Poorana Chandra Nayinar for the stay of Jaina pilgrims.

T.Sundaram Avinasi lingam Palayam Inscription Kongu Pandya virapandya. Regnal year 14. CE1279. Records the donation of paddy for food offerings by the urar of Parparpoondi alias Virarajendra Nallur.

Alathur Incription 13CCE. Records certain donations made by people belonging four different kudies.

Kanakkam Palayam incription. Kongu chola kulothunga II CE 1219. Records certain tax donations by the kanmalas of kulamanickam alias Akkasalai Nallur in Elukarai Nadu.

Samalapuram records CCE13. Fragments. Records certain donations made by the nattars of Vayaraika Nadu.

a. Naduvacheri incription. Kaliyaga 4992 CE 1891. Records the donation of drinking water well, a concreet House and a compound wall for the temple by one Muruganatha Chetty son of Nallasiva vira chetty.

b. Same place CE1936. Installation of a watershed and load bearing stone in memory of a pregnant lady by one Irullapa Nadar.

